Rs. 2/-

பசிபிக் சமுத்திரத்தைக் கட்டுமரம் ஏறிக்
கடந்து சென்ற ஓர் அற்புதக் கதை

# கோன்-டிகி





BY THOR HEYERDAHL

பதிப்புக் கழகம், சென்னை

# கோன்-டிகி




தார் ஹெயர்டால்

தமிழாக்கம் :
கே. எஸ். நாகராஜன், எம். ஏ.

ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம் :: சென்னை-1.

முதற் பதிப்பு: அக்டோபர் 1958—5000.




THE KON-TIKI
EXPEDITION

*By*

THOR HEYERDAHL

*Published by*

**GEORGE ALLEN & UNWIN LTD.,**
Ruskin House—Museum St.,
:LONDON.




தென்மொழிகள் புத்தக டிரஸ்டு
ஆதரவில் பதிப்பிக்கப்பட்டது.

[ விலை ரூ. 2/-

அச்சிட்டோர்:
புரோக்கிரசிவ் அச்சகம், சென்னை-1.

## முன்னுரை

சில சமயங்களில் மனிதனுக்கு வாழ்க்கையில் புதியதொரு அனுபவம் ஏற்படுகிறது. சற்றும் எதிர்பார்க்க முடியாத நிலையில் தான் இருப்பதாக அவன் உணருகிருன். படிப்படியாக முன்னேறித்தான் ஒருவன் இந்நிலையை அடைகிருன். ஆயினும், திடீரென்று விழிப்பு ஏற்படும்பொழுது, தான் முன்னிருந்த நிலையில் தற்போதைய நிகழ்ச்சிகளைப் பற்றிக் கனவில் கூட நினைத்திருக்க முடியாதல்லவா என்று தோன்றுகிறது.

ஐரோப்பாக் கண்டத்தின் வடமேற்கே நார்வே என்ற நாடு உள்ளது. அதில் வாழும் மக்கள் நார்வீஜியர் எனப்படுவர். ஒரு நாள் நார்வீஜியர் ஒருவர் பசிபிக் கடலில் கட்டுமரத்தில் மிதந்துகொண்டிருந்தபோது மேற்கூறியவாறு புதிய அனுபவம் ஒன்று ஏற்பட்டது. அவர் பெயர் [1] தார் ஹெயர்டால் என்பது. அவர் மனித நாகரீகங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டவர். தென் அமெரிக்காவில் முன்னொரு காலத்தில் வாழ்ந்த பழங்குடிகளுக்கும் பசிபிக் சமுத்திரத்தின் நடுவே இருந்த தென் கடல் தீவுகளில் வசித்தவர்களுக்கும் நாகரீகத்தில் நெருங்கிய தொடர்பு இருந்ததாக அவர் நம்பினுர். தென் அமெரிக்காவின் மேற்குக் கரை ஓரத்தில் பெரு என்ற

1. Thor Heyerdahl

நாடொன்று உண்டு. அங்கு நெடுங்காலத்துக்கு முன் வாழ்ந்தவர்கள் [1] இங்கா என்னும் சாதியார். அவர்களுக்குமுன் அங்கிருந்த அமெரிக்க இந்தியரை விரட்டிவிட்டு, அவர்கள் பெரு நாட்டை ஆக்கிரமித்தனர். துரத்தப்பட்ட இந்தியர்கள் தம் தலைவனுடன் கட்டு மரங்களில் ஏறிக்கொண்டு பசிபிக் சமுத்திரத்துக்குள் சென்று மறைந்துவிட்டதாகச் செய்தி உண்டு. அத்தலைவனின் பெயர் [2]கோன்-டிகி என்பது. இச்சொற்றொடரின் பொருள் 'சூரிய புத்திரன்' என்பதாகும். கோன்-டிகியின் உறவினர்தான் தென் கடல் தீவுகளில் வந்து குடியேறியவர்கள் என்பது தார் ஹெயர்டாலின் கட்சி. இதை நிரூபிக்கப் பலவிதமான சான்றுகளை அவர் சேகரித்தார். ஆயினும், உலகமக்களின் நாகரீக வகைகளை ஆராய்ந்து அறிந்த பலர் அவருடைய சொல்லை நம்ப மறுத்தனர். கடலில் 4,000 மைல்களுக்கும் மேற்பட்ட தூரத்தை வெறும் கட்டுமரங்களைக் கொண்டே கடக்க முடியும் என்பதை ஒருவருமே நம்பவில்லை. [3] பால்ஸா என்ற ஒரு வகை மரத்தின் அடித் தண்டுகளைக் கயிறுகளால் பிணைத்துச் செய்யப்பட்ட கட்டுமரத்தில் அதிக தூரம் செல்ல முடியாது என்பது பெரும்பாலோருடைய கட்சி. ஆனால், இந்தக் கருத்தைப் பொய்யாக்க விரும்பினர் ஹெயர்டால். புத்தகங்களைப் படித்துப் பார்த்து, வேண்டிய விவரங்களைச் சேகரித்துக்கொண்டு பழங்காலத்தில் இருந்ததைப் போன்ற கட்டுமரம் ஒன்றைத் தயாரித்தார். தன் நண்பர்களுடன் அதில் ஏறிக்கொண்டு, பசிபிக் கடலைத் தாண்டும் முயற்சியில் வெற்றியும் கண்டார். 'கோன்-டிகி' என்று பெயரிடப்பட்ட அக்கட்டுமரத்தைத் தயார் செய்வதில் அவருக்குப் பேருதவி புரிந்து, பயணத்தின்

---

1. Inca 2. Kon-tiki 3. Balsa

முடிவுவரை அவருடன் ஒத்துழைத்தவர்கள் ஐவர் ஆவர்.

[1] நுட் ஹாக்லாண்ட், [2] எரிக் ஹெஸ்ஸல்பர்க், [3] டார்ஸ்டைன் ராபி, [4] ஹெர்மன் வாட்ஸிங்கர், [5] பெங்ட் டானியல்ஸன் என்பன அவர்களுடைய பெயர்கள். அவர்களுள் முதல் நால்வரும் நார்வீஜியர்கள். பெங்ட் என்பார் ஸ்வீடன் தேசத்தவர்.

பெரு நாட்டின் கலாவோ துறைமுகத்தில் தொடங்கிய இக் கட்டுமரப் பயணம் பசிபிக் கடலின் நடுவில் உள்ள [6] ராரோயியா என்னும் பாறையில் முடிவுற்றது. கோன்டிகி பயணம் வெற்றிகரமாக முடிந்ததாலேயே தன்னுடைய கொள்கை முற்றிலும் நிரூபிக்கப் பட்டதாகாது என்று தார் ஹெயர்டால் ஒப்புக்கொள்கிருர். ஆனுல், வேறு சில விஷயங்கள் நிரூபிக்கப்பட்டன. பால்ஸா மரத்தின் சிறப்பு வெளியாயிற்று. விஞ்ஞான அறிவு நிரம்பப் பெருமலே பண்டைக்கால மனிதர் கடல்களைக் கடக்கும் முயற்சியில் வெற்றி கண்டனர். காரணம், கடற்பயணத்தின் வெற்றி, காற்றையும் கடல் நீரோட்டத்தையும் பொறுத்ததே அன்றித் தொலைவைப் பொறுத்தது அல்ல. மேலும், தான் உண்மை என்று நம்பும் ஒரு கொள்கையை நிரூபிப்பதற்காக எவ்விதச் சாகசச் செயலுக்கும் துணிந்துவிடும் ஒரு வற்ருத சக்தி மனிதத் தன்மைக்குள் தேங்கிக் கிடக்கிறது என்னும் பேருண்மையும் இதனுல் புலனுயிற்று. கலாவோ துறைமுகத்தில் பயணம் தொடங்கிய சமயத்திலிருந்து நிகழ்ந்தனவற்றை எல்லாம் ஹெயர்டாலே கூறுவதுபோல் அமைந்துள்ளன பின்வரும் பகுதிகள்.

---

1. Knut Haugland 2. Eric Hesselberg 3. Torstein Raaby 4. Herman Watzinge 5. Bengt. 6. Raroia.

இத் தமிழாக்கத்துக்கு எனக்கு உறு-துணையாயிருந்து பேருதவியளித்த நண்பர் திரு. எல். ஆர். கணேசன், எம். எஸ். ஸி. அவர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றி என்றும் உரித்தாகுக.

கே. எஸ். நாகராஜன்

## நூன்முகம்

தென் மொழிகள் புத்தக டிரஸ்டின் ஆதரவில் முதலில் வெளியாகும் நூல்கள் தென்னிந்திய மக்களுக்கு அளிக்கப்படுகின்றன. இந்த நிலையம் 'போர்டு' நிலையத்தாரின் நன்கொடையால் உருவாகி வளர்ந்தது. இதன் நோக்கம் தென்னிந்திய மொழிகளாகிய தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகளிலும் அறிவும், கலையும் நிறைந்த நூல்களைக் குறைந்த விலைக்கு வெளியிடுவதை ஆதரிப்பதே யாகும். இந் நோக்கத்தை நிறைவேற்ற 'போர்டு' நிலையத்தாரும் தென்னிந்தியப் பல்கழகத் துணை வேந்தர்கள் எழுவரும் சேர்ந்து சிந்தித்து, ஏராளமான பல்வகையான சிறந்த நூல்களைக் குறைந்த விலையில் விற்பனை செய்ய இந்த ஸ்தாபனத்தை நிறுவினர். இதற்கென நிறுவப்பட்ட மூன்றுண்டுத் திட்டத்தின் முதல் வெளியீடு இது. கடுநடையுடைய நூல்களை வெளியிட மேற்கொள்ளவில்லை. ஆங்கிலக் கல்வி இல்லாத படித்த பாமரனுக்கும் பயன்படுமாறு எளிய நடையில், இன்பமும் பயனும் தரும் புத்தகங்களைத் தேர்ந்தெடுத்தலே இந்த ஸ்தாபனத்தின் இலட்சியமாகும்.

இலக்கிய வளம் நிறைந்த மூல நூல்களைப் பதிப்பித்தல், கலை, விஞ்ஞானப் புத்தகங்களை வெளியிடல், உலகத்திலேயுள்ள மற்ற மொழி நூல்களை மொழிபெயர்த்தல், ஆகியவையே இந்த ஸ்தாபனம் செய்ய விரும்பும் பணிகளாகும்.

'மலிந்த விலையில் உயர்ந்த நூல்'—இதுவே தென்மொழிகள் புத்தக டிரஸ்டின் இலட்சியம். இந்த நோக்கம் எவ்வளவு தூரம் இம் முதல் வெளியீட்டால் நிறைவேறியிருக்கிறது என்பதைப் பொதுமக்கள்தான் சொல்லல் வேண்டும். இம் முயற்சியின் பயனும் வெற்றியும் பத்தாண்டுகளுக்குப் பிறகே வெளிப்படலாம். ஆனால், இத் திட்டம் உண்மையான கற்பனை நோக்குடையவர்களுக்குப் புலனு-

கும். இதனுல் விளையக் கூடியன எண்ணிறந்தன. மலிவான இப் புத்தகங்களைத் திறமையான வகையில் தென்னிந்தியா முற்றிலும் பரப்பினுல், இவை பட்டித் தொட்டிகளிலுள்ள மக்கள் கரங்களிலும் தவழும். அப்போது, இந் நாட்டின் உயிர்நாடி போன்ற மக்களின் வாழ்வில் இன்ப ஒளி வீசும். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழி-களுக்காகவே இந் நிலையம் ஏற்படுத்தப்பட்டதற்குத் தக்க காரணங்கள் உண்டு. ஏனெனில், இவை தென் நாட்டு மொழிகள். 'தக்கணம்' என்பது பூகோள நூற்படி, பழைய இந்தியாவிலே, விந்தியத்தின் தென் பாகமாகும். பண்பாட்-டின்படி இந் நான்கு மொழிகளையோ, அவற்றின் கிளை மொழிகளையோ பேசும் மக்களைக் கொண்ட தேசத்தைக் குறிக்கும். இம் மொழிகள் நான்கும் ஓரினத்தன என்பதில் ஐயமில்லை. 'திராவிடம்' என்ற அடைமொழியைச் சேர்க்கத் தயங்குகிறேன். ஏனெனில் அது, 'மொழி', 'இனம்' என்ற பொருளில் கொள்ளப்படாமல், கருத்து வேற்றுமை, அரசியல் என்ற நோக்குடன் பயன்படுத்தப்படுகிறது. இம் மொழிகளிடையே காணப்படும் ஒருமைப்பாடு தவிர, இம் மொழி பேசும் மக்களிடையேயும் காணப்படும் கலாச்சாரம் இப் பகுதியை இந்தியாவின் ஏனைய பகுதியினின்றும் தனித்-துக் காட்டுகிறது. சாதாரணமாக நாம் அறிந்துகொள்ளும் கர்நாடக சங்கீதமும் இதைத் தெளிவுபடுத்தும். அவ்வாறே இப் பகுதிகளில் உள்ள சிற்பக் கலையும், கட்டிடக் கலையும் தனிப் பெருமை யுடையன. மக்களின் பழக்க வழக்கங்கள், சடங்குகள், விழாக்கள், முதலியவற்றிலும் குறிப்பிடத்தக்க ஒருமைப்பாட்டைக் காண்கிறோம். இத்தனிச் சிறப்புகள் இந் நூலகத்தாரின் வெளியீடுகளால் பிரதிபலிக்கும் என நம்புகிறேன். அத்துடன் இந்தியப் பண்பாட்டை விளக்கும் நூல்களையும், பிற நாட்டு மொழிகளில் உள்ள நூல்களின் மொழிபெயர்ப்புக்களையும் வெளியிடுவதன் மூலமாக, குறு-கிய வேறுபட்ட மனப்பான்மை தவிர்க்கப்படும்.

பி. வி. ராஜமன்னுர்

# தோற்றுவாய்

உலக மக்கள் பெரும்பாலும் அமைதியை விரும்புவர்; எதிர்ப்புக் குறைவான வழியையே மேற்கொள்வர். பழங்காலந்தொட்டு அவர்கள் குடியேறியுள்ள இடங்களைப்பற்றி ஆராய்ந்தால், அவை யாவும் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களை நிரம்ப உடையனவாகவும் இயற்கையின் தொல்லைகள் மிகக் குறைந்தனவாயும் உள்ளனவே என்பது தெரியவரும்.

ஆனால், தொலைவில் உள்ள, எளிதில் சென்றடையமுடியாத, அபாயங்கள் நிறைந்த சில பகுதிகளிலும் மக்கள் வாழ்கின்றனர். கடலையோ நிலத்தையோ நெடுந்தொலைவு கடந்து, அபாயங்களைப் பொருட்படுத்தாது நெடுநாள் உழைத்த பின்னரே அவ்விடங்களுக்கு மக்கள் சென்றிருக்கக்கூடும். அத்தகைய பிரயாணங்களை அவர்களே விரும்பி மேற்கொண்டிருக்கலாம் அல்லது சந்தர்ப்பங்கள் சதிசெய்து அவர்களை விரட்டியிருக்கலாம். இத்தகைய பிரயாணங்களைப் பற்றிய செய்திகள் பல உலக வரலாற்றில் காணக் கிடைக்கின்றன. தென் அமெரிக்காவிலிருந்து சுமார் 4,300 மைல் தொலைவிலுள்ள பாலினீசியத் தீவுகளில் வாழும் பாலினீசியரைப்பற்றி எண்ணும்போது, எத்தகைய தடைகளையும் தொல்லைகளையும் மீறி நன்முயற்சியில் ஈடுபட மனித உள்ளத்துக்கு உறுதி உண்டு என்பது தெரிய வருகிறது.

பாலினீசியர் என்போரும் தென் அமெரிக்காவில் வாழும் இங்காக்கள் என்போரும் ஒரே இனத்தவர் என்பது இப்போது அறியக் கிடக்கிறது. இங்கா மன்னரின் ஆட்சியில் ஆண்டீஸ் மலைப் பள்ளத்தாக்குகளில்—கடல் மட்டத்துக்குமேல் பத்தாயிரம் முதல் பதினான்கு ஆயிரம் அடி உயரத்தில்—நீர்ப் பாய்ச்சி வேளாண்மை செய்யப்பட்டது. இவ்வேளாண்மையின் அடிப்படையில் எழுந்தது ஒரு சிறந்த நாகரீகம்.

மனித உருவங்களைப் போன்று கற்சிலைகளை அமைப்பதிலும், மலைச்சரிவுகளில் பிரமிட்டுகள் எனப்படும் கோபுரங்களைச் செதுக்கி உருவாக்குவதிலும் இங்காக்கள் திறம்பெற்றிருந்தனர். அவர்கள் உழுது பயிரிட்டு வந்த பீடபூமிப் பகுதிகளும், கல்லால் ஆன வாசல்களும் ஆண்டீஸ் பகுதியில் இன்றும் காட்சி அளிக்கின்றன. ஆனால், பசிபிக் சமுத்திரத்தைக் கடக்கத் தகுந்த கட்டுமரங்களை அமைத்தது அவர்களுடைய சாதனைகளில் முதலிடம் பெறுவதாகும்.

தென் அமெரிக்காவின் மேற்குக் கடற்கரைக்கு முதன் முதல் வந்த ஐரோப்பிய மக்கள் ஸ்பெயின் நாட்டவர். அவர்கள் வந்திறங்கியபோது ஆண்டீஸ் பகுதியில் முன்னர் கூறப்பட்ட சிறந்ததொரு நாகரீகம் தழைத்திருந்தது. ஸ்பானியர் அங்கிருந்த மக்களைத் தோற்கடித்து, அப்பகுதிகளைத் தம் வசமாக்கிக் கொண்டனர்.

கிழக்குப் பசிபிக்கில் சிதறிக்கிடக்கும் தீவுகளில் இப்போது பாலினீசியர் வாழ்கின்றனர். அவர்களுள் காணப்படும் ஒற்றுமைக்கு அடிப்படையாய் உள்ளது அவர்களுடைய மொழியேயாகும். வெவ்வேறு தீவுகளில் வசித்தாலும், அனைவரும் பாலினீசிய மொழியையே பேசுகின்றனர். தம் முன்னோரை வழிபடும் வழக்கம் அவர்களிடம் உண்டு. இறந்துபோன வீரரை மறவாது அவர்கள் நினைவிற்கொண்டு மரியாதை செலுத்துவர். தம் வமிசாவளியை ஞாபகம் வைத்துக்கொள்ள அவர்கள் கையாளும் முறை வியத்தற்குரியது. முறுக்கேறிய ஒரு கயிற்றில் கணக்குப்பார்த்துச் சில முடிச்சுக்களைப் போட்டுவிடுவர். அவற்றைக்கொண்டு எல்லாச் செய்திகளையும் பிறர் அறியச் செய்வர். வெவ்வேறு தீவுகளிற் கிடைக்கும் கயிறுகளைக்கொண்டு வந்து, அவற்றிலுள்ள முடிச்சுக்களை ஒப்பிட்டுப்பார்த்தால் அவை யாவும் ஒன்று போலவே அமைந்திருப்பது தெரியவரும். ஆதி பாலினீசியர் தென் அமெரிக்காவை விட்டுக் கிளம்பிப் பசிபிக் தீவுகளில் குடியேறியது ஏறத்தாழ கி. பி. 500-இல் என்று துணிந்து கூறலாம். அதற்குப் பின்னும் அவ்வப்போது மக்கள் கூட்டங் கூட்டமாய்ச் சென்று அங்குக் குடியேறி வந்தனர்.

கடைசி முறையாக மக்கள் அங்குக் குடியேறியது கி. பி. 1,100-இல் என்று கொள்ளலாம்.

இச்சாதனைகளில் எல்லாம் முக்கியமான பாகம் பசிபிக் சமுத்திரத்தைக் கடத்தலே ஆகும். பழங்கால அமெரிக்கருக்குக் காற்றுக்களைப் பற்றியோ நீரோட்டங்களைப் பற்றியோ ஆழ்ந்த அறிவு இருந்திருக்க முடியாது. ஆனால், அநுபவத்திலிருந்து அவர்கள் சில முக்கியமான உண்மைகளை அறிந்திருக்கலாம். உதாரணமாக, தென் அமெரிக்கக் கரையை ஒட்டிய கடல் நீரோட்டங்களின் போக்கும் திசையும் அவர்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நம்ப இடமுண்டு. பசிபிக் நீரோட்டங்களால் உந்தப்பட்டு, மேலெழும் சக்திமிக்க கட்டு மரங்களில் சென்றால், அபாயங்களிலிருந்துத் தப்பி, பசிபிக் சமுத்திரத்தைக் கடக்கலாம் என்று அவர்கள் அநுபவ மூலமாய்க் கண்டறிந்தனர். தென் அமெரிக்காவிலிருந்து கிளம்பிய எல்லோரும் அதிருஷ்ட வசமாய்ப் பசிபிக்கைக் கடந்து விட்டனர் என்றோ, புதுக் குடியேற்றத்தைச் சென்றடைந்தனர் என்றோ கூறமுயாது. ஆனால் ஒன்று மட்டும் உறுதி. அவர்கள் எல்லோரும் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்கள்; அருஞ் செயல்களைச் செய்ய உறுதி கொண்டவர்கள்; எத்தகைய அபாயங்களாலும் தளராமல் புது நாடுகளைக் கண்டுபிடித்தே தீருவது என்ற திடமனம் பெற்றவர்கள்.

இன்று பசிபிக் தீவுகளில் பாலினீசியர் வசிப்பதிலிருந்தே அவர்கள் சாதாரண மக்கள் அல்லர் என்பதும், (எக்காரணம் பற்றியாயினும்) பசிபிக் சமுத்திரத்தை வெற்றிகரமாகக் கடந்துவிட்டனர் என்பதும் தெளிவு.

கி. பி. 1,950-இல் நடந்த கோன்டிகி பயணத்திலிருந்து பழங்கால பாலினீசியரின் சாதனையை ஒருவாறு அறிந்து கொள்ள முடிகிறது. அப்பயணத்திற்கு முக்கிய காரணமாய் இருந்தவர் தார் ஹெயர்டால் என்பவர். அவர் நார்வே நாட்டினர்; இயற்கை சாஸ்திர வல்லுநர். பாலினீசியர் முதன் முதலில் தென் அமெரிக்காவிலிருந்து சென்று பசிபிக் தீவுகளில் குடியேறியவர்கள் என்னும் கொள்கையை நிரூபித்துக் காட்டிய பெருமை அவரையே சாரும். மேலும், கூரிய மதியும், உயர்ந்த நோக்கமும்,

நண்பரை ஊக்குவித்துச் செயற்கரியச் செய்யத் தூண்டும் திறமையும் மிக்கவர் அவர். சரித்திரம், மானிடவியல் (Anthropology) ஆகிய துறைகளில் ஆராய்ச்சி செய்வோருக்குப் புரியாத புதிர் ஒன்றை விளக்கிய சாதனை அவருடையது, அல்லவா? தார் ஹெயர்டால் தன் பயணத்துக்கு அமைத்துக்கொண்ட கட்டுமரம் புதுவகையானது. ஆணிகளே அதில் உபயோகப்படுத்தப்படவில்லை. மிதக்கவும், மேலெழவும் சக்தி மிகுந்த, இங்காக்களுக்குத் தெரிந்திருந்த, பால்ஸா என்னும் ஒரு வகை மரக் கட்டைகளைக் கொண்டு அது கட்டப்பட்டது. ஒன்பது பால்ஸா கட்டைகளை வைத்துச் சணற் கயிற்றினால் பிணைத்து அதை உருவாக்கினார் ஹெயர்டால். இங்காக்கள் வழிபட்டு வந்த தெய்வம் ஒன்றின் பெயரான கோன்டிகி என்பதே இக்கட்டு மரத்துக்கும் பெயராக அமைந்தது.

கோன்டிகியில் சென்றோர் பெருந்தொல்லைகளுக்கு இடையேயும் வேடிக்கையாகக் காலங்கழித்தார்கள்; தம்மை விழுங்கக் கூடிய சுறுமீன்களிடத்தும் நட்புகொண்டார்கள்; எப்போதும் ஒற்றுமையாய் இருந்து குறித்த காரியத்தைச் செய்து முடித்தார்கள். இவ்வியல்புகள் சிறந்தவை; பெருமதிப்புக்குரியவை.

கோன்டிகி பயணத்துக்குப் பலர் ஆதரவளித்தார்கள்; பொருளுதவி செய்தார்கள்; நல் வாழ்த்துக் கூறினார்கள். ஆயினும், அப்பயணம் தொடங்கும்போது பலர் அதை அறிவற்ற செயலாகவே கருதினார்கள். ஆனால், நல்ல வேளையாகப் புறப்பட்ட 101-ஆவது நாளில் எல்லோரும் குறித்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்தனர்.

கோன்டிகி பயணத்திலிருந்து மறுக்கமுடியாத இரு உண்மைகளை நாம் அறியலாம். பழங்குடி மக்கள் அச்சம் சிறிதும் இன்றி அருஞ்செயல்களைப் புரியும் ஆற்றல் பெற்றிருந்தனர் என்பது ஒன்று. இருபதாம் நூற்றாண்டில் நாம் முயன்று பார்க்கவும் அஞ்சுகின்ற நெடுங்கடற் பயணங்களை அவர்கள் வெற்றிகரமாகச் செய்து முடித்தார்கள் என்பது மற்றொன்று.

—ஏ. ஆர். ஐராவதி,
*முதல்வர், இராணி மேரி கல்லூரி,*
*சென்னை.*

## பொருளடக்கம்

# பசிபிக் கடலில் பயணம்

அன்று ஏப்ரல் 28-ஆம் தேதி. கோன்டிகி கடலுக்குள் இழுத்துவிடப்படும் நாள். எங்கள் கட்டு மரத்தைக் கப்பல்களின் போக்குவரத்துப் பாதைகளுக்கு அப்பால் இழுத்துக்கொண்டு போய்விடும்படி [1] 'கார்டியன் ரியோ' என்ற கப்பலுக்கு உத்தரவு பிறந்தது. கரைக்குத் தொலைவில், தென்கடற்தீவினர் கட்டுமரங்களில் சென்று மீன்பிடித்த இடம் என்று ஓர் இடம் பிரசித்தி பெற்றிருந்தது. அங்கிருந்து எங்கள் பயணம் ஆரம்பமாவதாக ஏற்பாடா-யிருந்தது. பத்திரிகைகள் இச்செய்தியைப் பெரிய எழுத்-துக்களில் விளம்பரம் செய்திருந்தன. ஆகவே, அன்று துறைமுகத் தளத்தில் விடியற்காலையிலிருந்தே மக்கள் கூட்டங்கூட்டமாய் வந்து சேர்ந்தனர்.

கட்டுமரத்துக்கு வந்து சேர வேண்டிய எங்கள் அறுவருக்கும் கடைசி நிமிடம் வரை பல சிறு வேலைகள் எஞ்சியிருந்தன. ஆகவே, துறைமுகத் தளத்துக்கு நான் வந்தபோது கட்டுமரத்துக்குக் காவலாக ஹெர்மன் மட்டுமே அங்கிருந்தான். துறைமுகத்துக்கு வெகு தொலைவில் என் மோட்டார் வண்டியை நிறுத்தி விட்டேன். அங்கிருந்து கரை முழுவதும் நடந்தேன். காரணம், கால்களை வீசிப்-போட்டு நடக்க வேண்டும் என்னும் ஆசை. 'இனி எத்தனை நாட்களுக்குப் பின் எங்கள் பயணம் முடியுமோ! யாருக்குத் தெரியும்' என்று யோசித்தேன். விறுவிறுப்பாக நடந்து வந்துக் கட்டுமரத்தின்மேல் தாவி ஏறினேன். வாழைப்பழக்-குலைகளும், பழக் கூடைகளும், கோணிப்பைகளும், கட்டு மரத்தில் எங்கும் சிதறிக் கிடந்தன. கடைசி நிமிடத்தில் அவசரமாக ஏற்றப்பட்ட இச் சாமான்களை யெல்லாம்

1. Guardian Rios.

மெல்லத்தான் ஒழுங்குபடுத்த வேண்டும். இச் சாமான் குவியலின் நடுவே ஹெர்மன் உட்கார்ந்திருந்தான். அவன் கையில் கூண்டு ஒன்றும், அதற்குள் பச்சைக் கிளி ஒன்றும் இருப்பதைக் கண்டேன். நண்பர் ஒருவர் அவனுக்கு அக்கிளியை அன்பளிப்பாகத் தந்தாராம். அவனுடைய முகத்தில் விரக்தியின் சாயல் படர்ந்திருந்தது.

"இக் கிளியைக் கொஞ்சம் பார்த்துக் கொள். நான் கரைக்குப் போய்க் கடைசியாகச் சிறிது மதுபானம் செய்து விட்டு வருகிறேன். நம்மை இழுத்துவிடும் கப்பல் இங்கு வருவதற்குத்தான் மணிக்கணக்கில் நேரம் கிடக்கிறதே," என்றான்.

துறைமுகப் பரப்பில் இருந்த கூட்டத்தில் அவன் மறைந்தான். சிறிது நேரத்திற்குள் மக்கள் கைகளை அசைத்துச் சுட்டிக் காட்டத் தொடங்கினர். அவர்கள் காட்டிய திசையில் பார்த்தேன். கார்டியன் - ரியோ என்னும் இழுக்கும் கப்பல் மிக்க வேகத்துடன் வந்து கொண்டிருந்தது. கோன்டிகியைச் சுற்றிலும் எண்ணற்ற படகுகள் பரப்பிவிட்ட பாய்மரங்களுடன் நின்றிருந்தன. கடலலைகளில் அசைந்து கொண்டிருந்த அப் படகுக் கூட்டம் அசைந்தாடும் ஒரு காட்டைப்போல் தோற்றம் அளித்தது. கார்டியன் ரியோ தொலைவிலேயே நங்கூரம் இட்டு நின்று கொண்டு, ஒரு பெரிய மோட்டார்ப் படகை அனுப்பியது. அப் படகு வழியை அடைத்துக் கொண்டு நின்ற பாய்மரக் கப்பல்களைத் தாண்டி, எங்கள் கட்டு-மரத்தை அப்பால் இழுத்துச் செல்வதற்காக வந்தது. அதில் வேலைக்காரர்களும், கப்பல் அதிகாரிகளும், சினிமா-வுக்காகப் புகைப் படம் பிடிப்போரும் நிரம்பி இருந்தனர். உத்தரவுகள் பிறந்தன. புகைப்படக் கருவிகள் 'க்ளிக்' என்ற ஒலியை எழுப்பின. கட்டுமரத்தின் முன் பக்கத்தில் பலமான கயிறு ஒன்று கட்டப்பட்டது. 'சற்று பொறுங்கள்,' என்று கூவினேன். கிளியை வைத்துக் கொண்டு உட்-கார்ந்திருந்த எனக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. 'இவ்வளவு சீக்கிரம் எதற்கு? மற்றவர்களும் வரட்டும்; வெளியே போயிருக்கிறார்கள்,' என்று விளக்க முயன்று, பட்டினத்தைச் சுட்டிக் காட்டினேன். (அவர்களுடைய ஸ்பானிய மொழியில் எனக்குப் பேசிப் பழக்கமில்லை)

ஆனால், ஒருவரும் புரிந்து கொள்ளவில்லை. அதிகாரிகள் மரியாதையாகப் புன்னகை செய்தார்கள். கட்டுமரத்தின் முன் புறத்தில் அதிக சிரத்தையுடன் பலமான கயிற்று முடிச்சு போடப்பட்டது. கயிற்றை எடுத்து வெளியே போட்டுவிட்டு, பலவிதமான சைகைகளைச் செய்து காண்பித்தேன். இந்த குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு கிளி தப்பி ஓடிற்று. நான் கவனக் குறைவால் இருந்த சமயம் கிளி தன் மூக்கால் கூண்டுக் கதவின் கைப்பிடியைத் திருப்பி விட்டது. நான் திரும்பிப் பார்த்தபோது அது கட்டு மரத்தின் தளத்தில் சந்தோஷமாகவும் சொகுசாகவும் நடந்து கொண்டிருந்தது. அதைப் பிடிக்க முயன்றேன். உரக்க ஸ்பானிய மொழியில் திட்டிக் கொண்டு, அது வாழைக் குலைகளின் மேல் ஓடிற்று. கட்டுமரத்தின் முன்புறம் கயிற்றைக் கட்ட முயன்று கொண்டிருந்த மாலுமிகளைப் பார்த்துக் கொண்டே கிளியைத் துரத்திக் கொண்டு ஓடினேன. அது கூச்சலிட்டுக் கொண்டு ஓடி அங்கிருந்த சிறு மூங்கில் குடிசைக்குள் புகுந்தது. பின்னர், ஒரு மூலையில் அதை மடக்கி அகப்படுத்தினேன். அது என்னைத் தாண்டிச் செல்ல முயன்றது. அதன் ஒரு காலைப் பிடித்து இழுத்தேன்; சிறகுகளைப் பட பட என்று அடித்துக் கொண்டு தப்ப முயன்றது. ஒரு வழியாக அதைப் பிடித்துக் கூண்டுக்குள் தள்ளிக் கதவை அடைத்தேன்.

இதற்குள், கரையில் இருந்த மாலுமிகள் கட்டுமரத்தை அவிழ்த்து விட்டனர். கரை ஓரமாக உருண்டு, விழுந்து, உடைந்த அலைகளில் கட்டுமரம் முன்னும் பின்னுமாக நகர்ந்து தத்தளித்தது. கடற்கரையில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த மரக்கட்டைகளின்மேல் மோதி கட்டுமரம் உடைந்துவிடுமோ என்று அஞ்சினேன். அதனால், ஒரு துடுப்பைக் கொண்டு நீரில் மெல்ல வீசினேன். உடனே மோட்டார்ப் படகும் கிளம்பி விட்டது. தன் உடலை ஒரு முறைக் குலுக்கிக் கொண்டு கோன்டிகி தன் நீண்ட பயணத்தைத் துவங்கியது. கூண்டுக்கிளி ஒன்றே அப்போது எனக்குத் துணை. அதுவும் முகத்தைச் சுளித்துக் கொண்டு, என்னை வெறிச்சென்று பார்த்தது. அவ்வப்போது (எனக்குப் புரியாத) ஸ்பானிய மொழி பேசிற்று. கரையில் கூடியிருந்த மக்கள் ஆரவாரம் செய்து, கைகளை அசைத்தனர். கருநிறமுடைய சினிமா படப் பிடிப்பாளர்கள் ஆர்வம் மிகுந்-

திருந்தனர். எங்கள் பயணத் துவக்கத்தைப் பற்றிய ஒரு விவரத்தையும் விடாமல் படம் பிடித்துக் கொண்டிருந்தனர். ஆர்வ மிகுதியால் அலைகளுக்குள்ளே குதித்துவிடுவார்கள் போலிருந்தது. என் நண்பர்கள் வரும் வழியைப் பார்த்துக் கொண்டே தன்னந் தனியனுய்க் கட்டுமரத்தின்மேல் நின்று கொண்டிருந்தேன் நான். நண்பர்கள் எவரும் வரவில்லை. கார்டியன்-ரியோவுக்கு அருகில் கட்டுமரம் போய்ச் சேர்ந்தது. நங்கூரத்தை எடுத்து விட்டுக் கிளம்பத் தயாராக, நீராவியும் புகையும் எழக் கப்பல் காத்திருந்தது. இமை கொட்டும் நேரத்தில் கயிற்று ஏணியில் ஏறினேன். அங்கிருந்த கப்பலுக்குள் குதித்தேன். என் நண்பர்கள் வந்து சேரவில்லை என்று கூச்சல் இட்டேன். ஆகவே, கப்பலின் புறப்பாடு ஒத்திப்போடப்பட்டது. மேலும், துறைமுகத்தளத்துக்கு ஒரு படகு அனுப்பப்பட்டது. அது சென்று திரும்பிவர மிகுந்த நேரமாயிற்று. முடிவில் திரும்பி வந்தபோது அழகிய ஸ்பானியச் சீமாட்டிகள் அதில் நிறைந்திருந்தார்களே அன்றி, கோன்டிகிக்கு வந்து சேரவேண்டிய என் நண்பர்கள் ஒருவர் கூட இல்லை. சீமாட்டிகள் வந்ததெல்லாம் சிறப்பாய் இருந்தது. எனினும், என் பிரச்னைகள் தீரவில்லை. படகு வெளியே சென்றிருந்த நார்வீஜியரைத் தேடிவர மறுபடியும் சென்றது. இதற்குள் எரிக், பெங்ட் ஆகிய இருவரும் கை நிறைய புத்தகங்களும் சில்லரைச் சாமான்களும் எடுத்துக் கொண்டு, துறைமுகத் தளத்தில் மெல்ல ஆடியசைந்து கொண்டு வந்தனர். வீட்டுக்குத் திரும்பிச்சென்று கொண்டிருந்த மக்களைப் பார்த்துக் கொண்டே வந்த அவர்கள் போலீஸார் நின்றிருந்த எல்லையில் நிறுத்தப்பட்டனர். "இதற்கு மேல் பார்ப்பதற்கு ஒன்றும் இல்லையே, எங்கே போகிறீர்கள் ?" என்று ஓர் அதிகாரி கேட்டார். பெங்ட், தன் கையில் இருந்த பெரிய சுருட்டை ஆட்டிக் கொண்டே "நாங்கள் ஒன்றையும் பார்க்க வில்லை. நாங்களே தான் கட்டுமரத்தில் செல்லுகிறோம்," என்று கூறினான். "இனிப் பயன் இல்லை. கோன்டிகி கிளம்பி ஒரு மணி நேரம் ஆயிற்று," என்றார் போலீஸ். "நம்ப முடியாது," என்றான் எரிக். தன் கையில் இருந்த ஒரு பொட்டலத்தைக் காட்டி, "இதோ இருக்கிறதே விளக்கு, இது இல்லாமல் எப்படிச் செல்ல முடியும் ?" என்றான். "இவன் தான் கட்டு மரத்தைச் செலுத்துபவன். நான் தான் சமை-

யற்காரன்,'' என்ருன் பெங்ட். போலீஸை மீறிக்கொண்டு அவர்கள் உள்ளே சென்றனர். கட்டுமரமோ புறப்பட்டாய் விட்டது. என்ன செய்வதென்று தோன்ருமல் துறைமுகத்தளத்தில் அங்கும் இங்கும் அலைந்தனர். அதற்குள் எங்களைச் சேர்ந்த மற்றவர்களும் அங்கு வந்தனர். அப்போது தங்களை நோக்கி ஒரு படகு வருவதைக்கண்டு அவர்கள் ஆறுதல் அடைந்தனர். சிறிது நேரத்தில் படகு அவர்களை ஏற்றிக் கொண்டு நான் இருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தது. ஒரு வகையாய் நாங்கள் அறுவரும் ஒன்று சேர்ந்தோம்.

விரைவில் கார்டியன் ரியோவும் புறப்பட்டது. கட்டுமரமும் அதைப் பின்தொடர்ந்து கம்பீரமாகச் சென்றது. அதைச் சுற்றி அலைகள் நுரைத்து எழுந்து சிதறின. நாங்கள் புறப்பட்ட பொழுது மாலையில் வெகு நேரமாகிவிட்டது. மறுநாள் காலை துறைமுகப் போக்குவரத்து எல்லைகளைத் தாண்டிய பிறகு தான் கார்டியன் ரியோ எங்களைக் கடலில் விட்டுப்போக முடியும். துறைமுகப் பகுதியைத் தாண்டியதும் எதிர்த்து வந்து எங்களைப் பின் நோக்கித் தள்ளும் வகையில் கடல் அலைத்துக் கொண்டிருந்ததைக் கண்டோம். எங்களைத் தொடர்ந்து வந்த சிறிய படகுகள் யாவும் ஒவ்வொன்ருகக் கரைக்குத் திரும்பிச் சென்றன. சில பெரிய படகுகள் மட்டும் விரிகுடாவின் வாயில்வரை எங்களைத் தொடர்ந்து வந்தன.

இதற்குமேல் என்ன நடக்கும் என்று பார்க்கும் ஆவல். கோன்டிகி கப்பலைத் தொடர்ந்து சென்றது. எதிர்த்து வரும் அலைகளில் அதன் முன்புறம் மோதுண்டதால் கட்டுமரத்தின் மேல்தளத்துக்கு நீர் ஓடி வந்தது. இவ்வளவு அமைதியான கடலிலும் மேல் தளத்தில் வந்து நீர் விழுந்தது எங்களுக்குப் பிடிக்காத விஷயம் தான். விரிகுடாவிற் பாதிவழி சென்றதும், இழுக்கும் கயிறு அறுந்து போயிற்று. கட்டுமரத்தில் கட்டியிருந்த கயிற்றுமுனை மெல்ல நீரில் ஆழ்ந்தது. கப்பலோ மேலே நகர்ந்து கொண்டிருந்தது. கட்டுமரத்தின் ஓரத்தில் படுத்துக் கொண்டு, கயிற்றின் முனையை மேலே தூக்க முயற்சி செய்தோம். தொடர்ந்து வந்த பெரிய படகுகள் மேலே சென்று கப்பலை நிறுத்தும் முயற்சியில் ஈடுபட்டன. பெரிய, கொட்டும் தன்மையுள்ள

ஜெல்லி மீன்கள் அலைகளில் மேலும் கீழும் திரிந்தன. கயிறுகளில் எல்லாம் அவை ஒட்டிக் கொண்டிருந்தன. கட்டுமரம் ஒரு புறம் சாயும்போது அதன் விளிம்பைப் பிடித்துத் தொங்கிக் கொண்டு, நாங்கள் வழவழப்பான கயிற்றைப் பிடிக்க முயற்சித்தோம். அதற்குள் கட்டுமரம் மறுபக்கம் சாயும். கடல் நீரும், பெரிய ஜெல்லி மீன்களும் மேலெழுந்துவரும் அலையோடு கிளம்பி, எங்கள்மேல் விழுந்தன. திட்டித் துப்பிக்கொண்டு தலைமயிரிடையே சிக்கிக் கொண்டிருந்த ஜெல்லி மீன் நார்களை எடுத்து எறிந்தோம். ஆனால், முயற்சி வெற்றி அடைந்தது. கப்பல் திரும்பி வந்த போது, கயிற்றின் நுனி கடலிலிருந்து எடுக்கப்பட்டு, முடிச்சுப்போட்டு சேர்ப்பதற்குத் தயாராய் இருந்தது. கயிற்றைக் கப்பலுக்குள் நாங்கள் எறிய இருந்தபோது, கப்பலின் பின் புறத்தைக் கட்டுமரம் வேகமாக நெருங்கியது. அலையின் விசையினால் கட்டுமரமே மோதி நசுங்கிப் போகுமோ என்று பயந்தோம். ஆகவே, கையில் இருந்தவற்றையெல்லாம் எறிந்து விட்டு, மூங்கிற்கம்புகளையும் துடுப்புக்களையும் உபயோகித்து, விபத்து நேராமல் தடுக்க முயன்றோம். இம்முயற்சி பயனற்றதாய்விடும்போலிருந்தது. ஏனெனில், அலைப்பள்ளத்தில் கட்டுமரம் மிதந்தபோது, நீட்டிக்கொண்டிருந்த கார்டியன் ரியோவின் பிற்பகுதியை எட்டித் தொட எங்களால் முடியவில்லை.

கப்பலின் மேல்தளத்தில் மக்கள் ஓடுவதும் இரைச்சல் இடுவதுமாக இருந்தார்கள். இறுதியில், கப்பலின் சுழல் துடுப்பு எங்கள் அருகில் நெருங்கி வந்தது. அப்போது கார்டியன் ரியோவின் அடியில் ஒரு அலை வீச்சு எழுந்தது. ஆனால், நல்ல வேளையாக அதிலிருந்துத் தப்பினோம். கட்டுமரத்தின் முன் பகுதி இதற்குள்ளாகவே நாலைந்து முறை பலமாக இடிபட்டிருந்தது. அதனால், கயிறு கட்டியிருந்த இடங்களில் சிறிதளவு கோணலாய் இருந்தது. ஆனால், போகப்போக இது தானே சரியாய் விட்டது. "எந்த வேலையும் இவ்வளவு மோசமாக ஆரம்பித்தால் நல்லபடியாகத்தான் முடியும்," என்றான் ஹெர்மன். தொடர்ந்து, "இந்தக் கயிறு கட்டி இழுக்கும் வேலை நின்றால் நல்லது. கட்டுமரமே குலுங்கிக் குலுங்கித் துண்டுகளாய்ப் போய்விடும்போல் இருக்கிறது," என்றான். குறைந்த வேகத்துடன் இரவு முழுவதுமே இந்த இழுக்கும் வேலை நடந்தது.

ஏறுமாருன நிகழ்ச்சிகள் பிறகு ஒன்றும் நிகழவில்லை. ஓரிரண்டு சிறிய தொல்லைகள் இருந்தன. ஆயினும், நாங்கள் முன்னேறிச் சென்ருேம். பின் தொடர்ந்து வந்த படகுகள் விடைபெற்றுச் சென்று நெடுநேரமாகிவிட்டது. கரையிலிருந்து தெரிந்த கடைசி விளக்கும் பின்புறம் மறைந்து போயிற்று. இருளில் சில கப்பல்களின் விளக்குகள் மட்டும் எங்களைத் தாண்டிச் செல்வதைப் பார்த்தோம். இரவு நேரத்தைப் பகுத்துக்கொண்டு, ஒவ்வொருவராக இழுக்கும் கயிற்றில் கவனமாக இருந்தோம். அன்றிரவு எல்லோரும் நன்ருகத் தூங்கினேம்.

அடுத்த நாள் விடிந்தது. பெரு நாட்டுக் கடற்கரையில் ஓர் அடர்த்தியான பனிப்படலம் தெரிந்தது. எங்களுக்கு முன்னல் மேற்குத் திசையில் மாசுமறுவற்ற நீல வானம். கடலில் நெடிய, அமைதியான, நுரைசூடிய அலைகள். கட்டுமரத்தில் வைக்கப்பட்டிருந்த துணிகள், மரப்பலகைகள் ஆகிய யாவும் பனியால் ஈரமாய் இருந்தன. குளிர் மிகுந்திருந்தது. ஆனல் நாங்கள் இருந்த இடம் பூமத்தியரேகைக்கு 12° தெற்கே. அதை நினைத்துப் பார்க்கும்போது எங்களைச் சூழ்ந்திருந்த பச்சை நீர் ஒரேயடியாய்ச் சில்லிட்டிருந்தது மிக்க வியப்பாய் இருந்தது. இதற்குக் காரணம் [1]ஹம்போல்ட் குளிர் நீரோட்டம். தென் துருவத்திலிருந்து பெரும் நீர்ப்பகுதிகளைத் தள்ளிக்கொண்டு, பெரு நாட்டின் கரையோரமாக வடக்கு நோக்கி நகர்ந்து, பிறகு பூமத்தியரேகைக்குச் சற்று தெற்கே மேற்காகத் திரும்பி, பசிபிக்கடலின் குறுக்கே செல்லும் நீரோட்டத்துக்கு ஹம்போல்ட் நீரோட்டம் என்பது பெயர். [2]பிஸ்ஸாரோ முதலிய ஸ்பானியர்கள் முதன் முதலில் இங்கா நாட்டு இந்தியரின் கட்டுமரங்களைக் கண்டார்கள். அவற்றில் பெரிய துணிப்பாய்கள் அமைந்திருந்தன. [3] டால்பின் முதலிய மீன்களைப் பிடிப்பதற்காக இதே ஹம்போல்ட் நீரோட்டத்தில் அந்தக் கட்டுமரங்கள் 50 அல்லது 60 கடல் மைல்கள்கூடச் செல்லுமாம். இங்கு நாள் முழுதும் கரையிலிருந்து கடலை நோக்கிக் காற்று அடித்தது. மாலை நேரத்தில் கரைக்காற்று கிளம்பிக் கடலில் வெகு தூரத்திலிருந்து கரையை நோக்கி அடித்தது. ஆகவே, கட்டு மரங்கள் விரும்பினல் கரைக்குத் திரும்பவும் கூடும்.

---

1. Humboldt 2. Pizarro 3. Dolphin.

கயிற்றை இழுக்கும்வேலை முடிந்தது. கப்பல் அருகி-லேயே மிதந்து கொண்டிருந்தது. கட்டு மரத்தைக் கப்பலுக்குச் சிறிது தொலைவிலேயே நிறுத்திக் கொண்-டோம். காற்று நிரம்பிய எங்கள் ரப்பர்ப் படகை நீரில் இறக்கினேம். கால் பந்தைப்போல் அது அலைகளின் மீது ஏறி நடனம் ஆடிற்று. எரிக், பெங்ட், நான் — மூவரும் அதில் சென்று, கார்டியன் ரியோவின் கயிற்-றேணியின் உதவியால் கப்பலின் மேல் தளத்துக்குச் சென்ளும். பெங்ட் எங்களுக்கு மொழிபெயர்ப்பாளனுக உதவினன்.

எங்களிடம் பசிபிக் சமுத்திரப் பகுதியின் வரைப்படம் ஒன்று இருந்தது. அதில் நாங்கள் அப்பொழுது இருந்த இடத்தைத் திட்டமாகக் குறித்துக் கொண்டோம். கலாவோவிலிருந்து வடமேற்குத் திசையில் 50 கடல் மைல்களுக்கு அப்பால் நாங்கள் அப்பொழுது இருந்தோம். முதல் சில இரவுகளுக்குத் துறைமுகத்தை நோக்கிச் செல்லும் கப்பல்களினுல் எங்கள் கட்டுமரம் முழுகிவிடாமல் இருப்பதற்காக நாங்கள் விளக்குகளை ஏற்றி வைத்துக் கொண்டு பயணம் செய்யவேண்டியிருந்தது. சிறிது தொலைவிற் சென்ற பிறகு இந்தப் பயமே இல்லை. ஏனெனில், ஒரு கடற்பாதைகூட பசிபிக்கின் இந்தப் பகுதி வழியே செல்லவில்லை.

கப்பலில் இருந்த எல்லோரிடத்திலும் நாங்கள் முறைப்படி விடைபெற்றுக் கொண்டோம். கப்பலிலிருந்து இறங்கி, சிறிய படகொன்றில் ஏறிக்கொண்டு சென்ளும். படகு அலைகளின்மேல் ஆடி அசைந்துகொண்டு கோன்டி-கியை நோக்கிச் சென்றது. எங்கள் வருகையை ஏதோ ஒரு விநோதம் நிகழ்வதுபோல் எண்ணி, கப்பலில் இருந்-தோர் கவனித்துக்கொண்டிருந்தனர். முடிவில் இழுக்கும் கயிறு அவிழ்க்கப்பட்டு, கட்டுமரம் தனியே கடலில் மிதந்தது. கார்டியன் ரியோவில் இருந்த முப்பத்தைவரும் கப்பலின் மேல்தளத்தில் நின்று கைகளை அசைத்து விடை கொடுத்தனர். கட்டுமரத்தில் பெட்டிகளின்மேல் உட்கார்ந்-திருந்த ஆறுபேரும், மெல்ல மெல்லத் தொலைவில் நகரும் கப்பலையே உற்றுநோக்கிக் கொண்டிருந்தனர்.

முடிவில், கப்பலின் மீதிருந்த உருவங்கள் மங்கிக் கப்பலும் மறைந்தது. கருந்தூண்போல் எழுந்த புகை மெல்லக் கரைந்து அடிவானத்தோடு கலந்தது. அதன் பின்னரே நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துத் தலை அசைத்தோம். 'போய் வாருங்கள், போய் வாருங்கள்,' என்ருன் டார்ஸ்டைன். பிறகு எங்களிடம் திரும்பி, "பயல்களா, இப்போது நாம் இயந்திரத்தை முடுக்கிவிட-வேண்டும்," என்ருன். நாங்கள் சிரித்துவிட்டுக் காற்றின் திசையைக் கவனித்துக் கொண்டிருந்தோம். அதுவரை தெற்குத் திசையில் அடித்துக்கொண்டிருந்த மெல்லிய காற்று தென்கிழக்குக்கு மாறிற்று. மூங்கிற் கம்பத்தில் எங்களுடைய பெரிய சதுரவடிவமான பாய்த்துணியை ஏற்றினேம். காற்றின் வேகம் போதவில்லை. பாய்மரத்தின் துணி தொய்ந்து போயிற்று. அதில் வரையப்பட்டிருந்த கோன்டிகியின் முகம் சுருங்கித் திருப்தியற்றதொரு தோற்றத்தை அளித்தது. "இந்தக் கிழவனுக்கு நிலைமை பிடிக்கவில்லை. வயதில் சிறியவனுய் இருந்தபோது இதை-விடச் சிறந்த கடற் காற்றுக்களை இவன் பார்த்திருக்கிருன்," என்ருன் எரிக். "இது என்ன! நாம் பின்துகிருேம் போலல்லவா தோன்றுகிறது!" என்ருன் ஹெர்மன். ஒரு பால்ஸா மரத்துண்டைக் கட்டுமரத்தின் முன்பக்கம் கடலில் விட்டெறிந்தான். "ஒன்று, இரண்டு, மூன்று.........முப்பத்தொன்பது, நாற்பது, நாற்பத்தொன்று" மரத்துண்டு அமைதியாகக் கட்டுமரத்தின் அருகில் கடலில் மிதந்தது. கட்டுமரம் அதைப் பாதி அளவுக்குக்கூடத் தாண்டவில்லை. "இதை எப்படியாவது நாம் சரிக்கட்டவேண்டும்," என்ருன் டார்ஸ்டைன். அவன் குரலில் நம்பிக்கை பொங்கி எழுந்தது. "அந்திக் காற்றுடன் மறுபடியும் கரைக்கே போய் விடமாட்டோமே," என்ருன் பெங்ட். மேலும், "கலாவோ-வில் மக்களிடம் விடைபெற்றுப் புறப்பட்டதெல்லாம் சிறப்பாகத்தான் இருந்தது. இப்போது திரும்பவும் அங்கே போய்ச் சேர்ந்தால் எத்தகைய வரவேற்பு கிடைக்கும் ?" என்ருன்.

இப்போது கட்டுமரம் முன்னேறிவிட்ட படியால் பால்ஸா துண்டு அதன்பின் கோடிக்குச் சென்று விட்டது. மகிழ்ச்சி பொங்கப் பலவாருக ஆரவாரித்தோம். கரையை விட்டுக் கிளம்பும்போது அவசர அவசரமாக ஏற்றப்பட்ட பொருள்-

களை ஒழுங்காக வைக்கத் தொடங்கினோம். ஒரு காலிப் பெட்டியின் அருகில் பெங்ட் எண்ணெய் அடுப்பை வைத்து ஏற்றினான். விரைவில் நாங்கள் பிஸ்கோத்துகளை வயிறு நிறையத் தின்றோம்; பின்னர் சூடான கோக்கோவும் குடித்தோம். இளந் தேங்காய்களை வெட்டித் தின்றோம். வாழைப் பழங்களைப் பார்த்தோம். நன்றாய்ப் பழுத்திருக்கவில்லை. எரிக் மெல்ல சிரித்துக் கொண்டே 'ஏதோ ஒரு வகையில் எல்லாம் சரியாய் விட்டது,' என்றான். ஆட்டுத் தோலால் செய்யப்பட்ட, அகன்ற, கால் சட்டையும், தலையில் ஒரு மிகப் பெரிய இந்திய தொப்பியும், தோளில் கிளியுமாக அவன் அங்கும் இங்கும் நடைபோட்டுக் கொண்டிருந்தான். "ஒரே ஒரு விஷயம்தான் எனக்குப் பிடிக்கவில்லை. குறுக்கு நெடுக்காகப் பல நீரோட்டங்கள் கடலில் இருக்கின்றன. அவற்றில் எதிலாவது நாம் சிக்கிக் கொண்டால் அவை நம்மைக் கரை ஓரத்தில் உள்ள பாறைகளில் கொண்டு போய் மோதிவிடுமே! என்ன செய்வது?" என்றான். துடுப்புக்களால் தள்ளலாமா என்று யோசித்தோம். பின்னர் பலத்த காற்று அடிக்கும் வரைக் காத்திருக்கலாம் என்று தீர்மானித்தோம். காற்றும் அடித்தது. தென் கிழக்குத் திசையிலிருந்து அதிக அலைப்புகள் இல்லாமல் ஒரே சீராக வீசிற்று. விரைவில் பாய்மரத்துணியும் நிரம்பி, முன்புறம் வளைந்து விரிந்தது. அதிலிருந்த 'கோன்டிகி'யின் முகத்தில் சண்டைக்கிழுக்கும் உணர்ச்சி பொங்கி வழிந்தது. கட்டுமரம் நகர ஆரம்பித்துவிட்டது. 'மேற்குத் திசையிலே தள்ளு,' என்று உரத்த குரலில் கூவிக்கொண்டே, பலகைகளையும் கயிறுகளையும் இழுக்க ஆரம்பித்தோம். [1] சுக்கானை நீரில் இறக்கினோம். ஒருவர் பின் ஒருவராக மணிக் கணக்குப்படி வேலை செய்ய ஒரு திட்டம் வகுத்துக் கொண்டோம். அதன்படி வேலை தொடங்கினோம். கட்டு மரத்தின் முன்புறத்தில் காகிதப் பந்துகளையும், மரத்துண்டுகளையும் எறிந்துவிட்டு, பின்புறத்தில் நின்று எங்கள் கைக்கடியாரங்களில் நேரக் கணக்கு எடுத்தோம். 'ஒன்று, இரண்டு, மூன்று........ பதினெட்டு, பத்தொன்பது...ஆ!' காகிதமும் மரத்துண்டுகளும் சுக்கானைத் தாண்டியபின் நகர்ந்தன. சீக்கிரத்திலேயே அவை கயிற்றிழையில் பிணைந்த முத்துக்களைப்போல் மேலும் கீழும்

1. Steering oar

அசைந்தவாறு, நாங்கள் தாண்டிச் சென்றுவிட்ட அலைப் பள்ளத்தில் மிதந்தன. ஒவ்வொரு கஜமாகக் கூரிய முனையுள்ள பந்தயப் படகைப்போல், கடல் நீரை உழுது பிளந்து கொண்டு எங்கள் கோன்டிகி முன்னேறவில்லை. மழுங்கி, அகன்று, பருத்து, கனத்து, அலைகளின் மேல் அமைதியாக அவசரமின்றி முன்னேக்கி நகர்ந்தது. மெதுவாக நகர்ந்தாலும், நகர ஆரம்பித்த பின் அசைக்க முடியாத உறுதியுடன், நில்லாமல் மேலே சென்றது. கட்டு மரத்தைக் கடலில் திசை திருப்பிச் செலுத்துவதுதான் அப்பொழுது எங்களுக்குப் பெரிய பிரச்னையாக இருந்தது. ஸ்பானியரின் வருணனைப் படியே சிறிதும் பிசகாமல் அமைக்கப்பட்டிருந்தது எங்கள் கட்டுமரம். ஆயினும், ஓர் இந்திய கட்டு மரத்தைக் கடலில் செலுத்துவதில் எங்களுக்குத் தக்க பயிற்சி இல்லை அல்லவா? கரையில் இருந்த அனுபவசாலிகள் இந்த பிரச்னையைத் தீர விவாதித்தனர். ஆனல், பயன் ஒன்றும் கிட்டவில்லை. எங்களுக்கு எவ்வளவு தெரிந்திருந்ததோ, அவ்வளவே அவர்களுக்கும் தெரியும். தென்கிழக்குக் காற்று வலுக்கத் தொடங்கியது. கட்டு மரத்தைத் திசை திருப்பினேம். எப்பொழுதும் காற்று எங்களுக்குப் பின்புறமிருந்து அடிக்குமாறும், பாய்மரத் துணி முன்புறம் விரிந்து வளையுமாறும் கட்டுப்படுத்த வேண்டி இருந்தது. கட்டுமரம் ஒருபுறம் அதிகமாய்த் திரும்பிவிட்டால், பாய்த்துணி சட்டென்று பின்னல் வளைந்து, கட்டுமரத்தின் மீதிருந்த சாமான்கள், மனிதர்கள், மூங்கில் குடிசை முதலியவற்றில் மோதியது. கட்டுமரம் சுழன்று திரும்பி சுக்கான் முன்னகச் செல்லத் தொடங்கியது. எங்களுக்கு இது கடினமான போராட்டமாய் இருந்தது. பாய்த்துணியோடு எங்களில் மூவர் மல்லுக் கொடுத்தோம். மற்ற மூவரும் சுக்கான் துடுப்பை நகர்த்தி நகர்த்திக் கட்டுமரத்தின் முன்புறம் காற்றின் வழியில் அகப்படாமல் சமாளித்தார்கள். இவ்வளவும் செய்து நிலைமையை சமாளித்த பின்பும் எங்களுக்கு மகிழ்ச்சி இல்லை. காரணம், மறுபடியும் இந்த பிரச்னை கிளம்பாமல் இருக்கவேண்டுமே என்ற பயம்தான். சுக்கான் துடுப்பு 19 அடி நீளம் உடையது. கட்டுமரத்தின் பின்புறத்தில் ஒரு பெரும் கட்டையின் பிளவில் அது அமைந்திருந்தது. முன்னர் எங்களுடைய நண்பர்கள் பன்முறை உபயோகித்த துடுப்பே அது. மாங்கிரோவ் என்ற

ஒருவகை மரக் கொம்பினுல் ஆன அந்தத் துடுப்பு எஃகைப் போல் உறுதியானது. மிக்க கனம் உடையது. அக் கொம்பின் நுனியில் அகன்ற, பர் என்ற வகை மரத்தாலான, பலகை ஒன்று கயிறுகளால் கட்டப்பட்டிருந்தது. அலைகள் எதிர்த்து வரும்போது அத்துடுப்பு அலைவுருமல் பிடித்துக் கொள்ள எங்கள் முழுப் பலத்தையும் உபயோகிக்க வேண்டியிருந்தது. துடுப்புப் பலகையைத் திருப்புவதால் எங்களுடைய விரல்களெல்லாம் சோர்ந்து போயின. துடுப்புக் கொம்பில் குறுக்காக ஒரு மரத் துண்டைக் கட்டினேம். நெம்புகோலை இயக்குவதுபோல் இதையும் சுலபமாகத் திருப்ப முடிந்தது. இதற்குள் காற்றின் வேகமும் அதிகரித்தது.

பொழுது சாயும் வேளைக்குள் [1] வியாபாரக் காற்றின் பலமும் உச்சத்தை அடைந்து விட்டது. விரைவாக அது கடலைக் கிண்டி எழுப்பியது. பேரொலியுடன் அலைமலைகள் பின்புறமிருந்து எங்கள்மேல் பாய்ந்து வந்தன. கடலே எழுந்து எங்களைச் சந்திக்க வந்தது போன்ற உணர்ச்சி எங்களுக்கு ஏற்பட்டது. எங்களுடைய நிலைமையை எண்ணிப் பார்த்தேன். கடும் சோதனைக் காலம் என்றே தோன்றிற்று. கரையுடன் இருந்த தொடர்புகள் யாவும் அறுபட்டுவிட்டன. நடுக் கடலில் தனிமையாக நாங்கள் இருந்தோம். எங்களுக்கு நேரப்போகும் நன்மையோ தீமையோ, முற்றிலும் கடலையும் கட்டு மரத்தையும் பொறுத்திருந்தது. வலிமை வாய்ந்த வியாபாரக் காற்றுக்குள் சிக்கிக் கொண்டோம். ஆகவே, நாளுக்கு நாள் கடலுக்குள் மேன்மேல் செல்வதைத் தவிர வழியில்லை. கரையை நோக்கிக் கட்டு மரத்தைத் திருப்பினுலும், பின்புறமாக நகர்ந்து கொண்டு கடலுக்குள்தான் செல்லும். நாங்கள் செய்யக் கூடியது ஒன்றுதான். அதுதான், காற்ருல், தள்ளப்பட்டு, அஸ்தமன சூரியனை நோக்கிச் செல்லுவது. எண்ணிப் பார்த்தால் எங்கள் பயணத்தின் நோக்கமும் இதுதானே ! பெரு நாட்டிலிருந்து கடலுக்குள் விரட்டப்பட்ட கோன்டிகியும், சூரியனைத் தொழுத பண்டை மக்களும் கூட இவ்வாறுதான் செய்தார்கள்.

எங்களைச் சுற்றிலும் கடல் அலைகள் நுரைத்து எழுந்து குன்றுகளைப்போல் தோற்றம் அளித்தன. அவற்றின் மீது

1. Trade wind

எங்கள் கட்டுமரம் ஏறிச் சென்றபோது மனத்தில் நிம்மதியும் வெற்றியால் தோன்றும் மகிழ்ச்சியும் அடைந்தோம். ஆனல், பெரும் அலைகள் ஆரவாரித்துக்கொண்டு புரண்டு வந்தபோது, துடுப்பைச் சமாளிப்பது கடினமாய் இருந்தது. அவ்வப்போது அலைகள் எழுந்து துடுப்புக் கம்பை ஒரு புறமாகத் தள்ளின. அச்சமயங்களில் சுக்கான் பிடித்தவன் கதியற்றுக் கவைக் கூத்தாடியைப்போல் உருட்டித் தள்ளப் பட்டான். சில சமயங்களில் இரண்டு பேர் இருந்தும் சமாளிக்க முடியவில்லை. துடுப்புப் பலகையைக் கயிறுக-ளால் கட்டுமரத்தின் இரு பக்கங்களிலும் கட்டினேம். மரப்-பிளவில் துடுப்புக்கம்பை அகலாமல் பொருத்திப் பிடிக்க வேறு கயிறுகளை உபயோகித்தோம். இவ்வாருக இந்தப் பிரச்னைக்கு முடிவுகண்டோம். இந்த ஏற்பாட்டினுல் சுக்கானை முன்பு போல் அவ்வளவு நகர்த்த முடியவில்லை. எனினும், கடல் கொந்தளித்தபோதுங் கூட நாங்கள் தொல்லைப் படாமல் இருக்க முடிந்தது.

அலைப்பள்ளங்களின் ஆழம் வரவர அதிகரித்தது. ஹம்போல்ட் நீரோட்டத்தின் அதிவேகமான பகுதிக்குள் இருப்பதை அப்போதுதான் அறிந்தோம். இந்தப் பேர் அலைகள் காற்றினுல் மட்டும் எழுபவை அல்ல; நீரோட்டத்-தின் காரணமாகத் தோன்றுபவை. எங்களைச் சுற்றி நாற்-புறமும் பச்சையாகவும் சில்லிட்டும் இருந்தது கடல் நீர். பெரு நாட்டின் கூரிய மலைக்குவடுகள் எங்களுக்குப் பின்னுல் அடர்ந்த மேகக் கூட்டங்களில் மறைந்தன. இருளும் சூழ்ந்தது. இயற்கைச் சக்திகளோடு நாங்கள் போரிடத் தொடங்கினேம். கடலைப்பற்றி எங்களுக்கு இருந்த ஐயம் நீங்கவில்லை. கடலுடன் நெருங்கிப் பழக வேண்டுமே, அது நமக்கு உதவியாக இருக்குமா, அல்லது நம்மை எதிர்த்து நிற்குமா என்பது எங்களுக்குத் தெரிய-வில்லை. அடிக்கடித் தனிப்பெரும் அலைகள் எழும். காது செவிடுபடும்படியாகப் பேரொலி எழுப்பும். எங்கள் மூங்கில் குடிசையின் உயரத்துக்கு மேலே கிளம்பும். வெண்ணிற நுரை மலைபோலத் தோன்றும். சீறிப் புரண்டு கட்டுமரத்தின் மேல் வந்து தாக்கும். நாங்கள் மனத்தில் பயம் கொண்ட-வர்களாய்க் கட்டுமரத்தை இறுகப் பற்றிக்கொண்டு நின்றேம். ஆனல், எங்களுக்கு ஆபத்து ஒன்றும் நேர-

வில்லே. கோன்டிகி அமைதியாகத் தன் பின்பாகத்தை மேல் எழுப்பிக்கொண்டு, சிறிதும் கலங்காமல் அலேகளின்மீது ஏறிச் சென்றது. நீர்க்குன்றுகள் கட்டுமரத்தின் அடியில் இருபுறங்களிலும் உருண்டு விலகின. ஒரு அலேக்குன்றின்மீது ஏறியபின், தொடர்ந்து வரும் பள்ளத்தில் இறங்கி, அடுத்த பேரலேக்குத் தயாராக நின்ருேம். இரண்டு, மூன்று பேரலேகள் தொடர்ந்து வரும். பிறகு பல சிறிய அலேகள் புரளும். ஓர் அலே கட்டுமரத்தின் முகப்பகுதியை உயரத் தூக்கிப் பிடித்துக்கொள்ளும். அந்தப் பிடியிலிருந்து தப்பித்துக்கொள்வதற்கு முன்பே இரண்டாம் அலே பின் தளத்திலிருந்து எழும்பி விழுந்து உடையும். அப்போது சுக்காணேப் பிடித்திருந்தவன் தன் இடையைச் சுற்றி ஒரு கயிற்றைக் கட்டிக்கொள்ள வேண்டியிருந்தது. ஏனெனில், வேறு பாதுகாப்புக்கள் ஒன்றும் இல்லே. பின்புறத்தில் காற்றும், கடல் அலேகளும் வந்து மோதுமாறு கட்டுமரத்தைத் திருப்பி, பாய்த்துணி எப்போதும் காற்றினுல் நிரம்பியிருக்குமாறு பார்த்துக்கொள்வது சுக்கான் பிடிப்பவனின் வேலே. பின்புறம் ஒரு பெட்டியின் மேல் பழையதொரு திசையறி கருவியைப் பொருத்தியிருந்தோம். இதனுல் நாங்கள் செல்லும் பாதையைச் சரிபார்த்து, கடலில் நாங்கள்இருந்த இடத்தையும் சென்றுகொண்டிருந்த வேகத்தையும் ஏறிக் கணக்கிட முடிந்தது.

அப்போது நாங்கள் இருந்த இடம் தெளிவாய்த் தெரியவில்லே. ஏனெனில் வானம் எங்கும் மேகமூட்டம். தொடுவானம் அலேமோதும் ஒரு பெருங் குழப்பமாகவே தோற்றம் அளித்தது. தடவைக்கு இருவராக நாங்கள் துடுப்புத் திருப்பும் வேலேயில் ஈடுபட்டோம். துடுப்புப் பலகையைக் கட்டுப்படுத்த இருவர் போராடிக்கொண்டிருப்பர். மற்றவர்கள் குடிசைக்குள் சிறிது தூங்க முயற்சிப்பர். சில சமயங்களில் கொட்டி இடித்துக்கொண்டு பாய்ந்த அலேகள் சுக்கான் திருப்புவோர்மேல் விழுந்து, மூழ்கடித்துக் கட்டுமரத்தின் இடுக்குகள் வழியாகவும் இரு புறங்களிலுமாக வழிந்தோடும். உடனே அவர்கள் சுக்கான் துடுப்பைப் பாய்ந்து பிடித்துக் கட்டுப்படுத்துவர். இன்றேல் கட்டுமரம் சுழன்று திரும்பி, பாய்துணி இங்கும் அங்கும் மோதிக்கொள்ளும். அலேகள் பின்புறத்திலிருந்து சாய்வாக

அடித்ததால் மூங்கிற் குடிசைக்குள் நீர் நிரம்பி வழிந்தோடி-யது. நேரே பின்புறத்திலிருந்து அடிக்கும்போதோ, இந்தத் தொல்லையில்லை. அலைகள் குடிசைச் சுவர் வரையிலுங் கூட முன்னேறி வராமல் விரைவாகக் கட்டைகளின் ஊடே வழிந்தோடின. கட்டுமரத்தின் பின்புறம் இருந்த உருண்டை மரங்கள் கவைக் கொம்புகளைப் போல நீரைச் சுலபமாக அனுமதித்தன. கட்டுமரத்தில் இருந்த ஒரு பெரிய வசதி இதுதான். இடுக்குகளும் துவாரங்களும் எவ்வளவுக்கு அதிகமோ, அவ்வளவுக்கு நன்மையே. தளத்தில் இருந்த இடைவெளிகளினூடே நீர் வெளியே சென்றதே ஒழிய உள்ளே வரவில்லை.

இரவு ஏறக்குறைய பன்னிரண்டு மணி இருக்கும். வடக்குத் திசையிற் சென்ற ஒரு கப்பலின் விளக்கு தெரிந்-தது. சுமார் மூன்று மணிக்கு மற்றொரு கப்பலும் அதே திசையிற் சென்றது. அக்கப்பலில் உள்ளவர்களை அழைக்-கும் நோக்கத்துடன் மெழுகு விளக்குகளை அசைத்தோம். மின்சாரக் கைவிளக்குகளைப் பன்முறை ஏற்றி அணைத்-தோம். ஆனால், அவர்கள் இந்த சைகைகளைக் கவனிக்க வில்லை. விளக்குகள் மெல்ல வடக்குத் திசையிற் சென்று இருளில் மறைந்தன. தங்களுக்கு அருகாமையில் ஒரு பண்டைக்காலத்து இங்கா கட்டுமரம் நகர்ந்துகொண்டிருப்-பதை அவர்கள் அறிந்திருக்க முடியாதல்லவா? 'இனி, கடலைக் கடந்து அக்கரைக்குப் போய்ச் சேரும் வரை வேறு கப்பலைக் காணமுடியாது. இதுதான் நாம் காணும் மனித சமூகத்தின் கடைசி அடையாளம்,' என்று நாங்களும் அப்-போது ஊகிக்கவில்லை.

இருளில் முறைக்கிருவராக நாங்கள் சுக்கான் துடுப்-போடு ஈக்களைப்போல் ஒட்டிக்கொண்டிருந்தோம். அலைகள் வாரி அடித்ததனால் எங்கள் தலைமயிரிலிருந்து நீர் கொட்டி-யது. துடுப்புக் கட்டையில் அடிபட்டு எங்களுடைய உடம்புகள் முன்னும் பின்னும் சிவந்துவிட்டன. இறுகப் பற்றிக் கொண்டிருந்ததனால் கைகளும் சோர்ந்து செய-லற்றுப் போயின. இவ்வாறுகப் பயணத்தின் முதல் சில நாட்களில் எங்களுக்குக் கடுமையான பயிற்சி கிடைத்தது. கடலின்மீது சென்று அறியாத நாங்கள் அனுபவம் பெற்ற கடல்வாசிகள் ஆகிவிட்டோம். முதல் 24 மணி நேரத்தில்,

இடைவிடாமல் ஒவ்வொருவனும் இரண்டு மணி நேரம் சுக்கான் இழுத்தலும், மூன்று மணி நேரம் இளைப்பாறுவதுமாக இருந்தது. துடுப்புத் திருப்பிய முழுநேரமும் உடலில் ஒவ்வொரு தசையும் இழுக்கப்பட்டு துன்பத்திற்கு உள்ளானேம். துடுப்புத் தள்ளிக் களைத்துப்போனபோது, எதிர்ப்புறம் சென்று கயிறுகளை இழுக்கத்தொடங்கினேம். கைகளும் மார்பும் துடுப்பு அழுத்தியதால் நோவெடுத்தபோது முதுகுப்புறத்தை உபயோகித்தோம். ஆகவே, உடலெல்லாம் கறுத்துவிட்டது. வேலை முடிந்ததும் உடம்பைத் தள்ளிக்கொண்டு மூங்கிற் குடிசைக்குள் மெல்ல ஊர்ந்து சென்று, காலைச் சுற்றி ஒரு கயிற்றைக் கட்டிக்கொண்டு, தூங்கும் பைகளுக்குள் புகுந்தோம். ஆனல், அவ்வாறு புகுமுன்பே தூக்கம் எங்களைப் பிடித்துக் கொண்டது. தூங்க ஆரம்பித்த ஒரு கண நேரத்தில் கால்கயிறு முரட்டுத்தனமாக பிடித்து இழுக்கப்படும். அதற்குள் மூன்று மணி நேரம் ஒரு கணமாகக் கடந்துபோயிருக்கும். உடனே வெளியே சென்று வேலைசெய்யும் இருவரில் ஒருவரை விடுவிக்க வேண்டியிருக்கும்.

அடுத்த நாளிரவு இன்னும் மோசமாய் இருந்தது. அடங்குவதற்குப் பதில் கடல் குமுறிப் பொங்கியது. இரண்டு மணி நேரம் சுக்கானுடன் போராடுவதே முடியாத வேலை ஆகி விட்டது. எவனும் வேலை நேரத்தின் பிற்பகுதியில் களைப்பினல் பயனற்றுப் போவான். அப்போது கடல் எங்களை மிஞ்சிவிடும். நான்கு புறங்களிலும் எங்களை உருட்டித் தள்ளிக் கொண்டு, கட்டுமரத்தின்மேல் கடல் நீர் வந்து கொட்டும். இதனல் ஒருவனுக்கு ஒரு மணி நேரவேலையும் ஒன்றரை மணி நேர ஓய்வும் கிடைக்கும்படி எங்கள் திட்டத்தை மாற்றி அமைத்துக் கொண்டோம். சுமார் 60 மணி நேரத்துக்குத் தொடர்ச்சியாய் மேன்மேலும் அலைகள் எழுந்து எங்கள் மீது மோதின. நாங்களும் இடைவிடாமல் அவற்றுடன் போராடினேம். பெரிய அலைகள், சிறிய அலைகள், கூரிய அலைகள், மழுங்கிய அலைகள், சாய்வாகச் சென்ற அலைகள், ஓர் அலைக்குமேல் ஏறி நகர்ந்த மற்ற அலைகள் இவ்வாருக ஒரே குழப்பம். எங்களில் மிகவும் துன்பம் அடைந்தவன் நுட். அவனைச் சுக்கான் வேலையிலிருந்து விடுவித்திருந்தோம். அதற்குப் பதில்

அவன் வருணதேவனுக்குரிய தவத்தில் ஈடுபட்டான். அதாவது, கடற்பிணியால் அவதிப்பட்டுக்கொண்டு மூங்கிற்குடிசையின் ஒரு மூலையில் நொந்து கிடந்தான். கிளி, மனங்கசந்தது போல், முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டிருந்தது. கட்டுமரம் எதிர்பாராத வகையில் முன்பின்னாகச் சாய்ந்தாடியபோது கிளி சிறகுகளை அடித்து உலுக்கிக்கொண்டது. அலைகள் மேலும் மேலும் குடிசையின் மூங்கிற் சுவரில் மோதி விழுந்தன.

எங்கள் கோன்டிகி அதிகமாக பக்கங்களில் அலைப்புறவில்லை. அதே அளவில் செய்யப்பட்ட ஒரு படகு இதைவிட அதிகமாகச் சாய்ந்து ஆடியிருக்கும். அலைகளை அமைதியாகத்தான் எங்கள் கட்டுமரம் எதிர்த்து நின்றது. ஆனாலும், அடுத்த கணத்தில் மேல் தளம் எப்படிச்சாயும் என்று ஊகிக்க முடியவில்லை. பக்கங்களில் சாய்ந்த அதே அளவுக்குக் கட்டுமரம் முன்பின்னாகவும் சாய்ந்தது. ஆகவே, நிம்மதியாகப் பயமின்றி அங்குமிங்கும் தளத்தில் நடக்க எங்களால் முடியவில்லை.

மூன்றாம் இரவில், கடல் சிறிது அமைதி அடைந்தது. அப்போதும் காற்று பலமாக அடித்துக் கொண்டிருந்தது. சுமார் 4 மணிக்கு எதிர்பார்க்க முடியாமல் ஏதோ ஒன்று எங்களை இருளில் துரத்திக் கொண்டு வந்தது. நுரைகளின் ஊடே அது வந்து மோதிய வேகத்தில், சுக்கான் பிடித்தவன் என்ன நடக்கிறது என்று அறியுமுன்பே கட்டுமரம் சுழன்றுத் திரும்பிவிட்டது. பாய்த்துணி மூங்கிற்குடிசையின் மேல் மோதிற்று. துணியும் கிழிந்து, மூங்கிற்குடிசையும் விழுந்துவிடுமோ என்று பயந்தோம். நாங்கள் எல்லோருமே அப்போது வேலை செய்ய நேரிட்டது. கட்டுமரத்தை மறுபடியும் சரியான நிலைக்குக் கொண்டுவர எங்களால் ஆனவரை முயற்சித்தோம். மறுபடியும் பாய்த்துணி நிரம்பி முன்பக்கம் விரிந்து கொடுப்பதற்காக முயன்றோம். எங்கள் முயற்சி வீணாயிற்று. கட்டுமரம் முன்பின்னாகத் திரும்பிக் கொண்டு நகர ஆரம்பித்தது. கயிறுகளை இழுத்தும், பலகைகளைத் தள்ளியும், துடுப்பு வலித்தும் நாங்கள் கண்ட பலன் ஒன்றே. எங்களில் இருவர் கடலில் விழ இருந்தார்கள் ; இருளில் பாய்த்துணிக்குள் சிக்கிக்

கொண்டதால் விழாமல் பிழைத்தார்கள். இதைக் குறித்து நாங்கள் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தோம்.

சிறிது நேரத்தில் கடல் அமைதி பெற்றுவிட்டது. நாங்களோ சோர்வும், துன்பமும் அடைந்து, தோல் உரிந்த உள்ளங்கைகளும் துயில் நீங்காக் கண்களுமாக இருந்தோம். கால நிலை இன்னும் மோசமாகி எங்களை முழுச்சோதனைக்கு உட்படுத்துவதாய் இருந்தால் அதற்காக எங்கள் பலத்தைச் சேமித்து வைத்துக் கொள்வதே நல்லது அல்லவா? என்ன நிகழும் என்று யாருக்குத் தெரியும்! ஆகவே, நாங்கள் பாய்த்துணியை இறக்கி, மூங்கிற் கம்பைச் சுற்றிக் கட்டினோம். அப்போது அலைகள் ஒரு பக்கத்திலிருந்து வந்து கட்டுமரத்தில் அடித்துக் கொண்டிருந்தன. நெட்டியைப் போல் மிதந்தது எங்கள் கட்டுமரம். மேல்தளத்தில் இருந்த எல்லாவற்றையும் கயிறுகளைக் கொண்டு இறுகக் கட்டினோம். பிறகு நாங்கள் அறுவரும் குடிசைக்குள் சென்று சுருட்டிப் படுத்துக்கொண்டு, பெட்டிக்குள் அடைக்கப்பட்ட பிணங்களைப்போல் நன்ருய்த் தூங்கினோம். எங்கள் பயணத்தின் மிகக்கடினமான பகுதியைத் தாண்டி விட்டோம் என்பதை நாங்கள் அப்போது உணரவில்லை. கடலுக்குள் வெகுதூரம் சென்ற பிறகுதான், கட்டுமரத்தின் திசையைத் திருப்பிச் செல்வதில் இங்காக்கள் கைப்பற்றிய முறையை எங்களால் கண்டுபிடிக்க முடிந்தது. அவர்கள் கையாண்ட முறை எளிதானதாயும் மிகச் சாமர்த்தியமானதாயும் இருந்திருக்கவேண்டும்.

அடுத்த நாள் பொழுதேறிய பின்தான் நாங்கள் விழித்துக் கொண்டோம். கிளி கீச்சிட்டுப் பலவிதமாய்க் கூவி, இங்கும் அங்கும் தாவிப் பறந்து எங்களை எழுப்பி விட்டது. கடலில் அப்பொழுது பெரும் அலைகள் எழுந்து கொண்டிருந்தன. ஆனல், ஒரே சீரான ண்ட அலையோட்டம். அதற்கு முந்திய நாளைப் போல் கட் மீறிக் குழம்பிய கொந்தளிப்பு இல்லை. விழித்ததும் நாங்கள் கண்டது பரவசப்படுத்தும் இனிய இயற்கைக் காட்சி. மஞ்சள் மூங்கிலாலான மேல்தளத்தில் சூரியனின் கிரணங்கள் வந்து விழுந்தன. சூழ்புறக் கடலில் அக்கதிர்கள் பாய்ந்தமையால் கடலே ஒரு புதுமெருகுடன் பிரகாசித்துக் கொண்டி-

ருந்தது. கடல் புன்னகையுடன் எங்களிடம் நட்புக்கொள்ள வருவதுபோல் ஒரு பிரமை தோன்றிற்று. அலைகள் நுரைத்து எழுந்தால் எங்களுக்கு என்ன கவலை? கட்டு-மரத்தில் எங்கள் அமைதி சிறிதும் குலையவில்லை. நீர்க்-குன்றுகள் எங்கள் உயரத்துக்குக் கிளம்பி வந்தாலும் பயம் ஏன்? அடுத்த கணத்திலேயே உருளை செல்லு-வதைப் போல் கட்டுமரம் குன்றின் உச்சிக்குச் சென்று, நுரைத்த நீர் விளிம்பைச் சமப்படுத்தி விடும். பெரு நாட்-டில் பண்டைக் காலத்தில் இருந்த பொறிஇயலார் இதை நன்கு அறிந்திருந்தனர் போலும்! இதனுல் தான் அவர்கள் உட்குடைவான படகையோ, நீண்ட கப்பல்களையோ கட்ட-வில்லை. குடைந்த படகில் நீர் எளிதாக நிரம்பிவிடும். மிக நீண்ட கப்பல்களோ அலைகளை ஒவ்வொன்ருய்ச் சமாளிக்க முடியாதவை. இக்குறைகள் யாவும் இல்லாது இருந்தது பால்ஸா கட்டுமரம். நெட்டியினுல் ஆன ஒரு வட்ட உருளை-தான் அது.

நடுப்பகலில், கருவிகளைக் கொண்டு கடலில் நாங்கள் அப்போதிருந்த இடத்தைக் கண்டறிந்தான் எரிக். காற்று அடிக்கும் திசையில் சென்றதோடு கரையோரமாக வடக்-குத் திசையில் வெகுதூரம் நகர்ந்து விட்டோம் என்று தெரிய வந்தது. இன்னமும் நாங்கள் கரையிலிருந்து நூறு கடல்-மைல் தூரத்தில் ஹம்போல்ட் நீரோட்டத்தில் தான் இருந்-தோம். கலபாகோஸ் தீவுகளின் தெற்கில் இருந்த மோச-மான சுழல் நீரோட்டங்களில் போய்ச் சிக்கிக்கொள்-வோமோ என்ற பயம் எங்களுடைய மனத்தில் புகுந்தது. அப்படி நேர்ந்து விட்டால் அதன் விளைவுகள் மிக ஆபத்-தானவையாய் இருக்கும். மத்திய அமெரிக்காவில் கரையை நோக்கிச் சென்ற பலமான கடல் நீரோட்டங்கள் எங்களை எந்தத் திசையிலும் அடித்துச் சென்று விடலாம். அவ்வாறு இன்றி நாங்கள் எண்ணியபடி யாவும் நடந்தால், வடக்கில் [1] கலபாகோஸ் தீவுகளை நெருங்கு முன்னரே நீரோட்டத்தின் முக்கியமான பகுதியுடன் மேற்கு நோக்கித் திரும்பி விடலாம். காற்று இன்னமும் நேரே தென்கிழக்-கிலிருந்துதான் அடித்தது. பாய்மரத் துணியை மறுபடியும் விரித்தோம். கட்டுமரத்தைச் சரியான திசையில் திருப்பி,

1. Gallapagos.

நேரக் கணக்குப்படி எங்கள் வேலைத் திட்டத்தை மறுபடியும் ஆரம்பித்தோம். இதற்குள் நுட் கடற்பிணியின் தொல்லையிலிருந்து விடுபட்டான். அவனும் டார்ஸ்டைனும் அசைந்து கொண்டு இருந்த பாய்மரத்தின் மீதேறி, [1] அலைக் கம்பிகளுடன் ஏதோ பரிசோதனைகள் செய்தனர். பலூன்களிலும், காற்றுடிகளிலும் அலைக் கம்பிகளைப் பொருத்தி மேலே அனுப்பிப் பார்த்தனர். அவர்களுள் ஒருவன் மூங்கிற்குடிசையின் ஒரு மூலையிலிருந்து உரக்கச் சத்தமிட்டான். லீமாவிலிருந்த கடற்படை நிலையம் எங்களை அழைத்துக் கொண்டிருந்ததாகக் கூறினான். எங்களுக்குக் கடைசி முறையாக விடை தரவும், நாங்கள் எந்த நிலையில் இருக்கிறோம் என்று பார்க்கவும் அமெரிக்கத் தூதுவரின் விமானம் ஒன்று வந்து கொண்டிருப்பதாகச் செய்தி கிடைத்தது. விரைவில் அவ் விமானத்துடன் [2] வயர்லஸ் மூலமாகத் தொடர்பு கொள்ள முடிந்தது. மேலும் பயண திட்டச் செயலாளரான [3] கெரட்டு வோல்டு அந்த விமானத்தில் இருந்தார். ஆகவே, அவருடன் பேசும் வாய்ப்பு ஒன்று எதிர்பாராத வகையில் கிடைத்தது. கடலில் நாங்கள் இருந்த இடத்தின் அடையாளத்தை முடிந்த வரைப் பிசகின்றிக் கொடுத்தோம். பல மணி நேரத்துக்குத் திசைகாணும் குறிப்புக்களையும் அனுப்பினோம். மின் அலைகளின் மூலம் வந்த அவர்களின் குரல் விமானம் நெருங்கும்போது பலத்தும், அது விலகும்போது மெலிந்தும் கேட்டது. விமானத்தின் முன்விசிறி சுழலும் சத்தத்தை நாங்கள் கேட்கவில்லை. விமானத்தையும் நாங்கள் பார்க்கவில்லை. பள்ளக் கடலில் மிதந்து கொண்டிருந்த எங்கள் கட்டுமரத்தைக் கண்டு பிடிப்பது அவர்களுக்கும் எளிது அன்று. முடிவில், விமானம் எங்களைத் தேடும் வேலையை நிறுத்திக் கொண்டு கரைக்குத் திரும்பிவிட்டது. எங்களைத் தேட மனிதர் செய்த கடைசி முயற்சி இதுவேயாகும்.

பின்னர்ச் சில நாட்களுக்குக் கடலின் கொந்தளிப்பு அதிகமாய் இருந்தது. ஆயினும், தென் கிழக்கிலிருந்து சீறிக் கொண்டுவந்த அலைகள் ஒரே சீராய் வந்தன. ஆகவே, துடுப்பு திருப்பும் வேலை எளிதாயிற்று. அலைகளும் காற்றும்

---

1. Aerials 2. Wireless 3. Gerd Vold

கட்டுமரத்தின் இடதுபுறமிருந்து வருமாறு மாற்றிக் கொண்டோம். அதனுல், அதிகத் தடவை நனையாமல் அவன் தப்பிக்க முடிந்தது. கட்டுமரமும் ஆட்டமின்றி நிதானம் அடைந்தது; சுழல முயற்சிக்கவில்லே. நாளுக்கு நாள் தென்கிழக்கு வியாபாரக் காற்றும் ஹம்போல்ட் நீரோட்டமும் எங்களைத் தள்ளிக் கொண்டு சென்றது. நேரே கலபாகோஸ் தீவுகளைச் சுற்றி இருந்த எதிர் நீரோட்டங்களுக்குச் செல்லும் பாதையில் போய்ச் சேருவோமே, என்ற கவலே எங்கள் மனத்தில் குடிகொண்டது. வடமேற்குத் திசையில் நாங்கள் நகர்ந்த வேகமும் அதிகமாயிருந்தது. அப்போது நாளொன்றுக்குச் சாதாரணமாக 55 முதல் 60 கடல்மைல்கள் கடந்தோம். சிற்சில நாட்களில் 71 கடல்மைல்கள் கடந்ததும் உண்டு. "கலபாகோஸ் செய்தி என்ன? எல்லாம் சரியாக இருக்கிறதா?" என்று ஒரு நாள் மெல்லக் கேட்டான் 'நுட்'. பசிபிக் வரைப்படத்தைக் கூர்ந்து கவனித்தான். அதுவரை நாங்கள் தாண்டி வந்த இடங்கள் சிறு வட்டங்களாகக் குறிக்கப்பட்டு, வரைப்படத்தில் ஒரு முத்துச் சரமாகத் தோன்றியது. அந்த முத்துச் சரம் போன்ற கோடு நேரே கலபாகோஸ் தீவுகள் இருந்த திசையைச் சுட்டிக் காண்பித்தது. "எல்லாம் சரியாக எப்படி இருக்கும்? [1] டுபாக் யுபாங்கி என்ற இங்கா தலைவன் கொலம்பஸுக்குச் சற்று முன்னதாகவே பூமத்தியரேகைப் பகுதியிலிருந்து கலபாகோஸுக்குச் சென்றதாக ஒரு செய்தி உண்டு; ஆனுல், அவனே அவனைச் சார்ந்தவர்களோ அங்குக் குடிபுகவில்லே. காரணம் அங்குத் தண்ணீர் இல்லாததே ஆகும்," என்று நான் சொன்னேன். "பிறகு எப்படி?" என்று கேட்டான் நுட். நாமும் அங்கு போக மாட்டோம் என்று நம்புகிறேன். போக முடியாது என்பதும் உண்மைதான்," என்ருன். கடல் அலேகள் எங்களைச் சுற்றிக் கூத்தாடுவது எங்களுக்குப் பழக்கமான ஒரு நிகழ்ச்சியாய் விட்டது. அதைப்பற்றி நாங்கள் சிறிதும் கவலேயுறவில்லே. எங்கள் கட்டுமரம் அலேகளின் உச்சிமீது இருக்கும் வரை எவ்வளவு நாங்கள் ஆடிக் குதித்தாலும் கவலேயில்லே. ஆனுலும், ஒரு புதிய பிரச்னே எங்களுக்கு ஏற்பட்டது. எவ்வளவு காலம் இப்படி மிதக்க முடியும்? பால்ஸா மரங்கள் ஊறிப்-

---

1. Tupac Yupangui

போய் நீரை உறிஞ்சின என்பதைச் சுலபமாக நாங்கள் காண முடிந்தது. பின்புறம் இருந்த குறுக்குச் சட்டம் மற்ற கட்டைகளைவிட மோசமான நிலையில் இருந்தது. அதன்மீது விரலை வைத்து அழுத்தினல், விரல் உள்ளே அழுந்தும், நீர் வெளியே வரும்.

மற்றவர்களுக்குத் தெரியாமல், நான் நனைந்த மரத்தில் சிறிதளவு பிய்த்துக் கடலில் எறிந்தேன். அது மெல்லக் கீழே சென்று ஆழத்தில் மறைந்து விட்டது. ஒருவருக்குத் தெரியாமல் ஒருவர் இந்த பரிசோதனையைச் செய்தனர். நீர் உள் ஊறி நிரம்பியதால் மரம் பச்சைத் தண்ணீரினுள் ஆழ்ந்து விடுவதை அவர்களும் கூர்ந்து கவனித்தனர். கரையை விட்டுக் கிளம்பும்போது கட்டுமரம் நீருக்குள் எவ்வளவு ஆழ்ந்திருந்தது என்பதைக் குறித்துக் கொண்டிருந்தோம். ஆனல், குமுறும் கடலுக்குள் கட்டுமரம் எவ்வளவு ஆழ்ந்துவிட்டது என்பதை எங்களால் கண்டு பிடிக்க முடியவில்லை. ஒரு கணம் மரக்கட்டைகள் நீருக்கு வெளியில் எழும். மறுகணமே ஆழத்தில் அமிழ்ந்து விடும். ஆகவே, இதைப்பற்றி அறிந்து கொள்ள ஒரு பரிசோதனை செய்தோம். ஒரு மரக் கட்டையை எடுத்து அதில் ஒரு துளை செய்தோம். ஒரு அங்குல ஆழத்துக்கு ஈரம் இருந்தது. அதற்குக் கீழ் மரம் காய்ந்துதான் இருந்தது. இதே வேகத்துடன் நீர் கட்டைக்குள் ஊறுவதாய் இருந்தால் கவலையில்லை. ஏனென்றல், இந்தக் கணக்குப்படி எங்கள் பயணம் முடியும்போது கட்டுமரத்தின் தளம் நீர்மட்டத்துக்குச் சிறிதளவு இறங்கி மிதக்கும். மேலும், மரத்தினுள் நிரம்பி இருக்கும் [1] திரவசாரம் மரத்தினுள் நீர் பரவுதலைத் தடுக்கும் என்று நம்பினேம்.

முதல் சில வாரங்களுக்கு மற்றெரு வகையிலும் ஆபத்து நேரிடும் போலிருந்தது. கயிறுகள் மிக்க தொல்லை தந்தன. வேலை மிகுதியில் இதைப்பற்றிச் சிந்திக்கப் பகல் பொழுதில் எங்களுக்கு நேரம் இல்லை. ஆனல், இரவில் படுக்கைப்பைகளுள் புகுந்து கொண்டபின் நாங்கள் இதைப்பற்றிச் சிந்திப்போம், பேசுவோம், கேட்போம். மரக் கட்டைகளின்மீது கோரைப் பாய்கள் விரிக்கப்பட்-

1. Sap.

டிருந்தன. மரங்கள் மேலும் கீழும் அசையும்போது, அதற்கு ஏற்பப் பாயும் அசையும். கட்டுமரம் ஆடியதைத் தவிர, அதில் கட்டப்பட்டிருந்த தனி மரங்களும் ஒன்றுக்கொன்று கீழ்மேலாக அசைந்தன. ஒன்று மேலே வருமானல், மற்ருென்று அலையசைவுடன் கீழ்நோக்கிச் செல்லும். இந்த அசைவு அதிகம் இல்லை. எனினும், பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கும் ஒரு பிராணியின் முதுகில் படுத்திருப்பது போன்ற ஓர் உணர்ச்சி எங்களுக்கு ஏற்பட்டது. இதற்காக, கட்டைகளின்மேல் நீளவாட்டத்தில் நாங்கள் படுத்துக்கொண்டோம். முதல் இரண்டு இரவுகளில்தான் மிக மோசமான அனுபவம் ஏற்பட்டது. ஆனல், முற்றும் களைத்துப் போயிருந்ததால் அதைப்பற்றி அப்போது அதிகம் கவனிக்கவில்லை. வரவர, கயிறுகள் கடல்நீரில் ஊறிப்போய்ச் சிறிது பருத்துவிட்டன. ஆகவே, கட்டைகளின் அசைவுகள் சற்றுக் குறைந்தன. கட்டு மரத்தின் அடிப்பாகம் மேல் கீழாகவும், சுழன்றும் இயங்கிய போதெல்லாம் ஒவ்வொரு பகுதியும் ஆடி அதிர்ந்தது. மூங்கில்தளம், இரட்டைப் பாய்மரம், மூங்கிற் சுவர்கள், இலைகள் வைத்துக் கட்டிய கூரை — ஆகிய யாவும் கயிற்ருல் கட்டப்பட்டிருந்தன. ஆகவே, அவை எதிர் முறையில் மாறி, மாறி ஏறி இறங்கின. இந்த அசைவு கண்பார்வைக்கு விளக்கமாகத் தெரியவில்லை. எனினும், அசைவு இருந்தது உண்மைதான். கூரையின் ஒரு மூலை மேல் எழும்போது, மற்ருென்று கீழிறங்கியது. கூரையின் ஒரு பாதி முன்பக்கம் இழுக்கப்பட்டபோது, மறு பாதி பின்புறம் சாய்ந்தது. சுவரில் இருந்த இடுக்குகள் வழியாக வெளியே பார்த்தோம். மேற்கூறியவாறு அசைவும், உயிர் இயக்கமும் இருக்கக் கண்டோம். கடல் அலைகள் வானத்தைத்தொட எழும்போது, வானம் முழுதுமே வட்டமிட்டுச் சுழல்வதுபோல் தெரிந்தது.

அலைமோதும் வேகம் முழுவதையும் கயிறுகள் தாங்கிக் கொண்டன. இரவு முழுவதும் அவை முக்கி, முனகிக் கீச்சிடுவதைக் கேட்டோம். ஒவ்வொரு கயிறும் அதன் பருமனுக்கும், இறுக்கத்திற்கும் தகுந்தபடி ஒவ்வொரு வகையான ஒலியை எழுப்பியது. எல்லா ஒலிகளும் சேர்ந்து ஒரே ஓலமாகக் கேட்டது. கயிறுகள் யாவும் சேர்ந்து ஒரே குரலில் முறையிடுவதைப்போலவே இருந்தது. ஒவ்வொரு

காலையிலும் நாங்கள் கயிறுகளைக் கவனமாய்ச் சோதித்தோம். சில சமயம் கட்டுமரத்தின் அடிப்பக்கத்துக் கயிறுகள் சரியாய் இருக்கின்றனவா என்று பார்க்க வேண்டியிருக்கும். அப்போது இரண்டு மூன்று பேராகப் பிடித்துக்கொண்டு ஒருவனைத் தலைகீழாக நீரில் இறக்குவோம். இவ்வாறாக அடிக்கடிச் சோதித்து வந்தோம். கயிறுகள் சிறிதும் பிடிதளரவில்லை. "இக்கயிறுகள் பதினைந்து நாட்களுக்குத்தான் நீடிக்கும். அதற்குள் நைந்துவிடும்," என்று கடல் அனுபவம் மிக்க பலர் கூறியிருந்தார்கள். ஆனால் நாங்கள் பார்த்தவரைக் கயிறுகள் சிறிதும் தளராமல் இருந்தன. கடலில் வெகுதூரம் சென்ற பின்னரே இதன் காரணத்தை நாங்கள் அறியமுடிந்தது. பால்ஸா மரம் மிருதுவானது. ஆகவே, நீரில் ஊற ஊறக் கயிறுகள் மெல்ல மரத்தில் அழுந்திப் பாதுகாக்கப்பட்டன. மரத்தினால் கயிறுகளுக்குச் சிறிதும் சேதம் ஏற்படவில்லை.

ஒரு வாரத்துக்குப்பின் கடல் சிறிது அமைதி அடைந்தது. பசுமையாய் இருந்த கடல் நீலமாய் இருப்பதைக் கண்டோம். வடமேற்குத் திசையில் சென்றுகொண்டிருந்த நாங்கள் இன்னும் சிறிது மேற்குத் திசையில் திரும்பிச் செல்ல ஆரம்பித்தோம். கரையோரத்து நீரோட்டம் கடலுக்குள் அதிகதூரம் செல்லமுடியும் என்பதற்கு இதை முதல் அறிகுறியாகக் கொண்டோம்.

கடலில் தனியாக விடப்பட்ட முதல் நாளே கட்டு மரத்தைச் சுற்றிலும் மீன்கள் நீந்தி வரக்கண்டோம். ஆனால், அப்போது துடுப்பு வலிப்பதில் முழு கவனத்தையும் செலுத்த வேண்டி இருந்ததால் மீன்களைப்பற்றி நாங்கள் சிந்திக்கவேயில்லை. இரண்டாம் நாள் "ஸார்டைன்" மீன்கள் அடர்ந்த ஒரு கடற் பகுதிக்குள் நாங்கள் செல்ல நேரிட்டது. விரைவில் ஒரு சுரு மீன் கட்டுமரத்து அருகில் வந்தது. அதன் நிறம் கருப்பு, நீளம் சுமார் 8 அடி. அது பின்புறக் கட்டையில் உராய்ந்து கொண்டு, வெண்மையான தன் கீழ்ப்பாகம் மேலே தெரியும்படிப் புரண்டு ஓடியது. அப்போது ஹெர்மனும், பெங்டும் சுக்கானைக் கவனித்துக் கொண்டிருந்தனர். பின்புறத்திலிருந்து வந்து மோதிய அலைநீர் சிதறி அவர்களை

நனைத்துக்கொண்டிருந்தது. சுரு மீன் சிறிது நேரம் எங்களைச் சுற்றிச் சுற்றி வந்தது. எறிந்து கொல்லும் கை ஈட்டியை நாங்கள் தயார் செய்து கொண்டதும் அது மறைந்து விட்டது. அடுத்த நாள், பலவகை மீன்கள் கட்டு மரத்துக்கு அருகில் வந்தன. ஒரு பெரும் பறக்கும் மீன் தளத்தில் வந்து விழுந்தது. உடனே அதைப் பிடித்துத் தூண்டில் இரையாக உபயோகித்தோம். சிறிது நேரத்துக்குள் இரண்டு பெரிய டால்பின் மீன்கள் பிடிபட்டன. ஒவ்வொன்றும் 20 முதல் 35 பவுண்டு வரை நிறை உள்ளது. இவற்றைப் பல நாட்களுக்கு ஆகாரமாகக்கொண்டோம். துடுப்பைப் பிடித்து வேலை செய்யும்போது, அதுவரை கண்டறியாத பல புதுவகை மீன்களைப் பார்த்தோம். ஒரு நாள் [1] பார்பாய்ஸ் என்னும் கடற்பிராணிகளின் கூட்டம் ஒன்றுக்குள் புகுந்தோம். அவை கரிய முதுகுகளைக் கொண்டவை; எண்ணிறந்தவை, இங்கும் அங்கும் நெருக்கமாக நீந்தித் திரிந்தன. கண்ணுக்கு எட்டிய தூரம் வரை பரவி, அடிக்கடிக் கடல் மட்டத்துக்கு மேல் எழும்பிப் பாய்ந்தன. பூமத்தியரேகைப் பகுதியை அணுக அணுக, பறக்கும் மீன்களின் எண்ணிக்கை அதிகரித்தது. முடிவில் சூரிய ஒளியினால் அழகு பெற்று, காற்றின் விசையில் குமுறிக் கொந்தளிக்கும் கம்பீரமான நீலக் கடலுக்குள் புகுந்தோம். பறக்கும் மீன்கள் அம்புகளைப்போல் மின்னி விசும்பினுள் பாய்வதையும், பின் வேகம் குறைந்து நீருக்குள் விழுந்து மறைவதையும் கண்டோம். இரவில் மெழுகு விளக்கை வெளியே வைத்தால், அதன் ஒளியினால் கவரப்பட்டுப் பெரிதும் சிறிதுமான மீன்கள் கட்டுமரத்தின்மேல் பாயும். அடிக்கடி மூங்கிற் குடிசையின் மேலோ, பாய்த் துணியின் மேலோ மோதிச் செயலற்று மேல்தளத்தில் விழுவதும் உண்டு. நீருக்குள் நீந்திப் பாய்வதுபோல் அல்லாமல், தளத்தில் விழுந்தபின் அவை சக்தியற்றுத் துள்ளிக்கொண்டு கிடந்தன. சில சமயங்களில் ஒரு மீன் பறந்து வந்து தளத்தில் நிற்பவனை முகத்தில் அடித்துவிடும். அவன் ஆத்திரம் பொங்கப் பலவாறுகத் திட்டுவான். எப்போதுமே இந்த மீன்களுக்கு வேகம் அதிகம். பறக்கும்போது மூக்கை முன்னால் நீட்டிக்கொண்டு பாயும். ஒரு தடவை வந்து முகத்தில் மோதினால், அறைந்ததுபோல்

1. Porpoise.

நோவு உண்டாகும். ஆயினும், அறைவாங்கினவன் வெகு சீக்கிரத்தில் நோவை மறந்து விடுவான். ஏனெனில், நாங்கள் வசித்தது ஒரு மாயவுலகம் போன்றிருந்தது. நம்பமுடியாத பல காரியங்கள் நிகழ்ந்தன. எங்களுடைய விருந்துக்கென சுவைக்கினிய மீன்கள் காற்றிற் பறந்து வந்து எங்கள் காலடியில் விழுந்தன. அவற்றைக் காலே நேரங்களில் வறுத்துச் சாப்பிட்டோம். மீனின் இயல்போ, சமையற்காரனின் திறமையோ, எங்கள் பசியோ—காரணம் எதுவாயினும் சரி, அதன் சுவை எங்களுக்கு அளவிலா இன்பத்தை அளித்தது. காலேயில் எழுந்ததும் தளத்-திற்குச் சென்று இரவில் வந்து விழுந்திருந்த பறக்கும் மீன்களேச் சேகரிப்பதே சமையற்காரனின் முதல் வேலே. சாதாரணமாக நாளொன்றுக்கு ஆறுக்குக் குறையாமல் மீன்கள் கிடைக்கும். ஒரு நாள் காலேயில் பறக்கும் கொழுத்த மீன்கள் 26 கிடைத்தன.

ஒரு நாள் காலே டார்ஸ்டைன் விழித்து எழுந்ததும் ஒரு மீன் தலேயணேயிற் கிடக்கக் கண்டான். அது [1] ஸார்டைன் என்னும் வகையைச் சேர்ந்தது; உருவத்தில் சிறியது. கடலுடன் நாங்கள் கொண்டிருந்த நட்புரிமை அப்போது-தான் அவனுக்குப் புலனுயிற்று. மூங்கிற் குடிசைக்குள் இடம் போதாமையால், டார்ஸ்டைன் வாயிற்புறத்தில் தலேவைத்-துப் படுத்துக்கொண்டிருந்தான். இரவில் யாரேனும் கால்களால் அவன் முகத்தில் மோதிவிட்டால், உடனே காலேக் கடித்துவிடுவான். ஆகவே, டார்ஸ்டைனுக்கு அதிக இடம் விடவேண்டுமென்றே எங்கள் கால்களே உள்ளிழுத்-துக்கொண்டு படுத்துக்கொள்வோம். ஒரு நாள் இரவு வானம் மூடி இருள் கவிந்திருந்தது. இரவில் வேலே செய்ய வெளியே செல்பவர்கள் கவனமாய் நடப்பதற்காக, டார்ஸ்டைன் ஒரு எண்ணெய் விளக்கைத் தன் தலேக்கருகில் வைத்துக்கொண்டு தூங்கினுன். சுமார் நான்கு மணிக்கு விளக்கு உருண்டு விழுந்து அணேந்து போயிற்று. உடனே ஈரமான ஏதோ ஒன்று அவன் காதில் ஓசைப்படுத்தியது. அவன் திடுக்கிட்டு எழுந்தான். பறக்கும் மீன் என்று நினேத்தான், அதை எடுத்து எறிவதற்கு இருளில் கைகளால் துழாவினுன். நீண்டு, குளிர்ந்து, பாம்புபோல்

1. Sardine.

நெளிந்த ஏதோ ஒன்று கைகளுக்குத் தட்டுப்பட்டது. கை-சுட்டதுபோல் அதைத் தூரத்தள்ளினன். அதற்குள் அது நெளிந்து கொண்டு ஹெர்மனின் அருகில் சென்றுவிட்டது. அதற்குள் டார்ஸ்டைன் விளக்கை ஏற்ற முயற்சித்தான். ஹெர்மனும் திடுக்கிட்டு விழித்தான். நானும் எழுந்தேன். விளக்கை ஏற்றிப் பார்த்தோம். ஹெர்மன் வெற்றி நிரம்பிய பார்வையுடன் உட்கார்ந்திருந்தான். அவன் கையில் நீண்டு மெலிந்த மீன் ஒன்று இருந்தது. அதன் கழுத்தை அவன் இறுகப் பிடித்துக் கொண்டிருந்தான். அந்த மீன் மூன்று அடிக்குமேல் நீளமாய் இருந்தது. கண்கள் மங்கிய கரு நிறம் உடையனவாய் இருந்தன. முகம் நீண்டு இருந்தது. தாடைகளில் கூரிய நீண்ட பற்கள் செறிந்திருந்தன. வேல் போல் கூரிய பற்கள் வாயின் மேலண்ணத்தில் பின்புறமாக மடக்கக்கூடிய வகையில் அமைந்திருந்தன.

ஹெர்மன் பிடித்த பிடியில், அதன் வயிற்றிலிருந்து கிளம்பி ஒரு மீன் வெளிவந்தது. அது சுமார் 8 அங்குல நீளமும் பெரிய கண்களும் உடைய ஒரு வெள்ளை மீன். சில நிமிடங்களுக்குள் மற்ருெரு மீனும் வெளியே வந்தது. இவ்விரண்டு மீன்களும் கடலின் ஆழத்தில் வசிக்கும் இனத்-தைச் சேர்ந்தவை. பெரிய மீனின் பற்களால் அவற்றின் மேற்புறம் கிழிபட்டிருந்தது. பெரிய மீனின் தோல் மெலிந்-திருந்தது. மேல்பக்கம் கருத்த நீல நிறமாகவும், அடிப்-பக்கம் எஃகு கலந்த நீல நிறமாகவும் இருந்தது. நாங்கள் அதைப் பிடித்தபோது அதனுடைய தோல் சிறிதளவு உரிந்து வந்துவிட்டது. நாங்கள் அனைவரும் செய்த சத்தத்தில் பெங்டும் விழித்துக்கொண்டான். விளக்கையும், அந்த நீண்ட மீனையும் அவனருகில் கொண்டுபோய்க் காண்பித்தோம். மெல்ல எழுந்து உட்கார்ந்துகொண்டு, துயில் நீங்காத கண்களுடன் ஒருமுறை அதைப் பார்த்-தான். "இம்மாதிரி மீன் இருக்கவே முடியாது," என்று சொல்லிக்கொண்டு, அமைதியாகப் புரண்டு படுத்து மறு-படியும் உறங்கிவிட்டான். 'பெங்ட்' கூறியதும் அதிகத் தவறல்ல. மூங்கிற் குடிசையில் விளக்கைச் சுற்றி உட்-கார்ந்திருந்த நாங்கள் அறுவருமே இந்த மீனை முதன் முதலில் கண்டவர்கள். எங்களுக்கு முன் இதைக் கண்ட-வர்களில்லை. இம்மாதிரி மீன்களின் எலும்புக்கூடுகள் சிற்சில சமயங்களில் தென் அமெரிக்காவிலும் கல-

பாகோஸ் தீவுகளிலும் கடலோரமாகக் கண்டெடுக்கப்பட்டன. விஞ்ஞானிகள் இதற்கு [1] 'கெம்பைலஸ்' அல்லது [2] 'பாம்புமீன்' என்று பெயரிட்டிருந்தார்கள். இதுவரை இதை உயிரோடு ஒருவரும் பார்த்ததில்லை. ஆதலால், கடலினுள் வெகு ஆழத்தில் இது வசிப்பதாகத் தான் எல்லோரும் எண்ணினர்கள். ஆனல், உண்மை இது அன்று. பகற்பொழுதில் சூரிய ஒளி மிக்கிருக்கும்போது இதன் கண்கள் மங்கிவிடும். ஆகவே, கடலுக்குள் ஆழ்ந்திருக்கும். ஆனல், இரவு நேரங்களில் இது கடல் மட்டத்துக்கு வந்துவிடும். இந்த அனுபவம் எங்களுக்கு ஏற்பட்டது. டார்ஸ்டைனின் தூங்கும் பையில் பாம்புமீன் வந்து விழுந்த ஒரு வாரத்துக்குப் பின் மற்ெருரு முறை இவ்வகை மீன் மேல்தளத்துக்கு வந்து சேர்ந்தது. அப்பொழுதும் காலை சுமார் நான்கு மணி. இளம் பிறை மறைந்து இருள் சூழ்ந்திருந்த நேரம். விண்மீன்கள் பிரகாசித்துக்கொண்டிருந்தன. கட்டுமரம் எளிதாகச் சுக்கானுக்குக் கட்டுப்பட்டு நகர்ந்துகொண்டிருந்தது. என்வேலை முடிந்துவிட்டதால், மேல்தளத்தின் ஓரத்தில் எல்லாம் சரியாக இருக்கிறதா என்று ஒருமுறைச் சுற்றிப்பார்த்தேன். என் இடையைச் சுற்றி ஒரு கயிறு கட்டப்பட்டிருந்தது. கையில் எண்ணெய் விளக்கு ஒன்று இருந்தது. நான் பாய்மரத்தைச் சுற்றிக்கொண்டு போகும் முயற்சியில், கட்டுமரத்தின் ஓரத்தில் ஜாக்கிரதையாக நடந்தேன். ஈரமாய் இருந்த விளிம்புக் கட்டை வழுக்கிற்று. யாரோ பின்புறமிருந்து கயிற்றைப் பிடித்து இழுத்ததுபோல் தோன்றிற்று. நிலை தடுமாறி விழ இருந்தேன். ஒருவாறு சமாளித்துக்கொண்டு கடுங்கோபத்துடன் திரும்பிப் பார்த்தேன். ஒருவரும் காணப்படவில்லை. அடுத்த கணத்தில் மறுபடியும் கயிறு இழுக்கப்பட்டது. கவனித்துப் பார்த்தேன். மேல்தளத்தில் பளபளப்பாக ஏதோ ஒன்று நெளிந்தது—மற்ெருரு பாம்பு மீன் ! கயிற்றைத் தன் பற்களுக்கு இடையே இறுகக் கடித்துக்கொண்டு கிடந்தது. கயிற்றைப் பிடித்து இழுத்தேன். புரிகள் பல அறுந்துபோயின. ஆயினும், கயிறு வந்த பாடில்லை. விளக்கின் ஒளியில் வெள்ளைக் கயிறு அழகாக மின்னியிருக்கவேண்டும். ஏதோ சுவை மிகுந்த இரைபோலும் என்று எண்ணி பாம்பு மீன் ஆழத்திலிருந்து

1. Gempylus 2. Snake mackerel

வந்து அதைப் பிடித்திருக்க வேண்டும். காரணம் எதுவாயினும், அதன் பிடியிலிருந்து கயிற்றை மீட்பது மிகவும் கடினமாய் இருந்தது.

கட்டுமரத்தின் தளத்தைக் கடல் மட்டத்திற்குச் சமமாக அமைத்துக்கொண்டு, சத்தம் செய்யாமல் மெல்ல மிதந்து போவோமானல், கடலில் பற்பல விந்தைகளைக் காணலாம். காட்டில் சந்தடி செய்துகொண்டு சுற்றி அலைந்துவிட்டு வரும் மனிதன் விலங்குகளையே பார்க்கவில்லை என்றுதான் கூறுவான். ஆனல், அவனே அமைதியாகப் போய் ஒரு மரத்தின்மீது உட்கார்ந்துகொண்டு காத்திருக்கட்டும். எத்தனை எத்தனை அற்புதங்கள் காட்டில் நிகழ்கின்றன என்பது தெரியும். இதே போலத்தான் கடலிலும். பெரும் இயந்திரங்களின் துணைகொண்டு உறுமிக்கொண்டும் கடல் நீரைக் கிழித்துக்கொண்டும் வேகமாகச் செல்கிறோம். ஆகவே, நமக்கு அற்புதம் ஒன்றும் காணக் கிடைப்பதில்லை.

கடல் மட்டத்தில் மிதந்துகொண்டு இருந்த எங்களைப் பற்றி அறிந்துகொள்ளும் ஆவல் உடையனபோல் எத்தனையோ புதிய பிராணிகள் எங்களைச் சூழ்ந்துகொண்டு வளைந்து நெளிந்தன. அவற்றிலும் டால்பின் மீன்களும், சுருமீனுடன் திரியும் சிறிய வழிகாட்டி மீன்களும் எங்களை விட்டுப் பிரியாமல் தொடர்ந்து வந்தன. இரவில் இருண்ட வானில் விண்மீன்கள் மின்னி ஒளிரும் அதே சமயத்தில் கடலில் இருந்தும் ஒருவகை ஒளி எழும். கடல் நீருடன் சிதறி எங்கள் கால்களில் ஏதோ சிறு துண்டுகள் வந்து விழும். உடனே கால்களை உள்ளிழுத்துக்கொள்வோம். அவற்றை எடுத்துப் பார்த்ததில் அவை ஒருவகை நீர்வாழ்ப் பிராணிகள் என்பது தெரிந்தது. திடீரென்று கடலுக்குள்ளிருந்து இரண்டு வட்ட விழிகள் கட்டுமரத்துக்கு அருகில் மேலெழும்பி வந்து, இமைகொட்டாமல் வெறித்து நோக்கும். அதைக்கண்டு பலமுறை பயந்தும் இருக்கிறோம். கடலுக்கு உரிய தேவனே வந்து எங்களைக் கவனிப்பதாகத் தோன்றும். இவை பெரும்பாலும் [3] 'ஸ்க்விட்' என்ற வகையைச் சேர்ந்தவை. பெரிய உருவமும் பச்சை ஓடிய பேய்க்கண்களும் உடையவை. இருளில் கண்கள் ஒளி வீசும். நீர்

1. Squid

மட்டத்தில் இவை மிதக்கும். இவையேயன்றி, கடலின் ஆழத்தில் வாழும் பலவகை மீன்களும் கூட இருளில் நீர் மட்டத்துக்கு வரும். அப்போது அவற்றின் கண்களும் பளபளத்தன. விளக்கின் ஒளியில் மயங்கி இவை வெறித்துப் பார்த்தன.

கடல் அமைதியாய் இருந்தபோது பலமுறை கட்டுமரத்தைச் சூழ்ந்த கருநீரில் திடீரென்று பல உருண்டைத் தலைகள் தெரியும். ஒவ்வொன்றும் 2 அல்லது 3 அடி அகன்று இருக்கும்; அசைவற்று இருக்கும்; பேரொளி வீசும் கண்களுடன் உற்றுப்பார்க்கும். வேறு சில இரவுகளில் 3 அடி அல்லது அதற்கும் மேற்பட்ட அகலம் உடைய ஒளி உருண்டைகள் நீரினுள் காணப்படும். மின்சார விளக்குகளை ஏற்றி அணைப்பதுபோல், இவை இடைவிடாமல் பளிச்சிடும். இம்மாதிரி ஆழத்தில் வசிக்கும் பிராணிகளுடன் நாளடைவில் எங்களுக்குப் பழக்கம் ஏற்பட்டுவிட்டது. ஆனால், புது வகையாக ஒன்றைக் காணும் போதெல்லாம் அளவு கடந்த வியப்பு ஏற்படும். ஒரு நாள் இரவு சுமார் 2 மணி இருக்கும். நீரின் கருமையும் வானத்தின் கருமையும் ஒன்றுபட்டுத் தோற்றம் அளித்தன. துடுப்பைக் கவனித்துக் கொண்டிருந்தவர்களுள் ஒருவன் நீரில் ஒளி தோன்றுவதைக் கண்டான். மெல்ல இது தெளிவடைந்து ஏதோ ஒரு பிராணியின் உருவமாகத் தெரிந்தது. அதன் மேல் தோலுக்கே ஒளி வீசும் இயல்பு உண்டோ, அல்லது ஒளி வீசும் இயல்புடைய ஏதேனும் ஒரு பொருள் அதன் மேல் ஒட்டிக்கொண்டு இருந்ததோ, தெரியவில்லை. ஒரு கணம் உருண்டையாகவும், மறுகணம் நீண்ட முட்டை உருவமாகவும், பின் முக்கோணமாகவும் தன் உருவை மாற்றிக்கொண்டே இருந்தது. திடீரென்று இரண்டாய்ப் பிரிந்து, ஒவ்வொன்றும் தனித் தனியே கட்டுமரத்தின் அடியில் நீந்தித் திரிந்தது. முடிவில் இந்தப் பருத்த பேய்த் தோற்றங்களில் மூன்று எங்களடியில் மெல்ல வட்டம் இடுவதைக் கண்டோம். உண்மையிலே அவை ராட்சஸப் பிராணிகள். அவற்றில் ஒவ்வொன்றும் 30 அடிக்கு மேல் நீளம் உடையது. நாங்கள் அனைவரும் தளத்தில் ஒன்றாய் வந்து நின்றுகொண்டு கவனித்தோம். கட்டுமரம் மணிக் கணக்கில் நகர்ந்தது. ஆயினும், அதைப் பின் தொடர்ந்து இந்தப் பேயாட்டமும் நிகழ்ந்தது. கட்டு மரத்தில் விளக்கு

வைக்கப்படிருந்த வலப் புறத்திலேயே அநேகமாக இவை நெளிந்து கொண்டிருந்தன. எனினும், அவ்வப்போது கட்டு மரத்துக்கு நேர் கீழாகவும் இடப்புறமாகவும் கூட வந்தன. இவற்றின் முதுகில் தோன்றிய ஒளிப் பிழம்பிலிருந்து இவை யானைகளை விட உருவத்தில் பெரியவை என்பது விளங்கிற்று. இவற்றைத் திமிங்கிலங்கள் என்று கூற முடியாது. ஏனெனில், மூச்சு இழுப்பதற்காக இவை நீர் மட்டத்துக்கு வரவேயில்லை. வேறு எவ்வகையைச் சேர்ந்தவை என்று கண்டுபிடிக்க முயற்சித்தோம். ஆனால், எங்களால் முடியவில்லை. இவற்றைக் கவருவதற்காக விளக்கை நீர் மட்டத்துக்கு மிக அருகில் பிடித்தோம். அப்போதும் இவை சட்டை செய்யவில்லை. பேய்களும் குட்டிச் சாத்தான்களும் இரவில் உலவித் திரியும் என்றும், விடியுமுன்பு எங்கேயோ சென்று மறையும் என்றும் சொல்லுவதுண்டு. அதே போன்று இப்பிராணிகளும் கிழக்கு வெளுக்குமுன் ஆழத்திற் சென்று மறைந்து விட்டன. இரவில் வந்த இம் மூன்று அரக்கர்களைப் பற்றிய செய்திகள் எங்களுக்குக் கிடைக்கவேயில்லை. ஆனால், பின்னொரு நாள் நடந்த நிகழ்ச்சி ஒன்று சிறிது ஊகிக்கச் செய்தது.

அன்று மே 24-ம் தேதி. நடுப்பகல் நேரம். கட்டுமரம் மெல்ல ஊர்ந்து சென்று கொண்டிருந்தது. அன்று காலையில் பிடிபட்ட இரண்டு பெரிய டால்பின் மீன்களின் குடற்பாகங்களை நீரில் வீசி எறிந்தோம். கட்டுமரத்தின் முன்புறத்தில் நான் அலுப்புத் தீர நீரில் மூழ்கிக் குளித்துக் கொண்டிருந்தேன். திடீரென்று ஒரு மீன் தென்பட்டது. நீளம் 6 அடி இருக்கும். பருத்துப் பழுப்பு நிறமாய் இருந்தது. ஸ்படிகம் போன்று தெளிந்த கடல் நீரில் அது நீந்தி வந்ததைக் கண்டேன். உடனே கட்டு மரத்தின் விளிம்பில் தாவி ஏறி, வெய்யிலில் உட்கார்ந்தபடியே அம் மீனைக் கவனித்துக் கொண்டிருந்தேன். திடீரென்று ஒரு கூச்சல். "சுறுமீன்" என்று தொண்டை கிழியக் கத்தினான் நுட். ஒவ்வொரு நாளும் சுறுமீன்கள் எங்களைச் சுற்றி உலாவிக் கொண்டிருந்தன. ஆகவே, ஏதோ ஒரு புதுமை என்று எண்ணி நாங்கள் எல்லோரும் ஓடிச் சென்று நுட் இருந்த இடத்தில் கூடினோம். இதற்குச் சற்று முன்புதான் நுட் அங்கே கால்களை மடித்துப்போட்டு உட்கார்ந்து கொண்டு, தன் துணியை நீரில் அலசிக் கொண்டிருந்தான். ஒரு

கணம் அவன் நிமிர்ந்து பார்த்தபோது ஏதோ பயங்கரமான ஓர் உருவம் அவன் எதிரில் தோன்றியது. கடல் அரக்கனே தான் என்று அவன் நினைத்தான். அவ்வுருவத்தின் முகம் மிகப் பெரிதாகவும், பயங்கரமாகவும் இருந்தது. தவளையைப் போன்று அகன்று தட்டையான முகம். இரு சிறிய கண்கள். நான்கைந்து அடி அகன்ற தாடை. இந்த தலைக்குப்பின் அதன் அரக்கவுடல் ஒரு நீண்ட மெலிந்த வாலில் போய் முடிந்தது. அதன் வால் சிறகு கூர்மையாய் நேராய் நின்றது. ஆகவே, இக் கடல் அரக்கன் திமிங்கில வகையைச் சேர்ந்தவன் அல்லன் என்று தெரிந்துகொண்டோம். நீருக்குள் அதன் உடல் கரும் பழுப்பாகத் தெரிந்தது. தலையிலும் உடலிலும் எண்ணற்ற வெள்ளைப் புள்ளிகள் தெரிந்தன. அமைதியாகப் பின்புறத்திலிருந்து எங்களை நோக்கி வந்த இப்பிராணி காவல் நாயைப் போல வாயை இளித்துக் காட்டி, வாலை மெதுவாக அசைத்தது. முதுகுப்புறம் இருந்த பெரிய வட்டச் சிறகு நீருக்கு வெளியே நன்றாகத் தெரிந்தது. சில சமயங்களில் வால் சிறகும் வெளியே வந்தது. அது நகரும்போது ஒரு பெரிய பாறையே நகருவது போலத் தோன்றிற்று. அதற்கு முன்னால் உடலில் வரிகள் உடைய வழி காட்டும் மீன்களின் கூட்டம் ஒன்று நீந்திச் சென்றது. அதன் உடலில் பல மீன்கள் ஒட்டிக் கொண்டிருந்தன. 25 பவுண்டு எடையுள்ள டால்பின் ஒன்று எங்களுடைய தூண்டிற் கொக்கிகளில் மாட்டப்பட்டு, சுரு மீன்களைப் பிடிப்பதற்காகக் கட்டு மரத்தின் பின்னால் தொங்கவிடப்பட்டிருந்தது. மேற்கூறிய வழிகாட்டும் மீன்களில் சில நேரே பாய்ந்து வந்து டால்பினைத் தொடாமல் மூக்குகளால் ஆராய்ந்து பார்த்து விட்டுத் திரும்பிச் சென்றன. முடுக்கி விடப்பட்ட ஒரு பொறி இயங்குவதைப்போல் அக்கடல் அரக்கன் மெல்ல நகர்ந்து டால்பின் மீனருகில் வந்தது. அதன் வாய்க்கு டால்பின் ஒரு மிகச் சிறிய துண்டுதான். டால்பினை உள்ளே இழுத்துக்கொள்ள நாங்கள் முயற்சித்தோம். கடலரக்கனும் கட்டு மரம் வரையிலும் அதைத் தொடர்ந்து வந்தது. அதன்மேல் சிறிது மோதிற்று. தன் வாயை அது திறக்கவில்லை. தினைத்துணை ஆகாரத்துக்காகத் தன் வாயைத் திறந்து மூடுவது அவசியமன்று என்று நினைத்தது போலும்! கட்டு மரத்தின் அருகில் வந்ததும் சுக்கான் துடுப்பில் தன் முதுகைத்

தேய்த்துக் கொண்டது. துடுப்பை நீருக்குமேல் தூக்கி, அதை மிகவும் நெருங்கிப் பார்த்தோம். கற்பனை உலகத்திலும் நம்ப முடியாத இக் காட்சியைக் கண்டு பரப்பரப்பாக உரக்கச் சிரித்தோம். எங்களுக் கெல்லாம் பித்துப் பிடித்து விட்டதோ என்று கூட ஒருகணம் நான் நினைத்தேன். தலைசிறந்த ஓவியர் தன் முழுக் கற்பனையின் பலத்தையும் உபயோகித்திருந்தால் கூட, இத்தகைய, மயிர் கூச்செறியும்படியான உருவத்தைச் சிருஷ்டித்திருக்க முடியாது. இவ்வாறு நாங்கள் கண்ட கடல் அரக்கன் ஒரு திமிங்கலச் சுரு. சுருமீன்களில் மட்டும் அன்றி, மீன் வகைகளிலேயே மிகப் பெரியது, அபூர்வமானது. வெப்பம் மிகுந்த கடற் பகுதிகளில் எப்போதாவது இதைக் காண முடியும். இது சாதாரணமாக 50 அடி நீளமும் 15 டன் எடையும் உடையது. பெரிய திமிங்கலச் சுரு 65 அடி நீளம் இருக்குமாம். ஒரு குட்டியின் ஈரல் மட்டும் 600 பவுண்டு எடை உள்ளது. அதன் அகன்று விரிந்த தாடை ஒவ்வொன்றிலும் சுமார் 3000 பற்கள் உண்டு.

அது எங்களைச் சுற்றி வட்டம் இட்டது. அதன் உருவத்தைக் கண்டு சிரிக்காமல் இருக்க எங்களால் முடியவில்லை. எங்களைத் தாக்க அது முற்பட்டால், அதன் வாலொன்றே எங்களுடைய கட்டுமரத்தையும் கயிறுகளையும் துண்டு துண்டாகச் சிதைக்கப் போதுமானது. கட்டுமரத்தின் அடியில் அது வட்டமிட்டபோது என்ன நிகழுமோ என்று எதிர்பார்த்து நிற்பதைத் தவிர எங்களால் வேறொன்றும் செய்யக்கூடவில்லை. வரவர வட்டங்களும் சிறிதாயின. சுற்றிவரும்பொழுது அது துடுப்புக்கட்டையின் அடியில் ஊர்ந்து, நகரும் கால்கட்டையே மேலே தூக்கப்பட்டு, துடுப்புப் பலகை அதன் முதுகின்மேல் உராய்ந்தது. கை ஈட்டிகளைத் தயாராக்கிக் கொண்டு கட்டுமரத்தில் ஆங்காங்கு நின்று கொண்டோம். இவ்வளவு பெரிய பிராணியைச் சமாளிக்கும் வேலையில் கையீட்டி என்பது வெறும் பல்குச்சி போலத்தான் தோன்றியது. அது எங்களைவிட்டு நீங்கும் என்பதற்கு அறிகுறிகள் இல்லை. அது எங்களைத் தொடர்ந்து வந்தது.

இவ்வாருக சுமார் ஒரு மணி நேரம் திமிங்கிலச் சுரு எங்களை வட்டமிட்டது. முடிவில் ‘எரிக்’கின் ஆத்திரம்

உச்சத்தை அடைந்து விட்டது. அவன் அப்போது கட்டு-மரத்தின் ஒரு மூலேயில் நின்று கொண்டிருந்தான். அவன் கையில் எட்டடி நீளமான ஈட்டி ஒன்றிருந்தது. யாரோ கூச்-சல் இட்ட சத்தம் கேட்டான். உடனே ஈட்டியைத் தலேக்கு மேல் உயர்த்தினன். அப்போது திமிங்கிலச் சுரு அவன் பக்கமாக வந்து கொண்டிருந்தது. கட்டுமரத்தின் மூலேக்கு அடியில் அதன் தலே தெரிந்தது. எரிக் தன் கையீட்டியை அசுர பலத்துடன் அதன் தலேயில் ஆழமாகச் செருகி விட்-டான். அந்த அரக்கனுக்கு நிலேமை விளங்க ஒரிரண்டு வினடிகள் ஆயின. பின் அதன் மந்த புத்தியும் அமைதியும் திடீரென்று மறைந்தன. எஃகின் உறுதி கொண்ட ஒரு தசைக்குன்ருக மாறிற்று சுரு. பேரொலி எழுப்பிக் கொண்டுத் தலேகீழாக நீருக்குள் பாய்ந்தது. நீர் அருவியைப் போல் எழுந்து விழுந்தது. அருகில் நின்றிருந்த எங்களில் மூவர் உருட்டித் தள்ளப்பட்டோம். அவர்களுள் இருவருக்-குச் சிராய்த்துக் காயம் ஏற்பட்டது. ஒரு படகையே இழுக்கப் போதுமான பலமுள்ள கயிறு, கட்டுமரத்தின் ஒரு மூலேயில் சிக்கிக் கொண்டு ஒரு கணத்தில் அறுந்து போயிற்று. ஈட்டியின் ஒடிந்துபோன கைப்பிடிக்கம்பு மட்-டும் சுமார் 600 அடி தூரத்தில் தெரிந்தது. நீர் மூழ்கிக் கப்பலேப்போல் மறைந்திருந்து, மறுபடியும் வருமோ என்று அஞ்சி வெகுநேரம் காத்திருந்தோம். ஆனல், அந்தத் திமிங்கிலச்சுருவை மறுபடியும் நாங்கள் பார்க்கவேயில்லே.

இப்போது நாங்கள் தென் பூமத்திய நீரோட்டத்தில், கலபாகோஸுக்கு 400 கடல் மைல்கள் தெற்கே, மேற்குத்-திசையில் நகர்ந்து கொண்டிருந்தோம். கலபாகோஸ் தீவுகளிலிருந்து நீந்திக் கொண்டு வந்த சில [1] கடலாமை-களே நாங்கள் பார்க்க நேரிட்டது. அது எங்களுக்கு ஒரு-வித ஆறுதலே அளித்தது. ஒரு நாள் பெரிய கடலாமை ஒன்று நீர் மட்டத்துமேல் தலேயையும் துடுப்புக்காலேயும் நீட்டிக்கொண்டு மிதந்ததைக் கண்டோம். அலே மேல் எழும்பியபோது ஆமையின் அடிப்பாகத்தில் பச்சையும் நீலமும் தங்கநிறமும் பளபளத்தன. டால்பின்களுடன் அது தன் உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்தது. பத்துப் பதினைந்து டால்பின்கள் சேர்ந்து அக்கடலாமை-

1 Turtle

யின் கழுத்தையும் துடுப்புக்கால்களையும் தாக்கிக் கொண்டிருந்தன. ஆமையைத் தளர்வுறச் செய்யும் முயற்சி இது. ஏனெனில், நாட்கணக்கில் தலையையும் கால்களையும் உள் இழுத்துக்கொண்டு அடங்கிக் கிடக்க ஆமையால் முடியாது.

கடலாமை கட்டுமரத்தைக் கண்டவுடன் தலைகீழாக முழுகி, நேரே எங்களை நோக்கி நீந்தி வந்தது. டால்பின்களும் அதைத்தொடர்ந்தன. ஆமை கட்டுமரத்தின் அருகில் வந்து மரக்கட்டைகளின்மேல் ஏறிக்கொள்ள முயற்சித்தது. ஆனால், எங்களைப் பார்த்ததும் எட்டி நகரத் தொடங்கியது. இன்னும் சிறிதளவு பழக்கப்பட்டிருந்தால், கட்டுமரத்தருகில் வந்தபோதே கயிறுகளைக்கொண்டு அதை எளிதாகப் பிடித்திருக்கலாம். ஆனால், அதைக் கூர்ந்து கவனிப்பதிலேயே நாங்கள் கிடைத்த நேரத்தைச் செலவிட்டோம். சுறுக்குக் கயிற்றைத் தயாராக்கு முன்னரே கடலாமை கட்டுமரத்தின் முற்பகுதியைத் தாண்டிச் சென்றுவிட்டது. எங்களிடமிருந்த சிறிய ரப்பர்ப் படகைக் கடலில் இறக்கினோம். ஹெர்மன், பெங்ட், டார்ஸ்டைன் ஆகிய மூவரும் கடலாமையைத் துரத்திச் சென்றனர். அப்படகு ஆமையைவிட மிகப் பெரிதல்ல. அந்த ஆமை கிடைத்தால் எவ்வகையான பண்டங்களை யெல்லாம் சமைக்கலாம் என்று தன் மனத்துள் திட்டம் இட்டுக் கொண்டான் சமையற்காரனான பெங்ட். ஆனால், அவர்கள் வேகமாகப் படகைத் தள்ளும்போது, அவர்களைவிட வேகமாக ஆமை நீர்மட்டத்துக்குச் சற்று கீழாக வழுக்கிக் கொண்டு நீந்தியது. கட்டுமரத்திலிருந்து சுமார் 300 அடி தூரத்துக்கு அவர்கள் சென்றதும், திடீரென்று ஆமை எங்கேயோ சென்று மறைந்து விட்டது. ஆனால், மஞ்சளான ரப்பர்ப் படகு அலைகளின் மேல் நடமாடியபோது, பளபளப்பான டால்பின் கூட்டம் ஒன்று அதைத் துரத்திக் கொண்டு வந்தது. இவை கடலாமையை வட்டமிட்டன. துணிச்சலானவை நீரில் மூழ்கித் துடுப்புப் பலகைகளைக் கடிக்க வந்தன. இதற்குள் கடலாமை அமைதி அடைந்து, மீன்களிடமிருந்து வெற்றிகரமாகத் தப்பித்துக் கொண்டு எங்கேயோ சென்று மறைந்தது.

---

## நடு வழியில்

பல வாரங்கள் கடந்தன. உலகத்தில் எங்களைத் தவிர வேறு மனிதர்களும் உள்ளனர் என்பதற்கு அறிகுறியாக கப்பலோ படகோ ஒன்றும் எங்களுக்குப் புலப்படவில்லை. கடல் முழுவதுமே எங்களுடையதாய் இருந்தது. தொடுவானக் கதவுகள் திறந்து கிடந்தன. உண்மையான சாந்தியும் கட்டற்ற சுதந்திர வாழ்க்கை நிலையும் வானத்திலிருந்து இறங்கிவந்து எங்களை அடைந்துவிட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. கடலும் காற்றும் இணைந்து இசை எழுப்பின. சுற்றுப்புறம் எங்கும் நிறைந்திருந்த தூய நீல வண்ணத்தில் உடலும் உயிரும்கூட மாசு நீக்கப்பட்டனவாகத் தோன்றின. நாகரீகம் மிக்க மனிதன் இயற்கைக்கு எதிராகத் தான் நின்று போராடுவதாக எண்ணுகிறுன். ஆனுல், கட்டுமரத்தில் இருந்த எங்களுக்கு மேற்கூறிய கருத்து பொய்யாக, வெறும் புத்தி மயக்கமாக, மனித உள்ளத்தின் அகங்காரத்தில் உருவெடுத்த ஆதாரமற்றக் கற்பனையாகத் தோன்றியது. முடிவில் அனைத்துக்கும் அடிப்படையாக எஞ்சி நிற்பவை இயற்கையின் சக்திகளேயாம். இந்தச் சக்திகள், எங்களை எதிர்க்கவில்லை. கடலென்னும் பெரும்பொருள் எங்கள் கட்டுமரத்தை உவகையுடன் ஏற்றுக்கொண்டது. நீரின் இயக்கத்தோடு தானும் இயங்கி வாழும் மீன்களைப் போன்றும், காற்றின் இயக்கத்தோடு தானும் இயங்கி வாழும் பறவைகளைப் போன்றும் எங்கள் கட்டுமரம் கடல் அலைகளுக்கு ஏற்ப இயங்கியது. கடலும் கட்டுமரமும் தமது போக்கில் ஒருமித்துக் கலந்துவிட்டன. இந்நிலையில் கடலைக்கண்டு நாங்கள் அஞ்சவேண்டியதில்லை என்ருயிற்று. கடல் எங்களுக்கு நம்பத்தக்க தோழனுகி, வழியில் மாருமல் உதவி அளித்தது. காற்றும் கடல் அலைகளும் எங்களை மேற்புறத்தில் சரியான கதியில் நகர்த்தின.

கீழிருந்த கடல் நீரோட்டம் எங்களுடைய இலட்சியத்தை நோக்கித் தாங்கிச் சென்றது. நெடுங்கடலின் நுரை நிரம்பிய சிறிய அலைகளின் இடையில் கட்டுமரம் மேலும் கீழுமாக அசைந்து சென்றது. சிவந்த மஞ்சளாக இருந்த பாய்த்துணியைப் பாலினீசியா இருந்த திக்கில் வளைத்துப் பிடித்துக்கொண்டிருந்தது வியாபாரக் காற்று.

கட்டுமரத்தின் பின்புறம் பெங்ட் எப்போதும் காணப்படுவான். சற்று கறுத்தவன்; பெரும்பாலும் மேலாடை அணியமாட்டான்; தாடி வளர்த்திருப்பான். நீண்ட ஒரு துடுப்புக் கம்புடன் போராடிக்கொண்டு, சிக்கலான ஒரு கயிற்றைப் பிடித்து இழுத்துக் கொண்டிருப்பான் அல்லது அமைதியான காலநிலையில் வெய்யிலில் ஒரு பெட்டியின்மீது உட்கார்ந்து தூங்க முயற்சி செய்துகொண்டு இருப்பான். ஆனால், அப்போதும் தன் கால்விரல்களால் சுக்கான் கட்டையை இலேசாக அழுத்திப் பிடித்துக்கொண்டிருப்பான். மேற்கூறிய எதையும் அவன் செய்யவில்லை என்றால் குடிசையின் வாயிற்புறத்தில் குப்புறப்படுத்துக் கொண்டு, சமூக இயல் நூல்களில் ஏதாவது ஒன்றைப் படித்துக் கொண்டிருப்பான். சமையற்காரன் என்ற முறையில், எங்களுடைய தினசரி உணவு விகிதத்தை நிச்சயிக்கும் பொறுப்பை அவன் ஏற்றிருந்தான்.

ஹெர்மன் எந்த வேளையில் எங்கிருப்பான் என்று கூறமுடியாது. பாய்மரக் கம்பின் மீதேறிக் காலநிலை அறிவிக்கும் கருவிகளுடன் உட்கார்ந்திருப்பான் அல்லது மூழ்கும் கண்ணடிகளை அணிந்துகொண்டு கட்டுமரத்தின் அடியில் ஏதாவது சரிபார்த்துக் கொண்டிருப்பான் அல்லது கட்டுமரத்துடன் பிணைக்கப்பட்டிருந்த ரப்பர்ப் படகில் புதுவகைக் கருவிகளையும் பலூன்களையும் வைத்துக்கொண்டு ஏதாவது பரிசோதனைகள் செய்தவண்ணம் இருப்பான். எங்களுக்குள் பொறிஇயல் வல்லுநன் என்ற முறையில் காலநிலை, நீரோட்ட விவரங்கள் முதலியவற்றைக் கண்டறியும் பொறுப்பை அவன் ஏற்றிருந்தான்.

நுட், டார்ஸ்டைன் ஆகிய இருவரும் நனைந்த பாட்டரிகள், பற்றுவைக்கும் இரும்புக் கம்பி இணைப்புக்கள் ஆகியவற்றுடன் எப்போதும் உழைத்துக் கொண்டிருப்பர். நீர்

மட்டத்துக்குமேல் ஓரடி உயரம்வரை நீர்த் திவலைகள் தெறித்துக்கொண்டிருந்தன ; பனிப்படலம் படிந்து கிடந்தது. ஆகவே, அவர்களுடைய வேலை மிகவும் கடினமாயிற்று. ஆயினும், போர்க்காலத்தில் அவர்கள் பெற்றிருந்த பயிற்சி பேருதவியாய் இருந்தது. நாள்தோறும், இரவு நேரத்தில், அறிக்கைகளையும் காலநிலைச் செய்திகளையும் அவர்கள் வான வெளியில் அனுப்பினர். ஆங்காங்கு இருந்த ரேடியோ அபிமானிகள் இந்த செய்திகளைக்கேட்டு அறிந்து, வாஷிங்டனிலும் மற்ற இடங்களிலும் இருந்த காலநிலை ஆராய்ச்சிக் கூடங்களுக்குத் தெரிவித்தனர்.

'எரிக்' பெரும்பாலும் பாய்த்துணிகளைப் பழுது பார்ப்பதிலும், கயிறுகளை முடிச்சிடுவதிலும், மரத்தில் ஏதேனும் செதுக்கு வேலைகள் செய்வதிலும், மனிதர், அபூர்வமான மீன்கள் முதலியவற்றின் படங்களை வரைவதிலும் பொழுது போக்கினன். ஒவ்வொரு நாளும் நடுப்பகலில் எரிக் ஒரு பெட்டியின் மீதேறிக்கொண்டு, கோணம் அளக்கும் கருவியின் உதவியால் சூரியனின் இடத்தைக் கண்டறிந்தான். இதைக்கொண்டு முன்னைவிட எவ்வளவு தூரம் நகர்ந்திருக்கிரேம் என்று கணக்கிட முடிந்தது.

பயணத்தைப் பற்றிய விவரங்களைச் சேகரித்தல், செய்தி அறிக்கைகள் தயாரித்து விடுத்தல், மீன்பிடித்தல், புகைப்படங்கள் எடுத்தல் ஆகிய வேலைகளை நான் செய்து வந்தேன். இவ்வளவையும் செய்துமுடிக்க எனக்கு ஓயாத உழைப்பு தேவையாய் இருந்தது.

இவ்வாருக நாங்கள் ஒவ்வொருவரும் உரிய பொறுப்புக்களை ஏற்றுச் சரிவர வேலை செய்து வந்தோம். ஒருவருடைய வேலையில் மற்ருெருவர் தலையிடவில்லை. சுக்கான் பிடித்தல், சமைத்தல் முதலிய சற்றுக் கீழ்த்தரமான வேலைகளை நாங்கள் யாவரும் சமமாகப் பகிர்ந்துகொண்டோம். ஒவ்வொருவனும் பகலில் இரண்டு மணி நேரமும், இரவில் இரண்டு மணி நேரமும் சுக்கான் திருப்பவேண்டியிருக்கும். சமையல் வேலையை ஒருவருக்குப்பின் ஒருவராக நாங்கள் போட்டிருந்த திட்டப்படி செய்து வந்தோம். கட்டுமரத்தில் எங்களுக்குச் சட்டங்களும் கட்டுப்பாடுகளும் மிகச்சிலவே. இரவில் சுக்கான் பிடிப்பவன் இடையைச்சுற்றி ஒரு கயிற்-

றைக் கட்டிக் கொள்ளவேண்டும். ஆபத்தில் உதவும் கயிறு எப்போதும் அதற்குரிய இடத்திலேயே வைக்கப்பட்டிருக்கவேண்டும். மூங்கிற் குடிசைக்கு வெளியில்தான் சாப்பிடவேண்டும். இதுபோன்ற சில விதிகளே இருந்தன. முக்கியமான ஒரு பிரச்னை எழுமானல் நாங்கள் அனைவரும் கூடி ஆராய்ந்தே அதற்கு ஒரு முடிவு காண்போம்.

கோன்டிகியில் எங்களுடைய தினசரி வாழ்க்கை எப்படி நடந்தது என்பதைச் சிறிது கூறவேண்டும். விடியும் நேரத்தில், முன்னுள் இரவு கடைசியாகச் சுக்கான் பிடித்தவன் அன்றையச் சமையற்காரனை எழுப்பிவிடுவான். உடனே சமையற்காரன் காலைவெய்யிலில் மெல்ல எழுந்து தூங்கி வழிந்துகொண்டே, பனி படிந்துகிடந்த மேல்தளத்தைச் சுற்றிப் பார்ப்பான். அங்குக் கிடக்கும் பறக்கும் மீன்களைச் சேகரிப்பான். பாலினீசியா, பெரு ஆகிய பகுதிகளில் அம்மீன்களைச் சமைக்காமலே தின்பர். ஆனல், நாங்கள் குடிசைக்கு வெளியில் தளத்துடன் கட்டப்பட்டிருந்த ஒரு மரப்பெட்டியில் ஒரு ப்ரைமஸ் அடுப்பை வைத்துக்கொண்டு, மீன்களை வறுத்துச் சாப்பிட்டோம். இந்தப் பெட்டிதான் எங்களுக்குச் சமையல் அறை. பின்புறமிருந்து தென்கிழக்கு வியாபாரக்காற்று ஓயாமல் அடித்துக்கொண்டிருந்தது. ஆகவே, அக்காற்றுக்கு ஒதுங்கிய பக்கமாக எங்கள் அடுப்பு வைக்கப்படும். காற்றும் கடலும் சில சமயங்களில் எண்ணெய் அடுப்பை அளவுக்கு மீறி உருட்டி அசைத்தன. அப்போது மட்டும் மரப்பெட்டியில் தீப்பற்றிக் கொண்டது. ஒரு நாள் சமையற்காரன் தூங்கிவிடவே, மரப்பெட்டி முழுவதும் பற்றி எரிந்து, மூங்கிற் குடிசையின் சுவரிலும் தீப் பிடித்துவிட்டது. குடிசைக்குள்ளிருந்து புகை வந்ததைக் கண்டு நாங்கள் ஓடிச் சென்று தீயை அணைத்தோம். நீருக்காக நாங்கள் வெகுதூரம் செல்லவேண்டியதில்லை அல்லவா?

குடிசைக்குள் படுத்துத் தூங்குவோரை மீன் வறுவலின் மணமும் கலைக்கமுடியாது. சமையற்காரன் அவ்விடம் சென்று ஒரு முள்ளைக்கொண்டு அவர்களைக் குத்துவான் அல்லது காலைச் சிற்றுண்டி தயார் என்று உரக்கப் பாடுவான். அவனுடைய தொல்லை தாங்க முடியாமல் துயிலுபவர் விழித்தெழுவார்கள். குடிசைக்கு வெளியே

வந்து கட்டுமரத்தின் ஓரத்தில் நின்று சுற்றியுள்ள கடல் நீரைக் கூர்ந்து கவனிப்பார்கள். சுரு மீன்களின் சிறகு-கள் தென்படவில்லையெனில், விரைவாக கடலில் ஒரு முழுக்குப்போட்டுவிடுவார்கள். உடனே காலை ஆகாரம் உண்ணுதல், அவ்வவர்க்குரிய வேலைகளைச் செய்தல் ஆகியவை நிகழும்.

எங்கள் ஆகாரம் ஒரு வகையில் தலை சிறந்ததாய் இருந்தது. இருபதாம் நூற்றாண்டுக்குப் பொருத்தமானதாக ஒரு வகை, ஐந்தாம் நூற்றாண்டுக்கும் கோன்டிகிக்கும் இசைவானது ஒரு வகை—ஆக இருவகை ஆகாரங்களிலும் பரி-சோதனைகள் செய்தோம். பெங்ட், டார்ஸ்டைன் ஆகியோர் முதல் வகை ஆகாரத்தில் ஆராய்ச்சிகள் செய்தனர். மூங்கில் தளத்தில், கட்டைகளின் இடைவெளிகளில் நாங்கள் திணித்து வைத்திருந்த சில தனிப்பட்ட வகை ஆகாரங்களை மட்டுமே அவர்கள் உபயோகித்தனர். மீன்-களும் கடல் தந்த உணவுப் பொருள்களும் அவர்களுக்கு ஒவ்வாதன. சில வாரங்களுக்கு ஒரு முறை மூங்கில் தளத்தைக் கட்டியிருந்த கயிறுகளைத் தளர்த்தி, தளத்துக் கடியில் வைக்கப்பட்டிருந்த உணவுப் பொருள்களிலிருந்து தேவையானவற்றை எடுத்து வைத்துக் கொள்வோம். வெளியில் [1] நிலக்கீல் பூசப்பட்ட அட்டைப் பெட்டிகளில் உணவை அடைத்து வைத்திருந்தோம். ஓயாமல் கடல்நீர் பட்டாலும் அப்பெட்டிகள் நல்ல நிலையில் இருந்தன. காற்றுப் புகாமல் மூடி முத்திரை இடப்பட்ட தகரப் பாத்-திரங்களும் இருந்தன. ஆனால், அவை கடல்நீரில் நனைய நனையப் பாழாகித் தொலைந்தன.

கோன்டிகி கடலில் பயணம் செய்தபோது, அவனிடம் கீல் பூசிய பெட்டிகளோ காற்றுப்புகாத தகரங்களோ இல்லை. எனினும், அவனுக்கு உணவுப் பிரச்னை கடினமான-தாக இல்லை. பண்டைக் காலத்திலும் கடற்பிரயாணம் செய்ய முற்பட்ட மனிதர்கள் தங்களுக்கு வேண்டிய உணவைக் கையில் எடுத்துக் கொண்டு சென்றார்கள். [2] டிடிகாகா ஏரிக்கருகில் தோல்வியுற்று, பெரு நாட்டின் கடற்கரையிலிருந்து புறப்பட்ட கோன்டிகியின் நோக்கம் யாதாய் இருக்கலாம் என்று ஊகிக்க இடமுண்டு. சூரியனை

1. Asphalt 2. Titicaca

வழிபட்ட மக்கட் கூட்டத்தின் தலைவன் என்ற முறையில், விண்ணிற் சென்ற சூரியனைத் தொடர்ந்து கடலுக்குள் கட்டு மரங்களைச் செலுத்திக் கொண்டு கோன்டிகி சென்றிருக்கலாம். அமைதி நிலவும் ஒரு புதிய நாட்டைக் கண்டுபிடிப்போம் என்ற நம்பிக்கையுடன் அவன் புறப்பட்டிருக்கக் கூடும். அல்லது தன்னைத் தொல்லைக்குள்ளாக்கிய பகைவரின் பிடியிலிருந்து தப்பி, தென் அமெரிக்கக் கரையோடு வடக்கு நோக்கிச் சென்று ஒரு புதிய அரசை ஏற்படுத்தவேண்டும் என்ற நோக்கத்துடனும் கட்டுமரப் பயணம் துவங்கி இருக்கலாம். அது எவ்வாறாயினும், அபாயகரமான கடற்கரைப் பாறைகளையும் எதிரிகளின் கூட்டங்களையும் பின்னால் விடுத்துக் கடலுக்குள் கோன்டிகி முன்னேறியதும், தென் கிழக்கு வியாபாரக் காற்று ஹம்போல்ட் நீரோட்டம், ஆகியவற்றால் இழுத்துச் செல்லப்பட்டிருக்கவேண்டும். ஆகவே, அது பெரும் அரைவட்ட வடிவில் மேற்கு நோக்கிக் கடலில் சென்றிருக்கவேண்டும். தாய் நாட்டை விட்டு அவர்கள் புறப்பட்டபோது, தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் கூட எடுத்துச் சென்றிருக்கவேண்டும். உலர்த்தப்பட்ட இறைச்சி, மீன்கள், சர்க்கரை வள்ளிக் கிழங்கு முதலியன அவர்களுடைய எளிய ஆகாரத்தின் முக்கிய பகுதிகளாய் இருந்தன. பெரு நாட்டுக் கரையிலிருந்து புறப்பட்ட அவர்கள் குடிக்கும் நீரையும் தங்களுடன் எடுத்துச் சென்றார்கள். மண்பாத்திரங்களுக்குப் பதிலாக அவர்கள் சுரைக்குடுக்கைகளை உபயோகித்தனர். காரணம், மண்பாத்திரம் எளிதில் உடைந்து போகும் என்பதே. நீர் நிறைந்த சுரைப் பாத்திரங்களின் மீது இடித்தல், புடைத்தல் போன்ற காரியங்களையெல்லாம் செய்தனர். ஆனால், அவை உடையவில்லை. மேலும், பெரிய மூங்கிற் கம்புகளை எடுத்து, கணுக்களில் உட்புறமாகத் துளை செய்து, ஒரு கோடியிலிருந்து துளையின் மூலம் மூங்கிற் கம்பில் நீர் ஊற்றி நிரப்பினார்கள். பிறகு பிசின் கொண்டு துளையை அடைத்தார்கள். இவ்வாறான முப்பது அல்லது நாற்பது தடித்த மூங்கிற்கொம்புகளைக் கட்டுமரத்தின் தளத்தின் மீது வைத்துக் கயிறுகளால் பிணைத்து விட்டார்கள். நிழலில் குளிர்ந்து கடல் நீர் மூங்கில்களின்மேல் விழுவதால், கடல் நீரோட்டத்தில் சுமார் 79° (பாரன்ஹீட்) உஷ்ண நிலையில்

குடி நீர் சேமித்து வைக்கப்பட்டது. இதனல், கட்டுமரத்திற்குக் கனமும் சேருவதில்லை; மேல் தளத்தில் இருக்கும் இடமும் அடைக்கப்படுவதில்லை.

புதிய குடிநீர் இரண்டு மாதங்களுக்குப்பின் சுவை மாறிவிடுவதை நாங்கள் கண்டோம். ஆயினும், இரண்டு மாதங்களில் மழையற்ற கடற்பகுதியை நாம் தாண்டி விடலாம். பிறகு கனத்த மழை பெய்வதால் குடி நீருக்குப் பஞ்சமே இல்லை. எங்களில் ஒவ்வொருவனுக்கும் நாளொன்றுக்கு $\frac{1}{4}$ [1]காலன் தண்ணீர் கொடுக்கப்பட்டது. சில நாட்களில் இவ்வளவு தண்ணீரைக் கூடக் குடித்துத் தீர்க்க முடியவில்லை. பண்டைக்கால மனிதர் பயணத்தின்போது வேண்டிய அளவு பொருள்களைக் கொண்டு செல்லாதிருந்தாலும், கடல் நீரோட்டத்துடன் மிதந்து செல்லும் வரையிலும் அவர்களுக்குக் கவலை ஒன்றும் இருந்திருக்காது. நீரோட்டத்தில் எண்ணிறந்த மீன்கள் கிடைத்தன. எங்கள் பயணம் முழுவதிலுமே கட்டுமரத்தைச் சுற்றி மீன்கள் நீந்திவராத நாள் இல்லை. மிக எளிதில் மீன்களைப் பிடிக்க முடிந்தது. பறக்கும் மீன்கள் தாங்களாகவே மேல்தளத்தில் வந்து விழும். சில சமயங்களில் சுவைக்கினிய பெரிய [2] பானிட்டோ மீன்கள் பின்புறமிருந்து அலையுடன் எழுந்து தளத்தில் வந்து விழும். பலகை இடுக்குகளின் வழியே நீர் வழிந்தோடி விடவும், இம் மீன்கள் செயலற்றுத் தளத்தின்மேல் துள்ளின. ஆகவே, உணவின்றி நாம் சாவது இயலாத காரியம். பண்டைக் காலத்தவர் வேறொரு முறையையும் தெரிந்து கையாண்டார்கள். சமீபத்தில் உலகப்பெரும் போர் நடந்தபோது நடுக்கடலில் சிக்கிக் கொண்ட மனிதர்கள் தங்கள் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளக் கையாண்ட முறை அது. அதாவது, பச்சை மீன்களின் உடலுக்குள் இருக்கும் ஒருவகை ரசத்தைக் கடித்து உறிஞ்சுவது. மீன்களை ஒரு துணியில் இறுகக் கட்டி முறுக்கிச் சாறுபிழிவதும் உண்டு. பெரிய மீன்களாய் இருந்தால் அதன் ஒரு நுனியில் சிறு துளைகளைப் போட்டு விட்டால், விரைவில் நிணநீர் சுரப்பிகளிலிருந்து இந்த துளைகளின் வழியே ரசம் பொங்கி வழிந்து விடும். அதில் உள்ள உப்பின் அளவு குறைந்திருப்பதால் அதைக் குடித்துத் தாகத்தைப் போக்கிக் கொள்ளலாம்.

---

1. Gallon 2. Bonito

நாள்தோறும் கடலில் குளித்தபின் குடிசைக்குள் நிழலில் ஈரமாகவே படுத்திருந்தால் குடிநீரின் தேவை குறைந்து போகும். சில சமயங்களில் ஒரு சுறுமீன் எங்களைச் சுற்றி நீந்திக் கொண்டு யாரும் கடலில் இறங்கவிடாமல் செய்து-விடும். அப்போது கட்டுமரத்தின் பிற்பகுதியில் கயிறுகளை இறுகப் பற்றிக் கொண்டு படுத்துக் கொண்டால், சில விநாடிகளில் அலைகள் பாய்ந்து, கட்டு மரத்தின்மேல் மோதும்போது தெளிந்த பசிபிக் நீரில் பலமுறை குளித்தாய் விடும்.

கடும் வெய்யிலில் தாகத்தால் அவதியுறும்போது உட-லுக்கு நீர் தேவைப்படுகிறதென்றுதான் பெரும்பாலோர் எண்ணுகிறார்கள். இதனால், அளவுக்கு மீறி நீர் பருகும் ஆசை தோன்றலாம். ஆயினும், வெறும் நீரினால் தாகம் அடங்காது. நல்ல வெய்யிற் காலங்களில் சூடான நீரை எவ்வளவு குடித்தாலும் தாகம் நீங்குவதில்லை. காரணம், அப்போது உடலுக்கு வேண்டியது நீரல்ல, உப்புத்தான். இது புதுமையாய்த் தோன்றலாம்; ஆனால், உண்மை. எங்களுக்கு வகுக்கப்பட்டிருந்த உணவு திட்டத்தில் வெய்யில் நாட்களுக்காக உப்பு மாத்திரைகள் சேர்க்கப்பட்டிருந்தன. வெய்யிலின் கடுமையில் வேர்வை பெருகும்பொழுது உடலி-லிருந்து உப்பும் வெளியே சென்றுவிடுகிறது. சில நாட்க-ளுக்குக் காற்று அடங்கிப்போய் சூரிய வெப்பமும் கடுமை-யாய் இருந்தது. அப்போது இம்மாதிரி அனுபவம் எங்க-ளுக்கு ஏற்பட்டது. எங்களுக்குத் தரப்பட்ட நீரை வயிறு நிரம்பிப் பிதுங்கும்வரை குடித்தோம். பின்னரும் தாகம் அடங்கவில்லை. ஆகவே, குடிக்கும் நீருடன் 20 முதல் 40 சதவீதம் வரை கடல் நீரைக் கலந்து குடித்தோம். எங்கள் தாகம் உடனே அடங்கிற்று. குடித்தபின் வெகு நேரத்துக்-குக் கடல் நீரின் உவர்ப்பு எங்கள் வாயில் இருந்தபோதிலும், எங்களுக்கு அதனால் ஒரு விதத் துன்பமும் நேரவில்லை. மேலும் குடிநீர் அளவும் இதனால் அதிகரிக்கப்பட்டது. ஒரு நாள் காலை சிற்றுண்டி அருந்திக்கொண்டிருந்தோம். ஒரு பெரும் அலை, நீரை வாரி இரைத்தது. அதனால், நாங்கள் வைத்திருந்த கஞ்சியில் உப்புநீர் கலந்துவிட்டது. அதனால், கடல் நீரின் உவர்ப்பில் பெரும் பகுதியை ஓட்ஸ் கஞ்சியின் சுவை மாற்றிவிட்டதைத் தெரிந்து மகிழ்ச்சியுற்றோம். பண்டைக்காலத்துப் பாலினீசியர்கள் சில விந்தையான

வழக்கங்களைப் பின்பற்றினர். கடலைத் தாண்டிச் செல்லும் போது, ஒருவகைச் செடியின் இலையைக் கொண்டுசென்றனர். அதைக் கடித்து சுவைப்பதனால் தாகம் நீங்குமாம். அவ்விலையைப் பொடிசெய்து ஒரு சிட்டிகையளவு சேர்த்தால் கடல்நீர் பருகத் தகுந்ததாக மாறுமாம். தென் கடற் தீவுகளில் இவ்வகையான செடிகளே இல்லை. ஆகவே, அவர்களுடைய முந்தையர் தாய்நாட்டிலிருந்துதான் அந்தச் செடியைக் கொண்டு வந்திருக்க வேண்டும். பாலினீசியச் சரித்திர ஆசிரியர்கள் இவ்வகைச் செடியின் குணச் சிறப்பைத் திரும்பத் திரும்ப கூறியுள்ளபடியால் தற்கால ஆராய்ச்சியாளர் இதைக் கவனிக்கவேண்டியதாயிற்று. ஆராய்ச்சிகள் பல நடைபெற்றன. முடிவில் வெளிவந்த உண்மை, கோக்கோ செடிக்குத்தான் இந்தக் குணம் உண்டு என்பதே. இச்செடி பெருநாட்டில் பெருவாரியாக விளைவது. சரித்திரக் காலத்துக்கு முன்பே பெருநாட்டில் இச்செடி இங்காக்களாலும் அவர்களிடம் தோற்றோடி மறைந்துவிட்ட சாதியினராலும் வழக்கமாக உபயோகிக்கப்பட்டு வந்தது. இங்காக்களின் பழைய சவக்குழிகளைச் சோதித்துப் பார்த்ததில் இது புலனாயிற்று. சோர்வுறச் செய்யும் மலைப்பிரதேசப் பயணங்களிலும், கடற் பயணங்களிலும் இந்த இலைகளைக் கட்டுக்கட்டாக அவர்கள் எடுத்துச் சென்றனர். சோர்வும் தாகமும் நீங்குவதற்காக இவ்விலைகளைச் சுவைத்துக்கொண்டே மாதக்கணக்கில் சென்றனர்.

கோன்டிகியில் நாங்கள் கோக்கோ இலைகளைச் சோதனை செய்து பார்க்கவில்லை. எங்களுடைய மேல்தளத்தில் இருந்தவை வேறு வகையான செடிகள்தாம். பெரிய பிரம்புக் கூடைகளில் நாங்கள் கொண்டுசென்ற இச்செடிகள் முன்பே தென்கடற் தீவுகளில் பிரசித்தியானவை. மூங்கிற் குடிசையின் சுவரோடு கட்டப்பட்டிருந்த பிரம்புக் கூடைகளிலிருந்து நாள் செல்லச் செல்ல மஞ்சள் குருத்துக்களும், பசுமையான இலைகளும் எழுந்து, பிரம்புப் பின்னலுக்குமேல் உயர்ந்து வளர்ந்தன. கட்டு மரத்தின்மேல் உஷ்ணப்பிரதேசத்துச் செடிகளைக்கொண்ட ஒரு சிறிய தோட்டமே மிதந்தது போல் தோன்றியது. பசிபிக் தீவுகளுக்கு முதன் முதலில் ஐரோப்பியர் வந்தபோது ஈஸ்டர் தீவு, ஹவாய், நியூஸிலாந்து முதலிய இடங்களில் வள்ளிக்கிழங்கு பெரும் அளவில் பயிரிடப்படுவதைக் கண்டனர்.

அதே கிழங்கு பாலினீசியர்களின் எல்லைக்குள் மற்றத் தீவுகளில் பயிரிடப்பட்டது. இதற்கும் மேற்கே உள்ள பிரதேசத்தினர் வள்ளிக்கிழங்கைப் பற்றி அறிந்திருக்கவில்லை. தொலைவில் இருக்கும் இத் தீவுகளில் உள்ளவர் மீனையும் வள்ளிக்கிழங்கையும் முக்கிய உணவுப் பொருள்களாகக் கொண்டிருந்தனர். பாலினீசியர்களின் புராணங்களில் இச் செடியைப்பற்றிய குறிப்புக்கள் பற்பல காணக் கிடைக்கின்றன. ‘டிகி’யே தன் தாய் நாட்டிலிருந்து இந்தப் பயிரைக் கொண்டு வந்ததாகப் பழங்கதைகள் கூறுகின்றன. டிகியின் தாய்நாட்டில் இது முக்கிய உணவுப்பொருளாக இருந்ததை நியூஸிலாந்தின் புராணங்களும் கூறுகின்றன. வள்ளிக்கிழங்கைக் கடற் கடந்து கொண்டு வந்தவை படகுகள் அல்ல, கட்டுமரங்களே என்றும் இக்கதைகளிலிருந்து அறியலாம். ஐரோப்பியரின் வருகைக்கு முன்பு, அமெரிக்காவில் மட்டுமே வள்ளிக்கிழங்கு பயிரிடப்பட்டு வந்தது. தென்கடற்தீவுகளுக்கு டிகி கொண்டுவந்த அதே வள்ளிக்கிழங்குதான், மிகப் பண்டைய காலத்திலிருந்து பெருவில் இந்தியரால் பயிரிடப்பட்டு வந்தது. வெய்யிலில் இட்டு உலர்த்தப்பட்ட வள்ளிக்கிழங்கு வற்றல் பாலினீசியருக்கும் பெரு நாட்டுப் பழங்குடிகளுக்கும் கடற்பயணங்களின்போது முக்கியமான உணவுப் பொருளாக இருந்து வந்தது.

வள்ளிக்கிழங்கைப் பயிர் செய்ய மிக்க உழைப்பும் கவனமும் வேண்டும். மேலும், கடல் நீரில் அது வளராது. ஆகவே, பெருவிலிருந்து கடல் நீரோட்டத்துடன் நாலாயிரம் கடல் மைல்களுக்குமேல் அது தானகவே சென்றிருக்கவேண்டும் என்றும், சிதறிக் கிடக்கும் தென்கடற்தீவுகளில் இவ்வாருகவே வள்ளிக் கிழங்கு பெருமளவில் பரவிவிட்டது என்றும் கூறுவது சரியென்று தோன்றவில்லை. இதை வேறு வகையில் விளக்க முயற்சித்தாலும் வீணேயாகும். ஏனெனில், மொழி நூல் வல்லுநர் சுட்டிக் காட்டியிருப்பதுபோல் வள்ளிக்கிழங்குக்குத் தென்கடற் தீவுகளில் ‘குமாரா’ என்னும் பெயர் வழங்குகிறது. பெருவின் பண்டை இந்தியரும் அதே பெயரால் வள்ளிக்கிழங்கை அழைத்தனர். வள்ளிக்கிழங்குடன் அதன் பெயரும் கடலைத் தாண்டிச் சென்றது. பயிரிடப்படும் வகையைச் சேர்ந்த மற்ருெரு பாலினீசியச் செடியும் எங்கள் கட்டுமரத்தில் இருந்தது.

சுரைக்காயும் மிக முக்கியமானது. பாலினீசியர் இதைத் தீயில் காயவைத்து நீர்க் குடுவையாக உபயோகித்தனர். இச் சுரைக்காயும் பாலினீசியா, பெரு ஆகிய இரு இடங்களில் இருந்திருக்கிறது. சுரைக்காயிலிருந்து செய்யப்பட்ட இந்த நீர்க்குடுவைகள் பெரு நாட்டில் கடற்கரை ஓரத்தில் இருக்கும் சவக் குழிகளிலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றன. அதே போன்று, பசிபிக் தீவுகளுக்கு ஏனைய நாட்டினர் வருவதற்குப் பல நூற்றுண்டுகள் முன்னதாகவே தென்கடற் தீவுகளில் இருந்த மீன் பிடிப்போர் சுரைக் குப்பிகளை உபயோகித்து வந்துள்ளனர். சுரைச் செடிக்குப் பாலினீசியப் பெயர் 'கிமி' என்பது. மத்திய அமெரிக்காவில் வாழும் இந்தியர் இதே சொல்லை இன்றும் வழங்குகின்றனர். ஏனெனில், பெருநாட்டு நாகரீகத்தின் ஆணிவேர் மத்திய அமெரிக்காவினுள் செல்கிறது.

எங்கள் கட்டுமரத்தில் நல்ல பழங்களும், சில வகைச் செடிகளும் இருந்தன என்று முன்னரே கூறப்பட்டது. அவற்றில் ஒன்று தென்னை. பசிபிக்கின் சரித்திரத்தில் தென்னைக்கு ஒரு முக்கிய இடம் உண்டு. எங்களிடம் 200 தேங்காய்கள் இருந்தன. இவற்ருல் தெம்பு ஊட்டும் வகையில் பானமும், பற்களுக்கு நல்ல வேலையும் கிடைத்தன. பல தேங்காய்களிலிருந்து முளை கிளம்பி, சுமார் பத்து வாரங்களில் ஆறு தென்னம்பிள்ளைகள் ஓரடி உயரத்துக்கு வளர்ந்து விட்டன. இதற்குள் கரும் பசுமையான இலைகளும் தோன்றிவிட்டன. கொலம்பஸுக்கு முற்பட்ட காலத்தில் தென்னை மரங்கள் பனமா பூசந்தியிலும், தென் அமெரிக்காவிலும் வளர்ந்திருந்தன என்று தெரிகிறது. பெரு நாட்டின் பசிபிக் கரைக்கு ஸ்பானியர் வந்தபோது, அங்குத் தொகை தொகையாய்த் தென்னை செழித்து நின்றதைக் கண்டதாக [1] ஓவிடோ என்னும் சரித்திர ஆசிரியன் கூறுகிருன். அப்போதே எல்லா பசிபிக் தீவுகளிலும் தென்னை பரவி வெகுகாலமாய் இருந்தது. பசிபிக்கில் எத்திசையில் தென்னை பரவியது என்பதை அறுதியிட்டுக் கூறமுடியவில்லை என்கின்றனர் தாவர நூல் வல்லுநர். ஆனுல், ஒன்று மட்டும் இப்போது தெரிய வந்துள்ளது. நாரும் ஓடும் பாதுகாப்பாக அமைந்த தேங்-

1. Oviedo.

காய், மனிதனுடைய உதவியின்றிப் பெருங்கடலில் மிதந்து பரவமுடியாது. கட்டுமரத்தில் நாங்கள் எடுத்துச் சென்ற தேங்காய்கள் பாலினீசியாவுக்குப் போய்ச் சேரும் வரை கெடவில்லை. சுவையாகவும், முளைக்கக்கூடியவையாயும் இருந்தன. சில காய்களைத் தளத்தின் கீழ்த் தனித்-தேவைப் பொருள்களுடன் வைத்துக் கட்டியிருந்தோம். கடல்நீர் பட்டு இவை யாவும் வீணாயின. கடலில் காற்-றடிக்கும்போது பால்ஸா கட்டுமரம் செல்லும் வேகத்தில் தேங்காய்கள் மிதந்து செல்லமுடியாது. தேங்காய்க் கண்-களில் கடல்நீர் பட்டு ஊறி மெதுவாய் விடுவதனால் நீர் உட்புகுந்து விடுகிறது. மேலும், கடலில் எந்தக் கழிவுப் பொருள் இருந்தாலும் அதைத் தின்னும் பிராணிகள் உண்டு. ஆகவே, ஒரு கண்டத்திலிருந்து மற்ற இடங்களுக்-குச் சுவையுள்ள தின்னக் கூடிய பொருள் எதுவும் மிதந்து செல்ல இயலாது.

கடல் அமைதி பெற்றிருந்த சில வேளைகளில் நீலக்-கடலில் ஒரு வெள்ளைச்சிறகு மிதந்து செல்லும். அதற்-கருகில் கட்டு மரம் சென்றதுண்டு. கரையை விட்டுப் பல்-லாயிர மைல்கள் சென்றபின் கடலில் தூங்கும் பறவை-களைப் பார்த்தோம். அதை [1] பெட்ரல் என்று கூறுவ-துண்டு. இதுவன்றி மற்றப் பறவை வகைகளும் காணப்-பட்டன. வெண் சிறகை நெருங்கிப் பார்த்தால், இரண்டு அல்லது மூன்று சிறிய பிரயாணிகள் அதைப்பற்றிக்-கொண்டு, காற்றோடு மெல்ல நகர்ந்து கொண்டிருப்பது தெரியும். கோன்டிகி அவற்றின் அருகில் செல்லும்போது, அதிக இடவசதியும் வேகமும் பொருந்திய ஒரு கப்பல் வருவதைக் கண்டு, சிறகுப் பிரயாணிகள் முழு வேகத்-துடன் வந்து கட்டுமரத்தில் ஏறிக்கொள்வர். சிறகு தனியே விடப்படும். இவ்வாறு வரவரக் கோன்டிகியில் பிரயாணி-களின் கூட்டம் அதிகரித்தது. இவ்வாறு வந்து சேர்ந்த பிரயாணிகள் யார் தெரியுமா? இடம் விட்டு இடம் செல்-லும் கடல் நண்டுகள்; உகிர் அளவு இருக்கும்; சிற்சில சமயங்களில் அதைவிடப் பெரிதாகவும் இருக்கும்; கடலின் நீர்மட்டத்தில் போலீஸ் வேலை பார்க்கும். தின்னக்கூடியது ஏதேனும் கண்ணில்பட்டால் அவை சும்மாயிராது. ஒரு

---

1. Petrels.

நாள் காலையில் பலகைகளுக்கு இடையில் கிடக்கும் பறக்கும் மீனைச் சமையற்காரன் பார்க்காமல் விட்டுவிட்டால், மறுநாள் எட்டு அல்லது பத்து சிறிய நண்டுகள் அம் மீனைச் சூழ்ந்து கொண்டு இருக்கும். மீனின்மீது உட்கார்ந்து கொண்டு, நகங்களின் உதவியால் அதைச் சிறிது சிறிதாகத் தின்று தீர்த்துவிடும். நாங்கள் நெருங்கினால் பயந்து ஓடி மறைந்துவிடும். ஆனால், கட்டுமரத்தின் பின்புறம் துடுப்புக்கட்டைக்கு அருகில் ஒரு சிறிய வளையில் இருந்த நண்டு எங்களுடன் பழகிவிட்டது. நாங்கள் அதற்கு [1] ஜோஹேன்னிஸ் என்று பெயரிட்டிருந்தோம். எங்களுடன் இருந்து வேடிக்கை காட்டி மகிழ்வித்துக் கொண்டிருக்கும் கிளியுடன், இந்நண்டும் எங்கள் கூட்டத்தில் சேர்ந்தது. கடும் வெய்யிலில் சுக்கானைப் பிடிக்கும் மனிதனுக்கு இந்த நண்டின் தோழமை இல்லை என்றால், அகன்ற நீலக் கடலின் தனிமையைப் பெரிதும் உணர்ந்து துன்புறுவான். மற்ற சிறிய நண்டுகளெல்லாம் ஒருவருமறியாமல் இங்குமங்கும் செல்லும் கரப்புக்களைப்போல் கிடைத்ததைச் சுரண்டிக் கொண்டு போகும். ஆனால் ஜோஹேன்னிஸ் மட்டும் கண்களைத் திறந்துகொண்டு தன் வளையின் வாயிலில் காத்திருக்கும். ஒருவனுடைய வேலை முடிந்து, அடுத்தவன் வரும்போது தவறாமல் அதற்கென ஒரு பிஸ்கோத்துத் துண்டு அல்லது ஒரு மீன் துண்டு கொண்டுவருவான். வளையின் அருகில் நாங்கள் குனிந்தால் போதும். ஜோஹேன்னிஸ் வெளியே வந்து தன் கைகளை நீட்டும். எங்களுடைய கையிலிருந்தே நேரடியாகத் தன் நகங்களினால் இரையை எடுத்துக்கொள்ளும்; உடனே தன் வளைக்குள் ஓடிவிடும். ஒரு சிறுவன் உணவை வாயில் அடைத்துக் கொள்வதைப்போல், தன் இரையை அடைத்துக்கொண்டு பிறகு மெல்லுவதைக் காணலாம். நீரில் ஊறி அழுகிப்போன தேங்காய்களின்மேல் நண்டுகள் ஈக்களைப்போல மொய்த்துக்கொண்டிருந்தன. அலைகளோடு கட்டுமரத்தின் மீது [2] பிளாங்க்டன் என்ற ஒருவகைக் கடற்பிராணிகள் வந்துவிழுந்தன. அவற்றையும் நண்டுகள் தின்றன. கடல் நீர் ஓட்டத்துடன் திரிந்த எண்ணற்ற இப்பிராணிகள் எளிதில் கண்ணுக்குப் புலனாகாதவை. ஆனால், உடலுக்கு வலுவூட்டக்கூடிய உணவு அவற்றில் அடங்கி இருக்கிறது.

1. Johannes 2. Plankton

நேரடியாகப் பிளாங்க்டனை உண்ணுத மீன்களும் கடற் பறவைகளும்கூட, பிளாங்க்டனை உண்ணும் மற்ற மீன்களையும் கடற் பிராணிகளையும் உண்டுதான் உயிர் வாழ்கின்றன.

கடலில் நீர்மட்டத்துக்கு அருகில் கண்ணுக்குத் தெரிந்தும் தெரியாமலும் மிதந்துகொண்டிருக்கும் ஆயிரக்கணக்கான சிறிய உயிர்வகைகளுக்குப் பிளாங்க்டன் என்பது பொதுப் பெயர். பிளாங்க்டனில் சில தாவரங்கள், வேறு சில மீன் முட்டைகள். இன்னுஞ்சில மற்ற உயிர்ப் பிராணிகள். உயிர்ப்பிராணிகள் அடங்கிய பிளாங்க்டன், தாவரவகைப் பிளாங்க்டனைத் தின்று வாழ்கிறது. இறந்து அழுகிப் போன பிளாங்டன் பிராணிகளிலிருந்து கிடைக்கும் பல இரசாயனப் பொருள்களைக் கொண்டு தாவர பிளாங்க்டன் வாழ்கிறது. ஒன்றையொன்று நம்பிவாழும் இவ்விரு வகைகளும் கடல்மீது செல்லும் எல்லாவற்றுக்கும் உணவாகின்றன. அவை செழித்த இடத்தில் ஒரு கோப்பை நீரை எடுத்தால், அதில் ஆயிரக்கணக்கில் இருக்கும். நடுக்கடலில் சிக்கிக்கொண்ட மனிதர்களில் எத்தனையோ பேர், பெரிய மீன்களைப் பிடிக்க முடியாததால், உணவின்றிப் பட்டினியால் இறந்திருக்கிருர்கள். அவர்களுக்குத் தெரிந்திருந்தால் பிளாங்க்டன் நிறைந்த நீரைக் கடலிலிருந்து எடுத்து வடிகட்டிப் பிளாங்க்டனைப் பிரித்து எடுத்திருக்கலாம். அது உடம்புக்கு வலிமைதரக்கூடிய நல்ல உணவாகும். ஒருகால் தற்போது நிலத்தில் பயிரிட்டு அறுவடை செய்வதுபோல, வருங்காலத்தில் கடலில் பிளாங்க்டனை அறுவடை செய்ய மனிதர்கள் முற்படுவார்களோ என்றுகூடத் தோன்றுகிறது.

டாக்டர் [1]பாய்காவ் என்பவர் ஒரு கடல்வாழ் உயிர் நூல் வல்லுநர். அவர் எங்களுக்குப் பிளாங்க்டனின் உபயோகத்தையும் சிறப்பியல்புகளையும் சொல்லி, அதைப் பிடிப்பதற்கென ஒரு வலையையும் எங்களுக்குத் தந்திருந்தார். பட்டிஞல் செய்யப்பட்ட அவ்வலையில் சதுர அங்குலம் ஒன்றுக்கு 3,000 துவாரங்கள் இருந்தன. வலை புனலைப் போன்ற வடிவில் தைக்கப்பட்டிருந்தது; வாய்ப்புறத்தில் 18 அங்குலம் குறுக்களவு உள்ள ஒரு இரும்பு வளையம் பொருத்தப்-

1. A. D. Bajkov.

பட்டிருந்தது. இவ் வலையைக் கட்டுமரத்தின் பின்புறத்தில் கட்டியிருந்தோம். ஆகவே, கட்டுமரம் முன்னேறும்போது அது நீரினுள் அமிழும். மீன்களைப் பிடிப்பதுபோலவே இதிலும் இடம் காலத்தைப் பொறுத்து வேறுபாடுகள் இருந்தன. மேற்கே செல்லச் செல்ல கடலின் வெப்பநிலை அதிகரிக்கவே, அகப்பட்ட பிளாங்க்டனின் அளவும் குறைந்தது. இரவு காலங்களில்தான் நிரம்ப கிடைத்தது. வெய்யில் ஏறியதும் கடற் பிராணிகள் நீருள் ஆழத்துக்குச் சென்று விடும்போலும். நேரம் போக்க எங்களுக்கு வழியில்லாத போதெல்லாம், பிளாங்க்டன் வலைக்கு அருகில் முகத்தை நீட்டிக் கொண்டிருந்தால் பல விநோதங்களைக் காணலாம். வலையிலிருந்து துர்நாற்றம் வீசியது. குழம்பாக வலையில் தங்கும் பிளாங்க்டன் நல்ல தோற்றமும் உடையதல்ல. பிளாங்க்டனைத் தளத்தின்மீது பரவலாகக் கொட்டி, அதிலிருந்த ஒவ்வொரு பிராணியையும் கூர்ந்து கவனித்தோம். எத்தனை வடிவங்கள்! எத்தனை நிறங்கள்! கற்பனைக்கும் எட்டாத அழகுக் காட்சியாக இருந்தது.

பிளாங்க்டனில் முக்கால் பங்கு [1] ஷ்ரிம்ப் போன்ற கடல் பிராணிகளும், தனித்து மிதக்கும் மீன் முட்டைகளுமேயாம். இவை தவிர சிறிய மீன் குஞ்சுகள், ஓட்டுமீன்கள், மிகச் சிறிய புதுமையான நண்டுகள், ஜெல்லி மீன்கள் ஆகிய பலவகை உயிரினங்கள் இருந்தன. அவற்றில் சில ஒளி புகும் காகிதத்தில் வெட்டப்பட்டது போன்ற விளிம்புடன் காட்சி அளித்தன. வேறு சில சிவந்த அலகுகளும், இறக்கைகளுக்குப் பதில் கடினமான ஓடும் பொருந்திய மிகச் சிறிய பறவைகள்போல் தோன்றின. பிளாங்க்டன் உலகில் இயற்கையின் பரிசோதனைகளுக்கு எல்லையே இல்லை. எவ்வளவு உயர்ந்த சித்திரக்காரனும் இவ்வியற்கைப் பொருள்களைக் கண்டால் தன் தோல்வியை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஏனெனில், இயற்கையினது சிருஷ்டி சக்திக்கு முன்னால் மனிதனின் சிருஷ்டி சக்தி எம்மாத்திரம்?

குளிர்ந்த ஹம்போல்ட் நீரோட்டம் பூமத்தியரேகைக்குத் தென் மேற்காகத் திரும்பிய இடத்தில் பிளாங்க்டனின் செழிப்பைக் கண்டோம். சில மணி நேரத்துக் கொரு-

---

1. Shrimp

முறை பல பவுண்டு எடையுள்ள பிளாங்க்டனை வலைப்பையி-லிருந்து கஞ்சிபோல் கொட்டிச் சேர்த்தோம். அவ்வவ்-விடத்துக்குத் தக்கவாறு பழுப்பு, சிவப்பு, சாம்பல், பச்சை ஆகிய பற்பல நிறங்களில் அடுக்கடுக்காகக் கொட்டப்பட்டு அழுந்திக் கட்டியாய்க் கிடந்தது பிளாங்க்டன். இரவில் எங்களைச் சூழ்ந்திருந்த கடல்நீர் ஒளி வீசியபோது, பிளாங்க்டன் பளபளப்பான மணித்திரளைப்போல் மின்னி மனத்தைக் கவர்ந்தது. கொள்ளைக்காரனின் பெருநிதி-போல் தோன்றிய இதைக் கொட்டிப் பிரித்தபோது இலட்சக்-கணக்கான சிறிய ஷ்ரிம்ப் வகைகளும், தீப்பற்றி எறிந்த நிலக்கரித் துண்டுகள்போல் இருளில் ஒளி வீசிய மீன்குஞ்சு-களும் தோற்றம் அளித்தன. தூரப் பார்வைக்கு எவ்வளவு அழகாகத் தோன்றினவோ, அவ்வளவு அருவருப்பான தோற்றம் அளித்தன நெருங்கிப் பார்த்தபோது. எவ்வளவு துர்நாற்றம் வீசியதோ, அவ்வளவு சுவைமிக்கனவாய் இருந்தன.

தாவர பிளாங்க்டனில் சில சிறியனவாயும் சாப்பிடத்-தகாதனவாயும் இருந்தன. இன்னுஞ் சில எளிதில் பொறுக்கி எடுக்கக்கூடிய அளவுக்குப் பெரிதாய் இருந்தன. சில பிராணிகள் கண்ணுடிப் பலூன்களைப் போன்றவை. சில அரை அங்குலம் நீளமுள்ள ஜெல்லி மீன்கள். இவ்விரு வகைகளும் கசப்பாய் இருந்தமையால், அவற்றை எறிந்து-விட நேரிட்டது. மற்றப்படி யாவுமே உண்ணத் தகுந்தன-வாய் இருந்தன. அவற்றைப் பச்சையாகவோ, அன்றி நல்ல நீரில் சமைத்துக் குழம்பு அல்லது கஞ்சியாகவோ குடித்தோம். கட்டுமரத்தில் இருந்த எங்களில் இருவருக்குப் பிளாங்க்டன் மிகவும் பிடித்திருந்தது. மற்றும் இருவருக்கு அது சுமாரான உணவாய்த் தோன்றியது. மீதி இருவரும் அதை அறவே வெறுத்தனர். உடம்புக்கு வலுதரும் நோக்கிலிருந்து ஆராய்ந்தால் அவை பெரிய ஓட்டுமீன்-களுக்குச் சமமானவை. மசாலைச் சேர்த்துச் சரியானபடி சமைத்தால், கடல் தரும் உணவு வகைகள் எல்லா-வற்றுள்ளும் சிறந்தது பிளாங்க்டனே என்று சொல்லத் தோன்றும். இந்தச் சிறிய கடற் பிராணிகளில் சக்தி தேங்கிக் கிடக்கிறது என்பதற்குக் கருந் திமிங்கிலமே நல்ல சான்றாகும். உலகத்தில் மிகப் பெரிய பிராணி-யாகிய இது பிளாங்க்டனைத் தின்றே உயிர் வாழ்கிறது.

கட்டுமரத்தில் அமர்ந்து நாங்கள் பார்த்துக் கொண்டிருந்த-போது ஒரு திமிங்கிலம் அருகில் செல்லக் கண்டோம். அது கடல் நீரைப் பெருவாரியாகக் குடித்தது. பிறகு தன் வாய்ச் சவ்வில் வடிகட்டிப் பிளாங்க்டனைப் பிரித்தெடுத்துக்-கொண்டு, நீரை அருவிபோல் வீசி இறைத்தது. வடிகட்டு-வதற்கு எவ்வளவு சிறந்த இயற்கை அமைப்பு பாருங்கள்!

ஒருநாள் பிளாங்க்டன் வலை காணமற் போய்விட்டது. டார்ஸ்டைனும், பெங்டும் ஒரு திமிங்கிலத்தை சுட்டிக் காட்டி எங்களை ஏளனம் செய்தனர். "வலை காணமற் போயிற்று என்று ஏன் கவலைப் படுகிறீர்கள்? அந்த திமிங்கிலத்தைப்போல் நீங்களும் செய்வதுதானே? கடல் நீரை வாயில் நிரப்பிக் கொண்டு, மீசைகளின் வழியாக நீரை உமிழ்ந்துவிட்டுப் பிளாங்க்டனை மட்டும் உட்கொள்வது தானே," என்றனர். நாங்கள் படகுகளில் சென்றபோது பல திமிங்கிலங்களைப் பார்த்ததுண்டு. கண்காட்சிச் சாலை-களிலும் பலவற்றைக் கண்டிருக்கிறோம். குதிரை அல்லது யானையைப் போன்ற வெப்பமான இரத்தம் கொண்ட பிராணியிடம் ஏற்படும் உணர்ச்சி இந்தத் திமிங்கிலத்தி-னிடம் ஏற்படுவதில்லை. உயிர்நூலின்படி, திமிங்கிலம் குட்டிபோட்டுப் பால் கொடுக்கும் இனத்தைச் சேர்ந்தது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆயினும், அதன் செயல், வகை, நோக்கங்களை ஆராயும்போது, அது ஒரு பெரிய [1] சில்லிட்ட மீனாகவே தோன்றுகிறது. ஆனால், கட்டுமரத்தின் ஒருபுறம் பெருந் திமிங்கிலங்கள் வேகமாக நீந்திவந்தபோது, எங்களுக்கு வேறொரு அனுபவமும் கிடைத்தது.

ஒரு நாள் வழக்கம்போல் நாங்கள் கட்டுமரத்தின் ஓரத்-தில் உட்கார்ந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தோம். பாத்திரங்-களைக் கழுவிச் சுத்தம் செய்யச் சிறிதளவு பின்புறம் சாய்ந்தோம். திடீரென்று பின்புறத்தில் ஏதோ ஒன்று பலமாக ஊதும் ஒலி கேட்டுத் திடுக்கிட்டோம். ஒரு பெருந் திமிங்கிலம் நெருங்கி வந்து எங்களை வெறித்துப் பார்த்தது. அதன் ஊதும் துவாரத்தில் (மூக்கில்) பளபளப்பாக ஏதோ ஒன்று மின்னுவதைக் கண்டோம். நடுக்கடலில் எல்லா உயி-ரினங்களும், சத்தமின்றி நெளிவதையும், சுவாசப்பைகள்

1. Cold

இன்றிச் செவுள்களை அசைப்பதையும்தான் அதுவரை நாங்கள் கண்டிருந்தோம். ஆகவே, மூச்சுவிடும் ஒரு பிராணியைக் கண்டதும் எங்களுக்கு அளவற்ற ஆச்சரியம் உண்டாயிற்று. எங்களைப்போலவே கடலுக்குள் வெகுதூரம் பயணம் செய்துவிட்ட இந்தத் திமிங்கிலம், ஒரு பண்டை நாளைய எட்டிய உறவினர்போல் எங்களுடைய நல்லுணர்ச்சியில் ஒரு பங்கு கொண்டது. நன்ருக உண்டு களிப்புடன் இருந்த ஒரு நீர் யானையை இத்திமிங்கிலம் எங்களுக்கு நினைவூட்டியது. கடலுக்குள் மூழ்கி மறைவதன்முன் அது மேலெழுந்து வந்து மூச்சு விட்டது. 'மூச்சு விட்டது' என்ற காரணத்தாலே எங்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று.

நாங்கள் பல முறைத் திமிங்கிலங்களைப் பார்த்தோம். அவை பெரும்பாலும் சிறிய உருவம் உடையனவாகவும் பற்கள் கொண்டனவாகவும் இருந்தன. அவை பெருந்திரளாக வந்து கடலின் மேற்பரப்பில் தாவிப் பாய்ந்தன. சிற்சில சமயங்களில் பெரிய உருவம் உடையனவும் ராட்சஸ வகைகளும் வருவது உண்டு. தனித்தோ அல்லது சிறு கூட்டங்களாகவோ அவை திரியும். தொடுவானத்தில் செல்லும் கப்பல்களைப்போல் அவை தோன்றின. ஆனுல், அடிக்கடிக் கடல் நீரை முகந்துகொண்டு ஊற்றைப்போல் வானத்தில் ஊதிப் பீச்சிக்கொண்டு நகர்ந்தன. சில சமயங்களில் நேரே எங்களை நோக்கி வருவதும் உண்டு.

ஒரு சமயம் எங்கோ சென்றுகொண்டிருந்த ஒரு திமிங்கிலம் திடீரென்று தன் போக்கை மாற்றிக்கொண்டு எங்கள் கட்டுமரத்தை நோக்கித் தீர்மானமாக வந்தது. அது மோதினுல் ஏற்படக்கூடிய அபாயத்தினின்றும் தப்பித்துக்கொள்ள நாங்கள் ஆயத்தம் செய்துகொண்டோம். எங்கள் அருகில் வந்ததும் அது தன் தலையை நீர்மட்டத்துக்குமேல் சுழற்றித் தூக்கிக்கொண்டு, நீரை வானில் வாரி இறைத்தது. அதனுல் எழுந்த நெடிய, பலத்த, பேரொலியைக் கேட்டோம். அதன் உடல் பெருத்தும், தோல் கனத்தும், உருவம் அழகின்றியும் அமைந்திருந்தது. அது நிலத்தில் வாழும் ஒரு பிராணியேயாகும். பெரு முயற்சி செய்து அது நீரினுள் நகர்ந்தது. அதற்கும் மீனுக்கும் உள்ள வேற்றுமையை விளக்கவேண்டுமானுல் வௌவா-

லுக்கும் பறவைக்கும் உள்ள வேற்றுமையைப்போல் என்று உவமை கூறலாம். நேரே அது எங்கள் கட்டுமரத்தின் இடது புறத்தில் வந்தது. அப்போது நாங்கள் மரத்தின் ஓரத்தில் நின்றுகொண்டிருந்தோம். பாய்மரத்தின் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவன், "இதுபோல் இன்னும் ஏழெட்டு நம்மை நோக்கி வந்து கொண்டிருக்கின்றன," என்று கூறினன்.

கட்டுமரத்துக்கு இரண்டு கெஜதூரம் வரை வந்த அத் திமிங்கிலம் மெல்ல மறைந்தது. பளபளப்பான கருத்த பெரும் தலை நீரில் மூழ்கிற்று. கரு நீலமான அந்த ராட்சஸ வடிவம் கட்டுமரத்தின் அடியில் அமைதியாகப் புகுந்தது; அசைவின்றி, இருளைப்போல, எங்களுடைய காலடியில் சிறிதுநேரம் கிடந்தது. வியப்பும், பயமும் மிக்க அந்நிலையில் மூச்சைப் பிடித்துக்கொண்டு அதையே நாங்கள் உற்று நோக்கிக்கொண்டிருந்தோம். கட்டுமரத்தைவிட நீண்ட அவ்வுடல் மெல்ல ஆழ்ந்து நீலக்கடலுக்குள் மறைந்தது.

அதற்குள் ஒரு பெரும் திமிங்கிலக் கூட்டம் எங்களுக்கு அருகில் வந்துவிட்டது. ஆனல், அது எங்களைக் கவனிக்கவே இல்லை. தங்கள் ராட்சஸ பலத்தைக்கொண்டு, வேட்டையாட வந்தவர்களின் படகுகளை வாலினல் அடித்து மூழ்கவைத்த திமிங்கிலங்கள் பல இருந்தன. அவை முதலில் தாக்கப்பட்டிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. முற்பகல் முழுதும் எங்களைச் சுற்றி எதிர்பாராத இடங்களிலெல்லாம் நீரை வாரி விண்ணில் இறைக்கும் காட்சியைக் கண்டோம். ஆனல், ஒரு திமிங்கிலமேனும் கட்டுமரத்தையோ, துடுப்பையோ அணுகவில்லை. சூரிய வெப்பத்தில் அலைகளின் ஊடே பாய்ந்து ஓடித் திரிவதில் அவை பெரிதும் இன்புற்றன. நடுப்பகலில் அவை யாவும், ஏதோ சைகையைப் புரிந்து கொண்டவைபோல நீரினுள் சென்று மறைந்துவிட்டன. பிறகு அவை திரும்பி வரவில்லை.

கட்டு மரத்தின் அடியில் நாங்கள் கண்டவை திமிங்கிலங்கள் மட்டும் அல்ல. நாங்கள் படுத்துக்கொள்ள விரித்திருந்த பாயை எடுத்துவிட்டு, மரத்தளத்தின் இடுக்குகளின் வழியே பார்த்தோம். அவ்வப்போது ஒரு மீன் சிறகு நீரில் நெளிவது தெரிந்தது. சில சமயங்களில் முழு மீன்களும் காணப்படும். மரத்தளத்தில் இருந்த இடுக்குகள் இன்னும்

சிறிது அகன்றிருப்பின் படுக்கையில் படுத்தபடியே தூண்டிலை நீரில் வீசி மீன் பிடித்திருப்போம்.

கட்டுமரத்தில் ஒட்டிக்கொண்டு எங்களுடன் நீந்திவந்த மீன்கள் பெரும்பாலும் இருவகையின. ஒன்று டால்பின் என்ற இனத்தைச் சேர்ந்தவை. மற்றென்று பெரும் சுருமீன்களுக்குமுன் பணியாள்போலச் செல்லும் சிறு மீன் இனத்தைச் சேர்ந்தவை. கலாவோவை விட்டுப் பயணம் தொடங்கியது முதல் ஒவ்வொரு நாளும் பெரிய டால்பின் மீன்கள் எங்களைச் சூழ்ந்துக்கொண்டு நீந்தியவாறே இருந்தன. எதற்காக அவை அங்கு வந்தன என்பது தெரியவில்லை. கட்டுமரத்தின் அடித்தளத்தை ஒரு கூரையாகக் கொண்டு, அதன் நிழலிலேயே இருந்து நீந்துவதில் அவை இன்பங் கண்டிருக்கலாம். அல்லது கட்டுமரத்திலும் துடுப்பிலும் ஒட்டிக்கொண்டு, மாலைகளைப்போல் தொங்கிய கடற் பாசிகளும், நீர்ப்பூண்டுகளைப் போன்ற ஒரு வகைப் பிராணிகளும் அவற்றுக்குச் சிறந்த உணவாக அமைந்திருக்கலாம். சிறிய பசிய பூச்சாக வளரத் தொடங்கிய கடற்பாசி, வியக்கத்தக்க வேகத்தில் கொத்துக் கொத்தாக வளர்ந்துவிட்டது. சிறு மீன்களுக்கும் நண்டுகளுக்கும் இப்பாசி ஒரு சிறந்த உறைவிடம். எங்கள் கோன்டிகி ஏதோ ஒரு தாடிக்காரக் கடல் தேவனைப்போல் மெல்ல மெல்ல அலைகளின் இடையே தள்ளாடி நகர்ந்தது.

ஒரு சமயம் கட்டுமரத்தில் எறும்புகளின் ஆதிக்கம் வலுப்பெறத் தொடங்கிற்று. தொடக்கத்தில் சில கட்டைகளுள் சிறிய கறுப்பு எறும்புகள் இருந்தன. நாங்கள் கடலில் பயணம் செய்யத் தொடங்கியதும் மரக்கட்டைகளில் ஈரம் புகுந்தது. ஆகவே, எறும்புக் கூட்டங்கள் வெளிக்கிளம்பின. நாங்கள் தூங்குவதற்கென உபயோகித்து வந்த பைகளுள் எறும்புகள் புகுந்துவிட்டன. கட்டுமரம் முழுவதும் அவை பரவி எங்களைக் கடித்துத் துன்புறுத்தின. கட்டுமரத்தைவிட்டு வெளியேற நேரிடுமோ என்றும் நாங்கள் பயந்ததுண்டு. ஆனல், கடலில் செல்லச் செல்லக் கட்டைகளில் ஈரம் அதிகரிக்கவே, எறும்புகள் அவ்விடத்தை விட்டு அகன்றன. பயணம் முடியும்போது எஞ்சி இருந்தவை வெகு சிலவே. கட்டுமரத்தில் செழித்து வளர்ந்த உயிரினங்கள் நண்டுகளும் முன்னர் கூறப்பட்ட (நீர்ப்-

பூண்டுகளைப் போன்ற) கடற் பிராணிகளுமே. அவை சுமார் ஓர் அங்குலத்திலிருந்து ஒன்றரை அங்குலம் வரை நீண்டிருந்தன. கட்டுமரத்தின் காற்றடிக்காத பக்கத்தில் அவை நூற்றுக்கணக்கில் வளர்ந்தன. அவற்றைச் சேகரித்துச் சமைத்துச் சாப்பிட ஆரம்பித்தோம். ஆனால், காலியான இடத்தில் மறுபடியும் அவை வெகு விரைவில் தோன்றி வளர்ந்தன. சமைத்த பின் அவை சுவை மிகுந்திருந்தன. அவ்வப்போது கிடைத்த கடற் பூண்டுகளையும் நாங்கள் வீணாக்கவில்லை. அவற்றைச் சமைக்காமலே உண்டோம்; சுவை மிகுந்திராவிடினும் உண்ணத் தகுந்தனவாய் இருந்தன. டால்பின் மீன்கள் எங்களுடனே வந்துகொண்டிருந்தன. ஆயினும், மேற்சொன்ன தாவர வகைகளில் எதையும் அவை உண்ணவில்லை. மின்னும் தம் அடிவயிற்றை மேலே காட்டிக்கொண்டு, மல்லாந்த வண்ணம் அவை கட்டைகளின் அடியில் நீந்திக்கொண்டிருந்தன.

டால்பின் என்பது ஒரு உஷ்ணப் பிரதேச மீன். பளபளப்பாக நிறம் வீசும் சிறிய பற்கள் கொண்ட திமிங்கில வகையைச் சேர்ந்த ஒரு பிராணி டால்பின் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. ஆனால், இங்குக் கூறப்படுவது அதுவன்று. இந்த டால்பின் சாதாரணமாக $3\frac{1}{4}$ முதல் $4\frac{1}{2}$ அடி வரை நீண்டது; பக்கங்கள் தட்டையாயும் தலை உயர்ந்து பெருத்தும் இருக்கும். ஒரு சமயம் நாங்கள் பிடித்த டால்பின் 4 அடி 8 அங்குல நீளமாய் இருந்தது. அதன் தலையின் உயரம் $13\frac{1}{2}$ அங்குலம்; எழில் கொழிக்கும் வண்ணங்கள். நீரில் இருக்கும்போது தங்க நிறச் சிறகுகள் பளபளக்க நீலமாகவும், பச்சையாகவும் ஒளி வீசின. ஆனால், கட்டு மரத்தின்மீது இழுத்துப் போட்டபின் அதில் ஒரு புதுமையை நாங்கள் கண்டோம். மெல்லச் சாகும் மீனின் வண்ணம் மாறிற்று. முதலில் கறுத்த புள்ளிகளோடு வெள்ளைச் சாம்பல் நிறம் தோன்றியது. பிறகு உடல் முழுதும் ஒரே மாதிரியாக வெள்ளை நிறம் அடைந்தது. நான்கைந்து நிமிடங்களில் பழைய நிறங்கள் மெல்லத் திரும்பவும் தோன்றின. நீரில் உள்ளபோதும் சில சமயங்களில் டால்பின் தன் நிறத்தை மாற்றிக்கொள்கிறது. அடிக்கடி ஒரு புதுவிதமான பளபளக்கும் தாமிர வர்ண மீனை நாங்கள் பார்த்தோம். கவனித்துப் பார்த்தபின் பழைய துணைவன் டால்பின்தான் என்பது தெரிந்தது. டால்பினுடைய உயர்ந்த

முன்தலை, ஒரு காவல் நாயின் தோற்றத்தை அதற்கு அளிக்கிறது.

பறக்கும் மீன்களின் கூட்டம் பயந்தோடும்போது, இந்த மீன்-தின்னி கடல் குண்டைப் போல் முன்தலையினுல் கடல்நீரைக் கிழித்துக் கொண்டு, அவற்றைத் துரத்திச் செல்லும். டால்பினுக்கு நல்ல இயல்பு மேலிட்டபோது, தட்டைப் பக்கமாகத் திரும்பிக் கொண்டு வெகுவேகமாக நீரில் பாய்ந்து சென்று, காற்றில் கடல் மட்டத்துக்கு மேல் எழும்பும். பிறகு நீரில் தட்டைப் புறமாக விழுந்து ஒலி எழுப்பும். விழுந்த இடத்தில் நீர் எழும்பி விழுவதற்குள், மற்ருெரு முறை பாய்ந்துவிடும். அலை எழும்பிவரும்போது, மறுபடியும் அலைமேல் பாய்ந்து விழும். ஆனுல், கெட்ட இயல்பு மேலிட்டபோது அதன் நடத்தை முற்றும் வேறுபட்டிருக்கும். உதாரணமாக, கட்டுமரத்தின்மீது அதை இழுத்துப் போட்டபோது கடிக்க முயற்சி செய்யும். ஒரு சமயம் டார்ஸ்டைன் தன்காலில் பெருவிரலைச் சுற்றி ஒரு துணியைக் கட்டிக்கொண்டு நொண்டி நடந்தான். அதைப்-பார்த்துக் கொண்டிருந்த ஒரு டால்பின் சட்டென்று அவ்-விரலைப் பற்றிக் கொண்டு நன்ருக மென்று விட்டது. சில-சமயங்களில் குளித்துக் கொண்டிருந்த மனிதர்களை டால்-பின்கள் தாக்கித் தின்று விடுவது முண்டு. ஆனுல், நாங்கள் நாள்தோறும் டால்பின்களுக்கு இடையில் குளித்-துக்கொண்டிருந்தும் அவை ஒரு நாளும் எங்களுக்குத் துன்பம் இழைக்க வில்லை. அவை பயங்கரமான ஊன்-தின்னிகள் என்பது எங்களுக்குத் தெரியும். ஏனெனில், அவற்றின் குடல்களில் [1] ஸ்க்விட் களையும், பறக்கும் முழு மீன்களையும் நாங்கள் கண்டிருக்கிருேம். பறக்கும் மீன் டால்பினுக்கு மிகவும் பிடித்தமான உணவாகும். நீர்மட்-டத்தில் நீர் தெறித்து எழுந்தால், பறக்கும் மீன்களை விரைவில் பிடிக்கும் நோக்கத்துடன் டால்பின்கள் குருட்டுத் தனமாகப் பாய்வதைக் காணலாம். காலைநேரத்தில் விழித்து எழுந்ததும், பற்குச்சியை எடுத்துக்கொண்டு மரத்தின் ஓரம் செல்வோம். விளிம்பில் நின்றுகொண்டு பற்குச்சியைக் கடல்நீரில் நனைப்பது வழக்கம். சில சமயங்களில் அவ்வாறு செய்யும்போது, ஒரு பெரிய மீன் மின்னல்

1 Squid

போலப்பாய்ந்து, பற்குச்சியில் இடித்துவிட்டு, ஏமாந்து போவதைப் பார்த்திருக்கிறேம். கட்டுமாத்தின் ஓரத்தில் உட்கார்ந்து, அமைதியாகக் காலே உணவு அருந்திக்கொண்டிருப்போம். பின்புறமிருந்து ஒரு டால்பின் குதித்து எழுந்து, பக்க வாட்டில் நீரை வாரி இறைக்கும். எங்கள் முதுகுகளிலும், உணவிலும் கடல்நீர் வந்து கொட்டும்.

ஒரு நாள் நாங்கள் உணவருந்திக் கொண்டிருந்தோம். அப்போது நம்ப முடியாத ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. சாப்பிட்டுக் கொண்டிருந்த டார்ஸ்டைன் திடீரென்று கையிலிருந்த சாப்பிடும் இடுக்கியைக் கீழே போட்டு விட்டுக் கடல் நீருக்குள் கையை விடுத்தான். கைப்பட்ட இடத்தில் சலனம் தெரிந்தது. என்ன நடக்கிறது என்பது எங்களுக்குப் புரியுமுன்னரே, ஒரு பெரிய டால்பிணைத் தூக்கிக் கட்டுமரத்தின் மீது போட்டான் டார்ஸ்டைன். சில நாட்களுக்கு முன் எரிக் மீன் பிடித்துக் கொண்டிருந்த போது ஒரு மீன் வலேயில் சிக்கியது. ஆனல், அது கயிற்றை அறுத்துக்கொண்டு உடனே ஓடிப்போயிற்று. சாப்பிட்டுக் கொண்டிருந்த டார்ஸ்டைனுடைய கண்ணுக்கு அக் கயிறு தென்படவே, அத்துடன் மீனேயும் இழுத்துவிட்டான். மீன் இந்த நிகழ்ச்சியால் திடுக்கிட்டிருக்க வேண்டும்.

கட்டுமரத்தைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டும், அடியில் நீந்திக் கொண்டும், ஆறு அல்லது ஏழு டால்பின்களாவது பின் தொடராத நாளே இல்லே. ஒருநாள் இரண்டு அல்லது மூன்று இருக்கலாம். ஆனல், மறுநாளே முப்பது, நாற்பது வந்துவிடும். சாப்பாட்டுக்குப் புதிய மீன் வேண்டுமென்ருல் சமையற்காரனுக்கு 20 நிமிடம் முன்பாகச் சொன்னல் போதுமானது. உடனே அவன் ஒரு மூங்கிலில் தூண்டில் கயிற்றைக் கட்டி, ஒரு பறக்கும் மீனே முள்ளில் கோத்துவிடுவான். ஒரு நொடியில் டால்பின்கள் நீரைப் பிளந்துகொண்டு முள்ளேப்பற்ற ஓடிவரும். ஒன்றன்பின் ஒன்ருக அவை வந்து சேரும். விளேயாடிப் பொழுது போக்குவதற்குத் தகுந்த மீன் இது. புதிய டால்பினுடைய உடல் அழுத்தமாய் இருந்தது. ஆனல், உண்ண இனிதாய் இருந்தது. இரண்டுநாள் வைத்திருந்தாலும் டால்பின் ஊன் கெடாது. எங்களுடன் பழக்கம் ஏற்படுத்திக் கொண்ட மற்ருெரு வகை மீன் வழிகாட்டிமீன் எனப்படும். இவை

சுருமீன்களுடன் வந்தன. சுருமீன்கள் கொல்லப்பட்டபின் எங்களுடனே தங்கி விட்டன. நாங்கள் கடலில் அதிக தூரம் செல்வதற்குள்ளாகவே முதல் சுருமீனைக் கண்டோம். பின் சுருமீன் வருவதென்பது நாள்தோறும் நடக்கும் நிகழ்ச்சி ஆயிற்று. சில சமயங்களில் நீந்தி வந்த சுருமீன் எங்களை ஓரிருமுறை வட்டமிட்டுக் கூர்ந்து கவனித்து-விட்டுப் பின்னர் தன் உணவைத் தேடிச் சென்றுவிட்டது. கட்டுமரத்தின் பின்புறத்தில் சுக்கான் கட்டைக்கு அருகில் தங்கி, சத்தமின்றி ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கத்துக்கு மாறிமாறி மெல்ல நகர்ந்து கொண்டிருப்பதைப் பல முறை கண்டோம். அடிக்கடி தன் வாலை அசைத்துக்கொண்டு கட்டுமரத்தின் அமைதியான போக்கிலே தானும்தொடர்ந்து வரும். சுருமீனின் கரும்சாம்பல் உடம்பு நீர்மட்டத்தின்-கீழ் சூரிய ஒளியில் பழுப்பாகத் தெரிந்தது. சுருமீன் மேலும் கீழுமாக அசைந்து கொடுத்தபோது, அதன் முதுகுச் சிறகு பயமுறுத்தும் வகையில் வெளியே வந்தது. மிகப் பெரிய அலைகள் எழும்போது சில சமயங்களில் சுருமீன் அலைகளால் தூக்கப்பட்டு எங்களுக்கும் மேல் உயரத்தில் தெரியும்.

வாய்க்குச் சற்று முன்னுக வழிகாட்டிகள் நீந்திவர, கம்பீரமாக எங்களை நோக்கி வரும் சுருமீன். அப்போது கண்ணுடிப் பெட்டியில் வைக்கப்பட்டிருப்பது போல் தெரியும். ஒரு கணம் சுருமீனும், அதன் துணைவர்களும் கட்டுமரத்தின் மீதே வந்து விடுமோ என்றுகூடத் தோன்-றும். அடுத்த கணம், கட்டுமரம் எழிலுற அலைகளின் மீது எழுந்து விடும். சுருமீன்களின் பயங்கரமான தோற்றத்-தையும், கடலில் அவற்றுக்கு இருந்த மதிப்பையும் கொண்டு, நாங்கள் அவற்றுக்கு அதிக மரியாதை செலுத்-தினேம். நீரினுள் நீந்துவதற்கென அமைந்திருந்த அதன் உடலில் கட்டுக்கடங்காத பலம் தேங்கிக் கிடந்தது; எஃகுத் தசைகள் கொண்டு ஆக்கியது போன்ற உடல், அகன்ற தட்டையான தலை, கருணையற்ற ஒரு தீனியாசை, சிறிய பச்சையான பூனைக் கண்கள், கால்பந்துகளை விழுங்கி விடக் கூடிய பெருந்தாடைகள். சுக்கான் பிடிப்பவன் திடீரென்று, ‘ வலப்புறத்தில் சுருமீன் ’ என்ருே ‘ இடப்புறத்தில் சுருமீன் ’ என்ருே கூச்சலிட்டால், உடனே

நாங்கள் வெளியே வந்து, கை-ஈட்டி முதலிய ஆயுதங்களுடன் விளிம்பில் தயாராக நின்றுகொள்வோம். தன் முதுகுச்சிறகு பலகைகளுக்கு அருகில் இருக்குமாறு சுரு எங்களைச் சுற்றி நீந்திவரும். கொக்கிக் கம்பிகளால் அதன் சுரசுரப்பான முதுகில் குத்தினல், கம்பிகள் மெழுகைப்போல்வளையும். ஈட்டிகளை உபயோகித்தால் சில சமயங்களில் கடுஞ்சண்டையிடும்போது அவை உடைந்துபோகும். இதனல் சுருவினிடம் எங்களுக்கு இருந்த 'பயபக்தி' அதிகரித்தது. சுருவின் கெட்டியான மேல்தோலைத் துளைப்பதால் எங்களுக்கு ஒரு பலன்தான் கிட்டியது. அது கடும்போராட்டமே யாகும். சுற்றியிருந்த நீர் கொதிப்பது போலப்பொங்கும். முடிவில் சுரு தப்பி ஓடிவிடும். எண்ணெய் போன்ற ஒரு திரவம் சிறிதளவு நீர் மேல் மிதக்கும்.

ஒரு சமயம் எங்களிடம் ஒரே கை-ஈட்டிதான் இருந்தது. ஆகவே அதைக் காப்பாற்றி வைத்துக்கொள்வது அவசியமாயிற்று. அப்போது நாங்கள் கிடைத்த பெரிய மீன் தூண்டில்களையெல்லாம் ஒரு கட்டாகச் செய்து ஒரு முழு டால்பினின் உடலுக்குள் அதைச் செருகினேம். ஜாக்கிரதையாகப் பல எஃகுக் கம்பிகளைக் கட்டிய பின்னர் (டால்பின்) இரையைக் கடலுக்குள் இறக்கினேம். மெல்ல வந்தது சுருமீன். தன் தலையை நீருக்குமேல் தூக்கிப் பிறை வடிவமான பெரும் தாடைகளை ஓர் அசைப்புடன் திறந்தது. மறுகணம் முழுமீனும் உட்சென்றது. சரியானபடி சிக்கிக் கொண்டதும் போராட்டம் தொடங்கிற்று. சுரு நீரை அடித்து நுரைத்தபோதிலும், நாங்கள் விடவில்லை. கயிற்றை இறுகப் பிடித்துக் கொண்டு அதைப் பின்புறம் இருந்த கட்டைகளின் மேல் இழுத்து விட்டோம். இனிமேல் என்ன நடக்கும் என்று எதிர்பார்த்துக் கொண்டு இணைவாக அமைந்த தன் ரம்பம் போன்ற பற்களைத் திறந்து காட்டியவாறு சுரு கிடந்தது. அச்சமயம் ஓரலை மேலெழுந்தது. அதைப் பயன் படுத்திக்கொண்டு சற்றுத் தாழ்ந்து, விளிம்புக் கட்டைகளின்மேல் சுருவை இழுத்து விட்டோம். அதன் வால் சிறகைக் கயிற்ருல் கட்டி விட்டோம். அது துள்ளியடித்து ஓயும் வரை தூர நின்று கவனித்துக் கொண்டிருந்தோம். சுருவின் மேல் தோலில்

எங்களுடைய கை ஈட்டியின் ஒடிந்த பகுதியைக்கண்டோம். இதனுல்தான் சுரு அதிகமாக எங்களுடன் சண்டை இடவில்லை என்று நினைத்தோம். ஆனுல், பின்னுல் இதே முறையைக் கையாண்டு பல சுரு மீன்களைப் பிடித்தோம். அப்போதெல்லாம் எங்கள் வேலை எளிதாக முடிந்தது. கனமாய் இருந்ததால் அதனுடன் விளையாடுவது ஆபத்தாகும். ஆனுல், ஒரு அங்குலம் கூட விட்டுக் கொடுக்காமல் கயிற்றை இழுத்துப் பிடித்தால், அது மிக விரைவில் தைரியம் இழக்கும். பின், தன் முழு பலத்தையும் உபயோகிக்காமலே சரண் அடைந்து விடுகிறது.

நாங்கள் பிடித்த சுருக்கள் ஆறு அடி முதல் பத்து அடி வரை நீளமுடையவை. நீலம் அல்லது பழுப்பு நிறம் உடையன. மேல் தோல் தடித்திருந்ததால் கூரிய கத்தியைத் தவிர வேறு எதனுலும் துளைக்க முடியாது. அப்போதும் முழு பலத்தையும் உபயோகிக்க வேண்டியிருக்கும். வயிற்றுப் புறத்திலும், முதுகுப் புறத்தைப் போலவே கத்தி புக முடியாத தோல் உண்டு. தலையின் பின்புறம் உள்ள செவுள் பிளவுகள்தான் எளிதில் தாக்கப் படலாம். ஒரு சமயம் சுரு மீன் ஒன்றைக் கட்டு மரத்தின்மேல் இழுத்துப் போட்டோம். கறுத்த, வழ வழப்பான [1] ரிமோரா மீன்கள் அதன் உடலில் அழுத்தமாக ஒட்டிக் கொண்டிருந்தன. அவற்றின் வாலைப் பிடித்து இழுத்தோம். அப்போதும் அவை விடாப் பிடியாக ஒட்டிக்கொண்டிருந்தன. ஆனுல் தாமாகவே செல்ல நினைத்தால் கண நேரத்தில் விலகிச் சென்று விடும். நாங்கள் சுரு மீனைப் பிடித்தபின் அது கடலுக்குத் திரும்பிச்செல்லும் அறிகுறிகள் ஏதும் காணப்படாமையால், அதில் ஒட்டிக் கொண்டிருந்த மீன்கள் குதித்துச் சென்று, கட்டு மரப் பலகைகளின் இடுக்குகள் வழியே கடலில் விழுந்தன. இவை சாதாரணமாக ஒரு விரல் நீளம் இருக்கும். ஓரடி நீளம் உள்ளனவும் காணப்பட்டன. தென்கடல் வாசிகள் கையாளும் ஒரு முறை எங்களுக்கும் புரிந்தது. ரிமோரா மீனின் வாலில் ஒரு கயிற்றைக் கட்டி, அதை நீந்திச் செல்ல விட்டால், தான் பார்க்கும் முதல் மீனுடன் அது ஒட்டிக் கொள்ளும். மிக அழுத்தமாக ஒட்டிக் கொள்ளும் ஆற்றல் அதற்கு உண்டு.

1. Remora

ஆகவே, வலேஞன் சிறிது நேரத்துக்குப் பின் கயிற்றைப் பிடித்து இழுத்தால், ரிமோராவுடன் வேருெரு மீனும் கிடைக்கும். இம் முயற்சியில் நாங்களும் ஈடுபட்டோம். ஆனல், எங்களுக்கு வெற்றி கிடைக்க வில்லே. அதிருஷ்டக் குறைவு போலும்! நாங்கள் செல்ல விட்ட ரிமோராக்கள் வேகமாய்ச் சென்று கட்டுமரத்தின் கட்டைகளேயே பற்றிக் கொண்டன. பெரிய சிறப்பானதொரு சுருமீனேப் பற்றிக் கொண்டதாக அவை நினேத்தன போலும்! நாங்கள் எவ்வளவு பிடித்து இழுத்தும், அவை விடாமல் கட்டு மரத்தைப் பிடித்துக் கொண்டு தொங்கின. செல்லச் செல்ல இம் மாதிரி தொங்கிய ரிமோராக்களின் எண்ணிக்கை அதிகரித்தது. இவை எங்களேப் பசிபிக் பயணம் முழுவதும் தொடர்ந்தன. ரிமோரா ஒரு மந்த புத்தியுள்ள விகாரமான மீன். வழிகாட்டி மீனேப் போல் சுறு சுறுப்போ, நல்லியல்போ இதனிடம் காணப்பட வில்லே. வழிகாட்டி சிறியதாக, சுருட்டு வடிவத்தில், வரிக் குதிரை போன்று வரிகள் கொண்டதாய் இருந்தது. சுரு அரைக் குருடன் என்றும் அதனல் அதற்குமுன் வழிகாட்டிச் செல்கிறது என்றும் மக்கள் நினேத்ததால் அது அப்பெயர் பெறலாயிற்று. உண்மையில், வழிகாட்டி மீன் சுருவைத் தொடர்ந்து செல்கிறது; அவ்வளவுதான். ரிமோராவைப் போல் சுருவின் உடலில் ஒட்டிக் கொள்ள வழிகாட்டியால் முடிவதில்லே. ஆகவே, தன் தலேவஞன சுரு காற்ருலோ கடலலேகளாலோ தூக்கிச் செல்லப்பட்டு மறைந்து போகுமானல் வழிகாட்டி பெரும் குழப்பம் அடைகிறது. தலேவனேத் தேடி அலேகிறது. முடிவில் தன் முயற்சி பயனற்றுப் போனல், திரும்பத் திரும்பக் கட்டு மரத்தின் பின்புறம் வந்து நெளியும். ஆங்கல்லவா அதன் தலேவன் வானில் ஏறி மறைந்தது! காலம் செல்லவும், சுருமீன் திரும்பி வராததைக் கண்டு புதிய தலேவனேத் தேடிப் பார்க்கும். அப்போது அருகில் இருக்கும் தலேவன் கோன்டிகி அல்லவா?

தலேகீழாகக் குனிந்து தெளிந்த கடல் நீரில் தலேகளே ஆழ்த்திப் பார்த்தோம். மரத்தின் அடிப்புறம் ஒரு கடல் பூதத்தின் வயிறுபோல் இருந்தது. சுக்கான் துடுப்புக்கும் நடுப் பலகைகளுக்கும் இடையே புதிதாக வந்து சேர்ந்த

வழிகாட்டி மீன்கள் ஒன்றின் பக்கத்தில் ஒன்ருக நீந்தின. குனிந்து பார்த்த மனிதத் தலையை அவை பொருட்படுத்த வில்லை. ஒன்றிரண்டு மட்டும் வேகமாக அருகில் வந்து பார்த்துவிட்டு மீண்டும் திரும்பின. நாங்கள் கண்ட வழி-காட்டிகளை இருவகையினதாகப் பிரிக்கலாம். பெரும் பாலானவை நடுப்பலகைளுக்கு இடையில் நீந்தின. மற்-றவை அழகாக விசிறி போன்ற அமைப்புடன் கட்டு மரத்-திற்கு முன்னல் சென்றன. அடிக்கடி கட்டு மரத்திலிருந்து வேகமாகச் சென்று, வழியில் மிதக்கும் பொருள் எதையாவது விழுங்கி விட்டு மீண்டும் வந்து சேர்ந்தன. சாப்பாட்டுக்குப் பிறகு பாத்திரங்களை நாங்கள் கழுவும்போது, வழிகாட்டிகள் கூட்டங் கூட்டமாக, அங்குவந்து சேரும். பாத்திரத்திலி-ருந்து கிடைப்பதில் ஒரு துண்டு விடாமல் அவை ஆராய்ந்து பார்த்தன. தாவரப் பொருள்களை அவை விரும்பவில்லை. மற்றவை உடனே விழுங்கப்பட்டன. இந்த வியப்பூட்டும் மீன்கள் எங்களுடைய பாதுகாப்பையே நம்பி, எங்களுடன் வரத் தொடங்கியதால், அவற்றைக் காக்கவேண்டும் என்று குழந்தைகளிடத்துப் பெற்றோருக்கு உண்டாகும் ஓர் உணர்ச்சி எங்களுக்கு உண்டாயிற்று. கடலில் கோன்டி-கிக்கு இவை செல்லக் குழந்தைகள் போல் ஆயின. வழி-காட்டும் மீனைப் பிடிப்பது குற்றம் என்று நாங்கள் கருதத் தொடங்கினேம். எங்களுடைய பரிவாரத்தில் உண்மை-யாகவே குழந்தைகள் போன்ற வழிகாட்டிகளும் இருந்தன. இவை ஓர் அங்குல நீளம் கூட இல்லை. சுற்று வளர்ந்தவை ஆறு அங்குல நீளம் இருந்தன. திமிங்கிலச் சுருமீன் மறைந்தவுடன் அதனுடைய வழிகாட்டிகள் எங்களிடம் வந்து சேர்ந்து விட்டன. தொடர்ந்தாற்போலப் பல வெற்றி-களைக் கொண்ட கோன்டிகியின் பரிவாரத்தில் விரை-விலேயே நாற்பது அல்லது ஐம்பது வழிகாட்டி மீன்கள் வந்து சேர்ந்தன. ஆயிரம் மைல்களுக்கு மேலும் எங்களைப் பல வழிகாட்டிகள் தொடர்ந்து வந்தன.

சில சமயங்களில் இவ்வழிகாட்டிகள் நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டன. உதாரணமாக, ஒருநாள் நான் சுக்கான் பிடித்திருந்தேன். திடீரென்று தென்புறத்திலிருந்து கடல் குமுறுவதைக் கண்டேன். டால்பின்கள் ஒரு பெருங்-கூட்டமாக நீரில் பாய்ந்து கொண்டு வந்தன. வழக்கம்

போலத் தட்டைப் பக்கங்களினுல் நீரை இறைத்துக் கொண்டு, மெல்ல வரவில்லை. முழு வேகத்துடன் நீரிலும் காற்றிலும் பாய்ந்து வந்தன. அவை பாய்ந்ததால் நீலக்கடல் அலை கடையப் பட்டதுபோல் வெண் நுரை சூடியது. அவற்றின்பின் ஒரு கரிய முதுகு வளைந்து, வளைந்து விசைப் படகு போல வேகமாக வருவதைப் பார்த்தேன். உயிருக்குப் பயந்து ஓடிய டால்பின்கள் அம்புபோல் நீரினுள் மேலும் நீந்திக்கொண்டு, கட்டுமரத்தின் விளிம்புக்கே வந்தன. பின் திடீரென்று நீரில் மூழ்கின. சுமார் நூறு மீன்கள் ஒரே கூட்டமாய் நெருக்கிக் கொண்டு, கிழக்குப்புறம் திரும்பி நீந்த ஆரம்பித்தன. கட்டு மரத்துக்குப் பின்புறமிருந்த கடல் பல நிறங்கள் கொண்டு மின்னியது. அம் மீன்களைத் துரத்தி வந்த பளப் பளப்பான முதுகு சிறிதளவு கடல் மட்டத்துக்கு உயர்ந்த பின் அழகாக வளைந்து, கட்டு மரத்தடியிற் சென்று, பின் புறமாக டால்பின் கூட்டத்தைத் துரத்திச் சென்றது. அந்த மிகப் பெரிய பேயுருவம் ஒரு கரும் சுருமீன். சுமார் இருபது அடி நீளமிருக்கும். அது சென்றதும் அதனுடன் பல வழிகாட்டி மீன்களும் சென்றதைக் கண்டோம். கட்டு மரத்தை விட்டுச் சென்று இக் கடல் வீரனைப் பின் தொடருவதில் அவற்றுக்கு மிக்க உற்சாகம் உண்டாயிற்று. இவ்வீரன்தான் [1] ஆக்டோபஸ். இதனிடம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்று பயணத்தைத் தொடங்கும்போதே எங்களுக்கு எச்சரிக்கைக் கிடைத்திருந்தது. ஏனெனில், அது கட்டு மரத்தின் மீது ஏறக்கூடியது. அவற்றைப் பற்றிய சில செய்திகளும் அவற்றின் புகைப் படங்களும் எங்களுக்குக் கிடைத்திருந்தன. ஹம்போல்ட் நீரோட்டத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியில், அரக்க உருவம் படைத்த ஆக்டோபஸ் வசிப்பதாகவும், இரவில் அவை எழும்பிக் கடல் மட்டத்துக்கு வருவதாகவும் கேள்வியுற்றிருந்தோம். அவை மிகவும் தீனி ஆசை பிடித்தவை. ஒன்று தூண்டிலில் சிக்கிக் கொண்டால், மற்றொன்று தன் இனத்தவனுயிற்றே என்றும் கருதாமல் அதைத் தின்றுவிடும். சுரு மீனையும் கொல்லக் கூடிய நீண்ட கைகள் அவற்றுக்கு இருந்தன. திமிங்கிலங்களின் உடலில் விகாரமான பெரும் புண் வடுக்களை ஏற்படுத்த அவற்ருல் முடியும். கழுகின் மூக்கைப்போல் பிசாசு

1. Octopus

மூக்குகளும் அவற்றின் உடலில் மறைந்திருந்தன. மேலும், ஆக்டோபஸின் கண்கள் இருளில் ஒளிரும் தன்மையன. ஆகவே, எங்களைப் பிடிக்க வேண்டி அது கட்டு மரத்தின் மீது ஏறிவர வேண்டியதே யில்லை. நீரில் உள்ளபடியே தன் நீண்ட கைகளைக் கொண்டு, கட்டு மரத்தின் மூலை முடுக்குகளை எல்லாம் துழாவி ஆராய்ந்து விடலாம்.

நாம் கவனக் குறைவாக இருந்தால், இரவு நேரத்தில் திடீரென்று ஆக்டோபஸின் சில்லிட்ட கைகள் எங்களைத் தடவிப் பார்க்கும். சில சமயங்களில் தூங்கும் பைகளி-லிருந்து எங்களை வெளியே இழுத்துவிடும். ஆகவே, ஆளுக்கொன்றாக வாள் போன்ற பெரும் கத்திகளை அருகில் வைத்துக் கொண்டே நாங்கள் தூங்கினோம். நாங்கள் பயணத்தைத் தொடங்கு முன்னே, பெருவில் இருந்த கடல-னுபவம் பெற்றவர்கள் இதைப்பற்றிக் குறிப்பிட்டு, ஆக்-டோபஸ் வகைகள் நிறைந்த பகுதி ஹம்போல்ட் நீரோட்டத்-திலேயே இருப்பதாகச் சொல்லியிருந்தார்கள். ஆகவே, நாங்கள் கவலை மிகுந்திருந்தோம். புறப்பட்டபின் பல நாட்-களுக்குக் கட்டுமரத்தின்மீதோ சுற்றியிருந்த கடலிலோ [1] ஸ்க்விட் இருந்ததாகத் தெரியவில்லை. பிறகு, ஒரு நாள் காலை அவை இருக்கின்றன என்பதற்கான முதல் எச்-சரிக்கை கிடைத்தது. விடியும் நேரத்தில் கட்டுமரத்தின் மேல் ஒரு சிறிய குழந்தை ஆக்டோபஸைக் கண்டோம். அது ஒரு பூனையின் அளவு இருந்தது. குடிசைக்கு வெளியில் ஒரு மூங்கிற்கழியைத் தன் கைகளால் இறுகத் தழுவிக் கொண்டு அது இறந்து கிடந்தது. ஸ்க்விட்டைச் சுற்றியும், மூங்கில் தளத்தின் மீது சிற்சில இடங்களில் மையைப் போல் கருத்த திரவம் தேங்கிக் கிடந்தது. அத் திரவத்தினால் எங்கள் குறிப்பேட்டில் எழுதிப் பார்த்தோம். பிறகு, இறந்து கிடந்த உடலை டால்பின்களுக்காகக் கடலில் எறிந்தோம். இந் நிகழ்ச்சியால் பெரிய பிராணியின் வருகையைப் பற்றிய குறிப்பு ஒன்றை அறிந்தோம். ஓர் ஆக்டோபஸ் குட்டியே கட்டு மரத்தின் மீது ஏறி வரக் கூடு-மானால், அதை விடப் பெரியவை இன்னும் எளிதில் ஏறி வரலாமன்றோ ?

---

1 இதுவும் முன்கூறிய ஆக்டோபஸைக் குறிக்கும்.

ஒரு நாள் காலை எங்கள் குடிசையின் மேல் சிறிய ஸ்க்விட் ஒன்று தனியே கிடந்ததைக் கண்டோம். இது எங்களுக்குப் புதிராக இருந்தது. கூரையின்மீது அது ஏறியிருக்க முடியாது. கடற் பறவை ஏதாவது அதைக் கொணர்ந்து அங்கே போட்டிருக்கலாம் என்று எண்ண இடமில்லை. ஏனெனில், அலகால் கொத்தப்பட்டதற்கு யாதொரு அறிகுறியும் அதன் உடம்பில் இல்லை. உயர எழுந்த கடலலைதான் அதைக் கூரையின்மீது கொண்டு வந்து சேர்த்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தோம். ஆனால், இரவில் சுக்கான் பிடித்த ஒருவருக்குமே அத்தகைய கடலலை வந்ததாக ஞாபகமில்லை. இந் நிகழ்ச்சிக்குப் பின் பல இரவுகள் கடந்தன. பல சிறிய ஸ்க்விட்டுகள் கட்டுமரத் தளத்தில் வந்து விழுவது வழக்கம் ஆயிற்று. இரவு முழுவதும் கடல் அமைதியாய் இருந்த போதும்கூட, மறுநாள் காலையில் எழுந்து பார்த்தால் தளத்தின்மீது பறக்கும் மீன்களும் ஓரிரண்டு ஸ்க்விட்டுகளும் காணப்படும். அவை சரியான பேய்க் குழந்தைகள். உறிஞ்சு வட்டங்கள் கொண்ட எட்டு நீண்ட கைகளும், நுனியில் முள் போன்ற கொக்கி அமைந்த மிகவும் நீண்ட இரண்டு கைகளும் கொண்டவை. ஆயினும், பெரிய ஸ்க்விட்டுகள் கட்டுமரத்தின்மீது வர முயற்சி செய்யவே இல்லை. இருள் சூழ்ந்திருந்த போது, அவ்விருளுக்கு நடுவே ஒளி வீசிய கண்கள் கடல் மட்டத்தில் நகர்ந்து செல்வதை நாங்கள் பார்த்தோம். சில சமயங்களில் கடல் நுரைத்துக் குமுறும். கூர்ந்து கவனித்தால், பெரிய சக்கரத்தைப் போன்று ஒரு ஸ்க்விட் மேல் எழும்பிக் காற்றில் சுழன்றுக் கொண்டிருக்கும். டால்பின்கள் உயிருக்குப் பயந்து, முழு வேகத்துடன் நீருக்குமேல் எழும்பிப் பாய்ந்தோடும்.

பெரிய வகைகள் ஏன் கட்டு மரத்தில் ஏறி வரவில்லை என்பது இரண்டு மாதங்கள் வரை எங்களுக்குப் பெரியதொரு புதிராகவே இருந்தது. அவ்விரு மாதங்களில் நாங்கள் பெற்ற அனுபவம் பலதிறப்பட்டது. ஆக்டோபஸ் நிறைந்த கடற் பகுதியைக் கடந்த பின்னரே, அப் புதிருக்கு விடை எங்களுக்குத் தெரிந்தது. ஒரு நாள் காலை நேரம், சூரியன் மேலெழுந்து வந்து விட்டான். எங்கும் நல்ல வெளிச்சம். அப்போது பெரிய மழைத் துளிகளைப் போல்

மின்னிய பிராணிகள் சில நீருக்கு வெளியே வந்து, காற்றில் பாய்ந்ததைக் கண்டோம. இக் கூட்டத்தை டால்பின்கள் துரத்திச் சென்றன. சூழ் புறக்கடல் அலேத்துப் பொங்கியது. துரத்தப்பட்டது பறக்கும் மீன்களின் கூட்டம் என்று முதலில் நினைத்தோம். அவற்றில் சில கட்டுமரத்திற்குமேல், நான்கு அல்லது ஐந்து அடி உயரத்தில் பாய்ந்து சென்றன. ஒன்று பெங்டின் மார்பில் மோதித் தளத்தின்மீது விழுந்தது. அது ஒரு சிறிய ஸ்க்விட். நாங்கள் மிகுந்த வியப்படைந்தோம். சாதாரணமாக, ஸ்க்விட் ராக்கெட் விமானத்தைப் போலத்தான் நீந்துகிறது. அதன் உடலின் இரு பக்கங்களிலும் மூடிய குழாய்கள் அமைந்துள்ளன. அவற்றின் வழியாக அது வேகமாகக் கடல் நீரை வெளியே தள்ளுகிறது. இதனல், கடு விசையுடன் திடீரென்று பின்னேக்கிப் பாய முடிகிறது. தன் கைகளே உடலின் பின் நீட்டித் தொங்கவிட்டுக் கொண்டு, மீனைப்போலவே, நீந்துவதற்கேற்ற வடிவுக்குத் தன்னை மாற்றிக்கொள்கிறது. இருபுறங்களிலும் அதற்கு இரண்டு வட்டமான மடிப்புத் தசைகள் உள்ளன. அவற்றைக் கொண்டு தன் போக்கில் திசை திரும்பவும், நீரில் சாதாரணமாக நீந்தவும் அதனல் முடியும். ஆகவே, போரிட்டுத் தன்னைக் காத்துக் கொள்ள முடியாத சிறிய ஸ்க்விட் எதிர்க்க வரும் பெரிய மீன்களிடமிருந்து தப்புவதற்காகப் பறக்கும் மீன்களைப் போலவே காற்றில் பாய்கிறது. மனிதனுடைய மேதை ராக்கெட் தத்துவத்தைக் கண்டு பிடிப்பதற்குப் பற்பல ஆண்டுகள் முன்னரே அதை உண்மையாக்கி விட்டன இச் சிறு ஸ்க்விட்டுகள். கடல் நீரைக் குழல் வழியே பீச்சுவதால் மெல்ல மெல்ல வேகத்தை அதிகரித்துக் கொண்டு, சிறகுகளைப் போன்ற தோல் மடிப்புக்களை விரித்துச் சாய்வாகக் கடல் மட்டத்திலிருந்து இவை பாய்கின்றன. சிறகு மீன்களைப் போலவே இவை வேகம் குன்றும்வரை அலேகளின் மேல் பறந்து பின்னர்க் கீழே விழுகின்றன.

இந் நிகழ்ச்சிக்குப் பின்னர் நாங்கள் அவற்றையே கவனித்துச் கொண்டிருந்தோம். சில சமயங்களில் தனித்தும், சில சமயங்களில் இரண்டு மூன்ருகச் சேர்ந்தும் அவை பாய்வதைக் கண்டோம். ஒரே எடுப்பில் அவை ஐம்பது முதல் அறுபது கெஜ தூரம் வரை பாய்ந்தன. இம்

மாதிரி அவை பாய்ந்து செல்ல முடியும் என்பது உயிர்நூல் வல்லுநர்களுக்கும் ஒரு புதுமையாகத்தான் இருந்தது.

பசிபிக் தீவுகளுக்கு நான் ஒரு விருந்தாளி. ஆகையால், நான் பல தடவை ஸ்க்விட்டைச் சாப்பிட்டிருக்கிறேன். அதன் சுவை எங்களுக்குப் புதிதாய் இருந்தது; ஆகவே, பிடிக்கவில்லை. எங்கள் உணவுத் திட்டத்தில் அதற்குக் கடைசி இடம்தான் தரப்பட்டது. தளத்தின்மீது ஸ்க்விட் தானுகவே வந்து விழுந்திருந்தால், அதை உபயோகித்து வேருெரு நல்ல ஆகாரத்தைச் சம்பாதித்துக் கொள்வோம். ஒரு கொக்கியில் ஸ்க்விட்டை மாட்டிக் கடலில் எறிந்து விட்டால் போதும். திரும்பி இழுக்கும்போது கொக்கியில் ஒரு பெரிய மீன் துள்ளிக் கொண்டிருக்கும். எங்களுக்கு மிகவும் பிடித்தமான [1] டன்னி, பானிடோ போன்ற மீன் வகைகள் ஸ்க்விட்டுகளை ஆகாரமாகப் பெறப் பெரிதும் விரும்பின. நாங்கள் கடலில் மெல்ல மிதந்து சென்ற-போது, எங்களுக்குத் தெரிந்த பிராணிகளையே திரும்பத் திரும்பப் பார்க்கவில்லை. புதுவகைப் பிராணிகளைப் பார்த்த-தாக எங்கள் குறிப்பேட்டில் பின்வருமாறு குறிப்புக்கள் உள்ளன.

11 - 5 ஒரு பெரிய கடற் பிராணி. இன்று இரு முறை நீர் மட்டத்துக்கு வந்தது. சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, அருகில் எழும்பி வந்து, கடல் நீரை நுரை எழ வாரி இறைத்துப் பின் மறைந்து விட்டது. இது எந்தப் பிராணி என்பது எங்களுக்குத் தெரியவில்லை.

6 - 6 அகன்ற வெண்மையான உடலும், மெல்லிய-வாலும், முட்களும் பொருந்திய மீனை ஹெர்மன் இன்று பார்த்தான்.

16-6 புதுவகை மீன்கள் கட்டுமரத்துக்கு முன்னுல் இடதுபுறத்தில் காணப்பட்டன. நீளம் ஆறு அடி. அகலம் அதிகம். மூக்கு ஓரடி நீண்டு, மெலிந்து, பழுப்பாய் இருந்-தது. தலையின் அருகில் பெரிய முதுகுச் சிறகு. முதுகின் நடுவில் சிறிய சிறகு. கனத்த அரிவாள் போன்ற வால் துடுப்பு. இம் மீன் நீர் மட்டத்தில் இருந்துகொண்டு உடலை

1. Tunny

நெளித்து நீந்தியது. ஹெர்மனும் நானும் கை ஈட்டியுடன் ரப்பர்ப்படகில் சென்றபோது, நீரினுள் ஆழ்ந்தது. சிறிது நேரத்துக்குப் பிறகு மீண்டும் மேலே கிளம்பி மறைந்தது.

அடுத்தநாள் எரிக் பாய்மரத்தின்மீது உட்கார்ந்திருந்-தான். சுமார் 12 மணி இருக்கும். மெலிந்து பழுப்பான மீன்கள் காணப்பட்டன. எண்ணிக்கையில் முப்பது அல்லது நாற்பது இருக்கும். இவை நேற்றைய மீன்களைப் போன்றவை. இடதுபுறமிருந்து வேகமாக வந்து பின்-புறத்தில் மறைந்தன.

18-6 இதைப் பார்த்தது நுட். பாம்பைப் போன்ற பிராணி. நீளம் இரண்டு — மூன்று அடி. உடல் மெலிந்-திருந்தது. நீர்மட்டத்தின்கீழ் செங்குத்தாக நின்றது. மீனைப்போல் வளைந்து வளைந்து சென்று நீருக்குள் மறைந்தது.

நீருக்கு அடியில் அசைவின்றி கிடந்த, பாறைபோன்ற, ஒரு பெரிய கருப்பு வடிவத்தை நாங்கள் பலமுறை பார்த்-தோம். அளவில் மிகப் பெரியது. கடலரக்கன் என்று பெயர் பெற்ற [1]ரே தானே அது! அது அசையவேயில்லை. அதன் வடிவத்தைத் திட்டமாகக் கண்டறிய நாங்களும் அதிகமாக நெருங்கிப் பார்க்கவில்லை.

நீரில் இத்தகைய நண்பர்கள் கிடைத்தபோது எங்க-ளுக்குப் பொழுதுபோக்குவது எளிதாய் இருந்தது. ஒரு நாள் நடுப்பலகை ஒன்று தளர்ந்துபோய் நாங்கள் பிடிப்-பதற்கு முன்பாகவே நழுவி, கீழ்க்கயிறுகளில் சிக்கிக்-கொண்டது. நீரில் நன்கு மூழ்கத் தெரிந்தவர்கள் ஹெர்-மனும் நுட்டும் தான். ஹெர்மன் மூழ்கிக் கட்டுமரத்தின் கீழ்ச் சென்றான். அங்கு டால்பின்களும், வழிகாட்டிகளும் சூழப் பலகையை இழுத்துப் பார்த்தான். இரு முறை மூழ்கியபின் மேலெழுந்து வந்து மூச்சுப் பிடிப்பதற்காக விளிம்பில் சற்று உட்கார்ந்தான். எட்டு அடி நீளமுள்ள சுறுமீன் ஒன்று அவனுடைய கால் விரல்களைப் பற்றிக்-கொள்ள வேகமாக நகர்ந்து வந்தது. எங்கள் மீது பழி வாங்கும் நோக்கத்தோடு அது வருவதுபோலத் தோன்-றிற்று. ஆகவே, அதன் தலையில் ஒரு கை ஈட்டியைச்

1. Ray

செருகினேம். சுரு மிக்க வருத்தம் அடைந்தது. கடல் கலங்கும் வகையில் ஒரு கடும் போர் நடந்தது. முடிவில் சுரு மறைந்து போயிற்று. நீரில் எண்ணெய் போன்ற திரவம் மிதந்தது. வெற்றி எங்களுடையது.

ஒரு மூழ்கும் கூடை செய்யவேண்டும் என்ற ஆசை எரிக்குக்குத் தோன்றியது. எங்களிடம் இதற்கு வேண்டிய பொருள்கள் அதிகமில்லை. ஆயினும், மூங்கில்களும் கயிறுகளும் இருந்தன. தேங்காய்கள் வைத்திருந்த ஒரு பழைய கூடையில் மூங்கில் துண்டுகளைச் சேர்த்துக்கட்டி, உயரமாகச் செய்து கொண்டோம். பிறகு, கூடைக்குள் இருந்தவாறு கடலுக்குள் இறக்கப்பட்டோம். மீன்களைக் கவரும் எங்களுடைய கால்கள் இப்போது கூடைக்குள் மறைந்திருந்தன. கூடைக்கு மேற்புறம் இருந்த கயிற்றுப் பின்னல் எங்களுக்கு தைரியத்தையும் மீன்களுக்குப் பயத்-தையும் தந்தது. எதிரி மனப்பான்மையுடன் ஏதாவதொரு பிராணி எங்கள்மீது பாய்ந்தால் உடனே கூடைக்குள் குனிந்து கொள்ளலாம். அதற்குள் கூடையும் மேலே இழுக்கப்பட்டுவிடும். ஆகவே, எங்களுக்கு ஆபத்து நேரிட இடமில்லை.

இந்த மூழ்கும் கூடை உபயோகத்திற்கேயன்றி உல்-லாசத்திற்கும் பயன்பட்டது. கட்டுமரத்திற்கு அடியி-லிருந்து மிதக்கும் நீர்ப் பிராணிச் சேமிப்பைக் கவனிக்க இது நல்ல வாய்ப்பு அளித்தது. கடல் அமைதியாய் இருந்த-போது கூடைக்குள் ஒவ்வொருவராக நாங்கள் புகுந்து கொண்டு கடலுக்குள் இறங்குவோம். மூச்சிருக்கும்வரை அமிழ்ந்து இருந்து, பின்னர் மேலே வருவோம். நீருக்குள் ஒளியின் போக்கும் வியக்கத்தக்க வகையில் இருந்தது. நிழலே விழாமல் ஒளி பரவியது. ஒரு குறிப்பிட்ட திசையி-லிருந்து வராமல், எல்லாத் திசைகளிலிருந்தும் ஒளி வந்து பரவியதைக் கண்டோம். திசைமாறி ஒடிந்துவந்த ஒளி மேலி-ருந்து வருவது அல்லாமல் கீழிருந்தும் வந்தது. சூரியன் இங்கு பிரகாசிப்பதில்லை. ஆனல், எல்லாத் திசைகளிலும் தெரிந்தது. கட்டுமரத்தின் அடிப்பாகம் மிக்க பிரகாசமாக இருந்தது. ஒன்பது பெரிய மரக்கட்டைகளும், குறுக்கு நெடுக்காகக் கட்டப்பட்டிருந்த கயிறுகளும் ஒரு மாய ஒளியில் தோய்ந்திருந்ததைக் கண்டோம். கட்டுமரத்தின்

ஓரத்தில் கடற் பாசி படர்ந்து, வசந்தப் பசுமை ஒளியை வீசிற்று. துடுப்புக் கட்டை முழுவதுமே ஒரு பச்சைச்சுடர். வழிகாட்டி மீன்கள் அணி வகுத்து நீந்தின. தீனியாசை பிடித்த பெரிய டால்பின்கள் சிறிதும் ஓய்வின்றி நீரைத் துருவி வட்டம் இட்டன. இடுக்குகளில் சிக்கிக் கொண்டிருந்த சிவப்பான மரக்கட்டைகளின்மீது ஒரு வகை மீன்கள் கூட்டங் கூட்டமாகக் காணப்பட்டன. அதன் பெயர் [1] பார்னகிள் என்பது. அவை மூச்சு விடுவதற்காகவும் இரை தேடுவதற்காகவும் தங்களுடைய செவுள்களை ஓயாமல் அசைத்துக் கொண்டிருந்தன. யாராவது அவற்றினருகே சென்றால், உடனே தன் சிவப்பு, மஞ்சள் விளிம்புகள் அமைந்த செவுள்களை மூடிக்கொண்டு தற்காப்புச் செய்து கொள்ளும்.

வெப்ப மிகுந்த நாட்டில் வெய்யிலின் கொடுமையை அனுபவித்துப் பழக்கமுற்றிருந்த எங்களுக்கு நீருக்குள் மூழ்கியிருப்பது அளவற்ற இன்பத்தைக் கொடுத்தது. கடலின் ஆழத்திலும், உட்சென்று மீண்ட சூரிய கிரணங்களால் இன்பமான வெளிர்நீலத் தோற்றம் ஏற்பட்டிருந்தது. நீர்மட்டத்துக்குச் சற்றுக் கீழாக நாங்கள் இருந்தபோதிலும், தெளிந்த நீலத் தூய்மையில் வெகு ஆழத்தில் சென்ற உருவங்களும் நன்றாகத் தெரிந்தன. இது எங்களுக்கு வியப்பைத் தந்தது. அடையாளங் கண்டுகொள்ள முடியாத வெகு ஆழத்திலும் சில உருவங்கள் நீந்துவதைக் கண்டோம். கடல் நீரோட்டம் முழுவதிலும் இவ்வாறு மீன்கள் செழித்துள்ளனவா, அல்லது எங்களுடன் பழகுவதற்காகவே எல்லாப் பகுதிகளிலிருந்தும் மீன்கள் ஓடிவந்து கூடியிருக்கின்றனவா என்ற ஐயம் எங்களுக்குப் பிறந்தது.

தங்கச் சிறகுகள் அமைந்த டன்னி மீன்கள் கட்டுமரத்துக்கு வந்தபோது, கடலில் ஆழ்ந்து பார்க்கவேண்டும் என்ற விருப்பம் உச்சநிலை அடைந்தது. அவை கூட்டமாக வருவதெல்லாம் அருமை. சாதாரணமாக இரண்டு மூன்றாகத்தான் வரும். எங்களைச் சுற்றி நாட்கணக்கில் வட்டமிடும். கட்டு மரத்திலிருந்து பார்க்கும்போது அவை

1. Barnacle

கனத்த, பெரிய, பழுப்புநிற மீன்களைப்போல் தோன்றின. ஆனால், நீருக்குள் இருக்கும்போது அவற்றின் உருவமும் வண்ணமும் மாறியிருந்தன. வியக்கத்தக்க எழில் உருவம் பெற்று விடுகிறது இப்பிராணி. இம்மாதிரி வேறெந்த மீனையும் நாங்கள் பார்த்ததில்லை. நீரில் இருக்கும்போது அதன் வண்ணம் வெள்ளை ஊதா. வெள்ளியும் எஃகும் சேர்த்து செய்யப்பட்ட நீர்மூழ்கிக் கப்பல்களைப்போல், நீரில் நீந்துவதற்கென, அமைந்திருந்தது அதன் உடலுருவம். அதன் எடை சுமார் 150 பவுண்டு இருக்கும். ஆயினும், தன் உடலை நகர்த்த, தன் சிறகுகளை அது சிறிதளவு அசைத்தாலே போதும். நீரில் அது நழுவிக்கொண்டு செல்வது கண்கொள்ளாக் காட்சி.

நாட்கள் செல்லச் செல்ல, நாங்கள் கடலுடன் தோழமை பூண்டோம். ஆகவே, புது இடத்துக்கு வந்துள்ளோம் என்ற உணர்ச்சி சிறிது சிறிதாக மாறி, வீட்டில் உற்றார் உறவினர் இடையே இருப்பது போன்ற ஓருணர்ச்சி ஏற்பட்டது. மேலும், இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்திய பழங்குடிகளிடம் எங்களுக்குப் பெருமதிப்பு ஏற்பட்டது. கடலுடன் நெருங்கிப் பழகியதால் நாம் இப்போது என்ன கண்டோம்? கடல் நீரில் உள்ள உப்பின் அளவைக் கண்டறிந்துவிட்டோம். டன்னி, டால்பின் முதலிய மீன்களுக்கெல்லாம் இலத்தீன் மொழியில் பெயர்கள் இட்டோம். இவற்றையெல்லாம் பண்டைய மக்கள் செய்யவில்லை. ஆனால், கடலை உள்ளபடி அறிந்துகொண்டு, அதனுடன் நெருங்கிய உறவுகொண்டு, அவ்வுறவால் இன்பம் எய்தினார்கள். நம்மால் அவ்வாறு செய்யமுடியவில்லை என்பதுதான் என் கருத்து.

நாற்புறமும் கடல் சூழ இருந்ததால், நாங்கள் இருந்த இடத்தைச் சரியாகக் கண்டுகொள்ள நிலைத்த அடையாளம் ஏதும் கிடைக்கவில்லை. கடலலைகளும், மீன்களும், சூரியனும், விண்மீன்களும் தோன்றின, மறைந்தன. ஆனால், பெருவிலிருந்து தென் கடற்தீவுகள் வரை யாதொரு நிலப்பரப்பும் காணப்படவில்லை. ஆனால் மேற்கே 100°க்கு வந்ததும் நாங்கள் சென்ற வழியில் ஒரு பாறை இருப்பதாக எங்கள் வரைப்படம் தெரிவித்தது. சிறிய வட்டமாக அது குறிக்கப்பட்டிருந்தது. ‘தென் அமெரிக்காவுக்குச் செல்லும்

கடற்பயணத்திற்கான குறிப்புக்கள்' என்ற தலைப்பிட்ட புத்தகம் ஒன்று எங்களிடம் இருந்தது. அதைப் புரட்டிப் பார்த்தோம். அந்நூலில் நாங்கள் கண்டது பின்வருமாறு:—

1906-ஆம் ஆண்டிலும் 1926-ஆம் ஆண்டிலும் கலபாகோஸ் தீவுகளுக்குத் தென்மேற்கே ஓரிடத்தில் அலைகள் நிலத்தில் மோதி உடைந்த ஒலி கேட்கப்பட்டது. 1927-இல் ஒரு நீராவிக் கப்பல் அந்த இடத்துக்கு ஒரு மைல் மேற்கே சென்றபோது, அலைகள் உடைந்த அடையாளம் ஒன்றும் தென்படவில்லை. 1934-இல் மற்றொரு கப்பல் அவ்விடத்துக்கு ஒரு மைல் தெற்கே சென்றபோதும் அடையாளம் ஏதும் தெரியவில்லை. 1935-ல் 'கௌரி' என்ற மோட்டார்க் கப்பல் அவ்விடத்தில் 960 அடி ஆழம் வரைத் தேடிப் பார்த்தது. ஆனல், நிலப்பகுதி ஒன்றும் தட்டுப்படவில்லை.

வரைப்படங்களைக் கொண்டு பார்த்தால், அவ்விடம் கப்பல் செலுத்துவதற்குத் தகுந்ததல்ல. பேராபத்து விளையக்கூடும். ஆயினும், நேரே அங்குச் சென்று கண்ணிற்படுவதைக் குறித்துக் கொள்ளத் தீர்மானித்தோம். நாங்கள் சென்ற கோட்டுக்குச் சிறிது வடக்கில் அந்தப் பாறை இருந்ததாகக் குறிக்கப்பட்டிருந்தது. ஆகவே, துடுப்புக் கட்டையை கட்டுமரத்தின் வலது புறத்துக்குத் தள்ளினேம், சதுரப் பாய்த்துணியைச் சிறிது மாற்றிக்கட்டினேம். கட்டு மரத்தின் முன்புறம் வடதிசையை நோக்கி இருக்குமாறு செய்துகொண்டோம். அலைகளும் காற்றும் வலதுபுறமிருந்து கட்டுமரத்தைத் தள்ளின. கடல் நீர் முன்னைவிட அதிகமாக எங்களுடைய தூங்கும் பைகளில் வாரி இறைக்கப்பட்டது. செல்லச் செல்ல காலநிலை மாறிற்று. ஆயினும், காற்றின் உதவி இருந்தபோதெல்லாம் கோன்டிகியை வேண்டியவாறெல்லாம் செலுத்தினேம். மற்றப் பொழுதில் பாய்த்துணி எதிர்த்திசையில் வளைந்து கொள்ளும். கட்டு மரத்தை மீண்டும் அடக்கிச் செலுத்துவது இயலாத காரியமாகவே தோன்றும். இரண்டு நாட்கள் தொடர்ந்தாற்போல் கட்டுமரம் வடக்குக்கும் வடமேற்குக்கும் இடைப்பட்ட திசையில் நகர்ந்தது. அலைகள் மிக உயரமாக எழுந்தன. வியாபாரக் காற்று தெற்கிலிருந்தும் தென் கிழக்கிலிருந்தும் மாறி மாறி அடித்தது. எங்களை நோக்கி வந்த அலைகள் கட்டு மரத்தை உயரத்தூக்குவதும், கீழே இறக்குவதுமாய் இருந்-

தன. இவ்வாறு நாங்கள் அலைகளின் மீது ஏறி இறங்கிக் கொண்டிருந்தபோது அடிவானம் விரிந்தது. குடிசைக்கும்மேல் எழுந்தன அலைகள். இரண்டு பேரலைகள் சேர்ந்து கொண்டபோது, உயரம் இன்னும் அதிகமாகி, சீறிக் கொண்டு, ஒரு நீர்க்கோபுரம்போல் உடைந்து விழுந்தது. இரவில் வாயிற்புறத்தைச் சாமான் பெட்டிகளை வைத்து அடைத்தும் கூட, குடிசைக்குள் ஈரமாய்த்தான் இருக்கும். சற்றுத் தூங்குவதற்குள் மூங்கிற் சுவற்றின் மேல் அலைமோதும் பேரொலி கேட்கும். மூங்கிற் பின்னல் இடுக்குகளின் வழியே ஊற்றுக்களைப்போல் நீர் உள்ளே வந்து கொட்டும். நுரைத்த நீர்த்தொகுதி, சாமான் பெட்டிகளையும் மீறி வந்து எங்களை அடையும்.

ஒரு நாள் ஹெர்மன் சுக்கான் பிடித்திருந்தபோது ஒரு பெரிய டால்பின் கட்டுமரத்தின்மேல் ஏறி வந்துவிட்டது. அடுத்த நாள் கடலில் அவ்வளவு குழப்பம் இல்லை. வியாபாரக் காற்றும் கிழக்குத் திசையிலிருந்தே சிறிது காலத்துக்கு அடிப்பது என்று தீர்மானித்தது போலும்! அடிக்கடிப் பாய்க்கம்பத்தின்மீது ஏறிக் கவனித்துக் கொண்டிருந்தோம். அன்று மாலையே நாங்கள் செல்ல விரும்பிய இடத்துக்குப் போய்விடுவோம் என்று எதிர்பார்த்தோம். அன்று கடலில் வழக்கத்தைவிட அதிகமாக உயிரினங்கள் இருப்பதாகத் தோன்றியது. ஒரு வேளை இது நாங்கள் அதிகமாய்க் கவனித்துப் பார்த்ததன் விளைவாய் இருக்கலாம். மாலையில் நீர் மட்டத்துக்கு அருகில் ஒரு பெரிய வாள் மீன் கட்டுமரத்தை நோக்கி வரக்கண்டோம். நீருக்கு மேல் இரு கூரிய முனைகள் தெரிந்தன. அவை சிறகுகளின் மேற்பாகங்கள். அச்சிறகுகள் ஒன்றுக்கொன்று ஆறு அடி தூரத்தில் இருந்தன. அம் மீனின் வாளும் அதன் உடலளவு நீளமாயிருந்தது. சுக்கான் பிடித்த மனிதனின் அருகில் ஒரு வளைவான பாதையில் நீந்திச் சென்று, அலை மூட்டத்திற்குப் பின்புறமாக அது மறைந்தது. அன்று எங்கள் உணவு ஈரமாகவும் உப்புக் கலந்ததாகவும் இருந்தது. நாங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது ஒரு பெரிய கடலாமையைக் கண்டோம். ஓடும், தலையும், பரப்பிய முன்கால்களும் சீறி எழுந்த அலையினல் தூக்கப்பட்டு, எங்கள் முகமட்டத்தில் தெரிந்தன. ஆனல் கண நேரத்தில் அவ்வாமை மறைந்து போயிற்று.

இப்பகுதியிலும் டால்பின்கள், பறக்கும் மீன்கள் ஆகியவை செழித்திருந்தன. ஆனால், பறக்கும் மீன்கள் ஓர் அங்குல நீளமே இருந்தன. அடிக்கடி அவை கட்டு மரத்தின்மீது வந்து விழுந்தன. இவை தவிர [1]ப்ரிகேட் போன்ற சில வகைப் பறவைகளும் தென்பட்டன. தரைப் பகுதி அருகில் இருக்கிறது என்பதற்கு ப்ரிகேட் பறவையை ஓர் அடையாளமாகக் கொள்வது வழக்கம். ஆகவே, அதைக் கண்டவுடன் நிலப் பகுதியை விரைவில் அடைய முடியும் என்ற நம்பிக்கை எங்களுக்கு ஏற்பட்டது. நம்பிக்கையுடன் கற்பனையும் நிரம்பப் பெற்ற சிலர் "ஒரு வேளை பசுமை பூத்த தீவைச் சென்று அடைவோம் போலிருக்கிறது. யாருக்குத் தெரியும்? அங்ஙனம் ஒரு புதிய நிலப் பரப்பை அடைவோமானால் நாமும் ஒரு புதுத் தீவைக் கண்டு பிடித்தவர்கள் ஆவோம். அத்தீவும் கோன்டிகி தீவாகும்," என்று கூறத்தொடங்கினர். நடுப்பகலிலிருந்து எரிக் கடுமையாக வேலை செய்தான். அடிக்கடி சமையற் பெட்டியின்மீது ஏறி, கோணமளக்கும் கருவிகளைக் கொண்டு சூரியனைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். மாலை 6-20 மணிக்கு நாங்கள் இருந்த இடம் எது என்பதை எரிக் தெரிவித்தான். வரைப்படத்தில் குறிக்கப்பட்டிருந்த பாறைக்குக் கிழக்கில் சரியாக ஒரு மைல் தூரத்தில் நாங்கள் இருந்தோம். இதை அறிந்ததும், மூங்கிற் கம்பை இறக்கினோம், பாய்த்துணியைச் சுருட்டினோம். காற்று சரியாகக் கிழக்குத் திசையிலிருந்து அடித்தது. மெல்ல, குறித்த இடத்துக்கே தவறாமல் போய்ச்சேர முயற்சி செய்தோம்.

சூரியன் மறைந்தான். முழு நிலா வானில் தோன்றிற்று. கடலின் மேற்பரப்பு, மேடும் பள்ளமுமாய்த் தொடுவானங்களிடையே நிலவின் ஒளியில் கருமையும், வெண்மையுமாய் ஜொலித்தது. பாய்க் கம்பிலிருந்து வெகுதூரம் வரைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. அலைகள் வரிசையாக எழுந்து விழுந்தன. பாறையோ, நிலப்பரப்போ கடலுள் ஆழ்ந்திருந்ததாகத் தெரியவில்லை. மூங்கிற் குடிசைக்குள் செல்ல ஒருவருக்கும் மனமில்லை. கண் கொட்டாமல்

1. Frigate

பார்த்துக் கொண்டிருந்தோம். அடிக்கடி பாய்க் கம்பில் ஏறினேம். குறித்த இடத்தை அடைந்தோம். கட்டுமரத்தில் இருந்த பளுக்கள் அனைத்தையும் கடலில் இறக்கினேம். அவை நேரே 2,400 அடிக்குமேல் ஆழச் சென்றன. கிழக்கிலோ, மையத்திலோ, மேற்கிலோ தரை தட்டுப்படவே இல்லை. முடிவாக ஒரு முறை கடல் மட்டத்தைக் கவனித்துப் பார்த்தோம். அந்தக் கடற்பகுதியை அலசிப் பார்த்து விட்டதாகத் திருப்தி அடைந்தோம். பிறகு, பாய்த்துணியை மறுபடியும் எடுத்துக்கட்டினேம். ஆழம் குறைந்த இடமே அப்பகுதியில் இல்லை. ஆகவே, எங்கள் பயணத்தை மீண்டும் தொடங்கினேம்.

வியாபாரக்காற்று கிழக்கிலிருந்தும், தென்கிழக்கிலிருந்தும் அடிக்கடி மாறி அடித்தது. கடல் பல நாட்களுக்கு விடாமல் குமுறிக் கொந்தளித்தது. ஆயினும், எங்களால் ஈரமாகாத உணவை உண்ணவும், உலர்ந்த இடத்தில் படுத்துத் தூங்கவும் முடிந்தது. கட்டுமரத்தில் உபயோகிக்கப்பட்டிருந்த நடுப் பலகைகளின் சிறப்பை இப்போது நன்ருக அறிய முடிந்தது. அமெரிக்க இந்தியரால் கைவிடப்பட்டு, யாவராலும் மறந்து விடப்பட்ட இக்கட்டு மரப்பயண விளையாட்டில் நடுப்பலகையின் சிறந்த பங்கு யாது என்பதை இப்போது எவரும் அறிந்திலர். நடுத்தண்டைப் போன்ற இந்தப்பலகை, காற்றடித்த திசைக்கு விலகிய திசையில் படகு செல்ல உதவி புரிந்தது. இந்தியர், தங்களுடைய பால்ஸா கட்டுமரங்களின் அடியில் நடுப்பலகைகளைப் பொருத்திவிட்டு, அடிமரங்களின் இடையே இந்நடுப்பலகைகளை மேலும் கீழும் நகர்த்தி, கட்டுமரத்தைத் திசைமாற்றிச் செலுத்தினராம். இது பற்றிப் பழைய ஸ்பானியர்கள் எங்களிடம் கூறியிருந்தார்கள். ஆனல், எங்களுக்கு இச்செய்தி சரியாகப் புரியவில்லை. ஏனெனில், நடுப்பலகை ஒரு குறுகிய இடைவெளியில் அழுந்தியிருக்கும்; ஆகவே, அதைப் பக்கவாட்டில் திருப்பி, சுக்கான் போல் உபயோகிக்க முடியாது என்று நினைத்தோம். இந்தியர் கையாண்ட முறையின் உண்மையை அறிந்து கொள்ள எங்களுக்கு ஒரு வாய்ப்பு கிடைத்தது.

ஒரு சமயம் கடல் அமைதியாய் இருந்தது. காற்று ஒரே சீராய் அடித்துக்கொண்டிருந்தது. சுக்கானை நாங்கள்

தொடாமலே கோன்டிகி கம்பீரமாக முன்னேறிக் கொண்டிருந்தது. சரிசெய்யப்பட்ட நடுப்பலகையைப் பின்புறத்தில் ஓர் இடுக்கின் வழியே கீழே தள்ளிப் பார்த்தோம். ஒரு நொடியில் கோன்டிகி தன் திசையை மாற்றிக் கொண்டு, மேற்கே செல்வதற்குப் பதிலாகச் சிறிது வடமேற்காகச் செல்லத் தொடங்கியது. சிறிது தூரம் சென்றதும், கீழே அழுத்தப் பட்ட நடுப்பலகையை எடுத்துவிட்டோம். கட்டுமரம் மீண்டும் தன் திசையை மாற்றிக் கொண்டு, முதலில் சென்று கொண்டிருந்த திசையில் நகரத் தொடங்கியது. முழுவதும் இழுத்து விடாமல் பாதியளவே பலகையை உயரத் தூக்கினேம். கட்டுமரமும் பாதியளவே திரும்பியது. இவ்வாருக நடுப்பலகையைத் தூக்கியும், இறக்கியும் சுக்கானின் உதவியின்றியே திசைமாற்றம் செய்ய முடிந்தது. இதுதான் இங்காக்கள் கையாண்ட முறை. இம்முறையைக் கையாளும்போது, காற்று பாய்த்துணியின் மீது அழுத்துவதால், பாய்மரக்கம்பம் அசையாத நடுக்கோடு ஆகிறது. கட்டுமரத்தின் முன்புறமும் பின்புறமும் அசைக்கக்கூடிய இரண்டு கைகள் போல் ஆகின்றன. பின்புறம் உள்ள மொத்தப்பலகையின் பரப்பு அதிகமாய் இருந்தால், முன்புறம் காற்றுக்கு இசைவாகச் சுழன்று திரும்புகிறது. முன்புறம் இருக்கும் பலகையின் பரப்பு அதிகமானல், பின்புறம் காற்றுக்கு இசைவாகத் திரும்புகிறது. பாய்த்தூணுக்கு மிக அருகில் உள்ள பலகைகளால் திசைமாற்றுவதில் அதிகப்பயன் பெறமுடியாது. சரியாகப் பின்புறமிருந்து காற்று அடிக்கும்போது, நடுப்பலகைகள் பயனற்றுப்போகின்றன. அப்போது சுக்கான் பலகையைத் திருப்புவதைத் தவிர வேறு வழியில்லே. இங்நிலேயில் அலேகளின் மீதுத் தடையின்றிச் சவாரிசெய்வதற்குக் கட்டுமரத்தின் நீளம் சற்று அளவுக்குமீறியே இருந்தது. குடிசையின் வாயிலும், நாங்கள் உணவருந்தும் இடமும் கட்டுமரத்தின் வலப்புறம் இருந்தன. ஆகவே இடதுபுறமிருந்து அலேகள் வந்து மோதும் வகையில் கட்டுமரத்தைச் செலுத்தினேம். துடுப்புப்பிடித்தே பழக்கமாய் விட்டதால், நடுப்பலகைகளேப் பொதுவான போக்கிற்கு ஏற்ப அமைத்துக்கொண்டு, சுக்கானேத் தள்ளியே கட்டு மரத்தைச் செலுத்தினேம். வரைப்படத்தில் குறிக்கப் பட்டு எங்கள் கண்ணுக்குத் தெரியாமற்போன பாறையைப் போலவே, எங்கள் பயணத்-

தின் அடுத்த கட்டமும் இன்னதென்று அறியக்கூடாததாக இருந்தது. நாங்கள் கரையை விட்டு 45 நாட்களாய் விட்டன. தீர்க்கரேகை 78° இலிருந்து 108° வரை முன்னேறி-யிருந்தோம். போய்ச் சேரக்கூடிய முதல் தீவுக்கு இன்னும் பாதி தூரம் மீதி இருந்தது. கிழக்கில் தென் அமெரிக்கா-வுக்கும் எங்களுக்கும் 2,000 கடல்மைல்களுக்கு மேற்பட்ட தூரம் இருந்தது. மேற்கில் பாலினீசியாவுக்கும் அதே தூரம். மிக அருகில் இருந்தவை கலபாகோஸ் தீவுகளும், ஈஸ்டர் தீவுமேயாம். கிழக்குக்கும், வடகிழக்குக்கும் இடைப் பட்டகோணத்தில் 500 கடல்மைல்களுக்கு மேற்பட்ட தூரத்-தில் கலபாகோஸ் தீவுகள் இருந்தன. சரியாகத் தெற்கில் அதே தொலேவில் ஈஸ்டர் தீவு கிடந்தது. எல்லேயற்ற கடலில் ஒரு கப்பலேயும் காணமுடியாத நிலேயில் நாங்கள் இருந்தோம். ஏனெனில், கப்பல் போக்குவரத்துப் பாதை-கள் யாவும் எங்களுக்கு வெகுதொலேவில் இருந்தன. ஆனல், இவ்வளவு அதிகமான இடைத் தூரங்களேப் பற்றி நாங்கள் கவலேயுறவில்லே. ஏனெனில், நாங்கள் மெல்ல நகர்ந்த-போது தொடுவானமும் மெல்ல மெல்ல அப்பாற் சென்று கொண்டே இருந்தது. எங்களுடைய மிதக்கும் உலகம் என்றும் இதேபோல் நிலேபெற்றிருக்கும் என்றுதோன்றிற்று. ஆகாயம் ஒரு விதானம் போன்றும், கடற்பரப்பு அவ்வி-தானத்தை நோக்கிக் கொண்டிருந்த ஒரு வட்டமாகவும்; எங்கள் கட்டுமரம் அவ்வட்டத்தின் நடுமையமாகவும் தோற்றம் அளித்தன. ஒவ்வோர் இரவும் அதே விண்-மீன்கள் எங்களுக்கு மேல் ஓடி மறைந்தன.

---

# பசிபிக் கடலில் பயணம் II

கடலில் அதிக அலைப்பு இல்லாதபோது நாங்கள் அடிக்கடி ரப்பர்ப் படகில் ஏறித் தொலைவிற் சென்று புகைப்படங்கள் எடுத்தோம். முதன் முதலில் இவ்வாறு சென்றபோது நிகழ்ந்ததை என்னால் மறக்க முடியவில்லை. கடல் மிகவும் அமைதியாய் இருந்தது. ஆகவே, சிறிய ரப்பர்ப் படகைக் கடலில் இறக்கிச் சிறிது தூரம் தள்ளிக் கொண்டு செல்லவேண்டும் என்ற ஆசை எங்களில் இருவருக்கு ஏற்பட்டது. அவ்வாறே கட்டு மரத்திலிருந்து சென்றனர். சிறிது தூரம் செல்வதற்குள் அவர்கள் திரும்பிப் பார்த்து விட்டு, கைகளில் இருந்த சிறிய துடுப்புக்களை விட்டு விட்டு, விழுந்து விழுந்து சிரித்தனர். படகு அலைகளால் தூக்கப்பட்டு மேலெழுந்தது. அடுத்த கணமே கீழ் இறங்கியது. மறுபடியும் அவர்கள் எங்களைப் பார்த்துச் சிரித்தனர். அவர்களுடைய சிரிப்பால் எழுந்த பேரொலி, மனிதர்கள் இல்லாத பசிபிக் கடலில் வெகு தூரம் சென்று பரவியது. சிரிப்புக்குக் காரணம் தெரியாததால், நாங்கள் எங்களைச் சுற்றிக் கவனித்துப் பார்த்தோம். ஒழுங்கற்ற தாடி வளர்ந்த முகங்களைத் தவிர, சிரிப்புக்கிடமான ஒன்றும் எங்களிடம் இருந்ததாகத் தெரியவில்லை. எங்களுடனே நெடு நாட்களாகப் பழகி வந்ததால், எங்கள் முகத்தைக் கண்டு அவர்கள் சிரித்திருக்க முடியாது. ஆகவே, திடீரென்று அவர்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ என்று எங்களுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. சூரிய வெப்பத்தின் மிகுதி அதற்குக் காரணமாய் இருக்கலாம் என்றும் ஊகித்தோம். சிறிது நேரத்தில் அவர்கள் திரும்பி வந்து, வயிறு புண்ணாகச் சிரித்துக்கொண்டு, கோன்டிகியின் மீது தள்ளாடிக்கொண்டு ஏறினார்கள். கண்களில் நீர்த்தளும்ப "நீங்களே ரப்பர்ப் படகில்போய்ப் பாருங்கள்," என்றனர். அவர்கள் சொல்லிய படியே வேறு இருவர் படகில் ஏறிக் கொண்டோம். மேலெழும்பி வந்த ஓரலை படகைத் தூக்கிக் கொண்டு அப்பாற்

சென்றது. உடனே அடக்க முடியாத சிரிப்பினுல் நிற்க முடியாமல் நாங்கள் தடாலென்று உட்கார்ந்து கொண்டோம். தாங்க முடியாமல் சிரித்துக் கொண்டே வேகமாக கட்டுமரத்தின் அருகில் சென்ருேம். கடைசி இருவரும் இன்னும் ரப்பர்ப் படகில் ஏறிப் பார்க்கவில்லை. ஆதலால், எங்கள் நால்வரையும் கலப்பற்ற பைத்தியங்களாகவே அவர்கள் நினைத்தார்கள். தொலைவிலிருந்து நாங்கள் பார்த்தபோது கட்டுமரமும், அதிலிருந்தோரும் பைத்தியக்காரத் தோற்றம் அளித்தனர். நடுக்கடலில் இம் மாதிரி வெளியிலிருந்து எங்களை நாங்களே இதற்கு முன் பார்த்ததில்லை அல்லவா ? மிகச் சிறிய அலைகள் வந்தபோது கூட, கட்டுமரத்தின் அடிக் கட்டைகள் நீரில் மறைந்தன. எங்கள் கண்ணில் பட்டதெல்லாம் அகன்ற வாயிற் புறமும், கற்றையாக இலைகள் வைத்துக் கட்டிய கூரையும், வாய்ந்த சிறிய குடிசை ஒன்றே. அக் குடிசை கடலலைகளில் மேலும் கீழுமாக ஆடிக் குலுங்கியதைத் தான் கண்டோம். ஒரு பழைய நார்வீஜிய வைக்கோற் பரண் கதியற்று நடுக்கடலில் மிதந்து கொண்டிருப்பது போலத்தான் தோன்றிற்று கட்டுமரம். அதிலிருந்தோர் வெய்யிலில் கருத்துப்போன, தாடி வளர்ந்த காட்டு மனிதர்களைப்போல் காட்சி அளித்தார்கள். ஒரு சாதாரண அலை குடிசைச் சுவரின் பாதி உயரம் எழும்பியது ; அகலத் திறந்து கிடந்த குடிசை வாயிலின் வழியே தடையற்றுப் புகுந்து விடும் என்று தோன்றிற்று. குடிசை வாயிலில் த்டிப் பயல்கள் வாயைப் பிளந்து கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். ஆனுல், பித்துப் பிடித்த அந்தக் கட்டுமரம் அலைமட்டத்துக்கு எழும்பிய படியால், அந்த தாடிக்கார நாடோடிகள் ஒரு கவலையு மில்லாமல், நனையாமல், நீருக்குள் அமிழ்ந்து போகாமல் இருந்தார்கள். பேரலை எழும்போது, மூங்கிற் குடிசை, பாய்த்துணி, முழுப்பாய்த்தூண் ஆகிய யாவும் நீர்க்குன்றின் பின்னுல் மறைந்து போகும். ஆனுல், மறுகணமே குடிசையும் நாடோடிகளும் அங்குத் தோன்றிடுவார்கள். இவ்வாருக எங்கள் கட்டு மரமும் அதிலிருந்தோரும் காட்சி அளித்தமையால், எட்ட நின்று பார்த்த எங்களுக்கு அடக்க முடியாத சிரிப்பு எழுந்தது.

மறுமுறையும் ரப்பர்ப் படகில் சென்ருேம். ஆனுல், நிலைமை படுமோசமாகி, மயிரிழையில் தப்பினேம். நாங்கள் எதிர்பார்த்ததைவிட காற்றின் வேகமும் அலைகளின்

கோன்டிகி சென்ற பாதை

கோன்டிகியின் மாதிரியுருவம்



கலாவோ துறைமுகத்தில் புறப்படத் தயாராய் இருக்கிறது. பண்டை இந்தியப் படகுகளைப் போன்றே அமைக்கப்பட்ட இரு பாய்மரத் தூண்கள். அவற்றின் இடையே சதுர வடிவமான ஒரு பாய். அதன் அருகே கூரையில் லாத மூங்கிற் குடிசை.



பரந்த கடலில் விரிந்த பாயுடன் நகர்ந்து செல்கிறது. கட்டுமரப் பயணத்தில் பயிற்சி அளிக்கக்கூடியவர்கள் பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே மறைந்தனர். ஆகவே, ஹம்போல்ட் நீரோட்டத்தில் கட்டுமரத்தைச் செலுத்த நாங்களே கற்றுக்கொண்டோம்.



கொண்டு வந்திருந்த பழங்கள் தீரு முன்பே மேல்தளத்தில் மீன்கள் வரத் தொடங்கின.



பெட்டியில் வைக்கப்பட்ட ப்ரைமஸ் அடுப்பின் மீது உணவு சமைத்தோம். குடிசைக்கு வெளியே கட்டுமரத்தின் விளிம்பில் உணவருந்தினோம்.



கோன்டிகியின் தாடியுடன்கூடிய முகம். சரித்திர காலத்துக்குமுன் செதுக்கப்பட்ட கோன்டிகியின் உருவம் ஒன்றைப் பார்த்து எழுதப்பட்டது.



சுறுமீன் ஒன்று மேல் தளத்துக்கு இழுத்து வரப் படுகிறது.



மேல் தளத்துக்குச் சுறுமீன் வந்து சேர்ந்தாலும், அது கடிப்பதைத் தவிர்க்கும் வரை, அதைப் பிடித்தவனும் ஒதுங்கி நிற்க வேண்டியது தான்.



நெருங்கிப் பார்த்தால் ஒரு திமிங்கிலத்தின் தோற்றம்.



திமிங்கிலச் சுறுவின் பின்புறத் துடுப்புக்காலின் மேற்பாகம்.



திமிங்கிலச்சுரு — உலகத்திலேயே மிகப் பெரிய மீன்.



பாம்புமீனை (கெம்பைலஸ்) கையில் ஏந்திய ராபி. இதற்குமுன் இதை எவரும் கண்டதில்லை.



ராரோயியா திட்டில் கோன்டிகி போய்ச் சிக்கிக்கொண்டது. பல நாட்கள் அங்கே கிடந்தது.



திட்டில் சிக்கிய கோன்டிகியின் தளத்தில் குழப்பம். பாய்மரத் தூண் ஒடிந்து, குடிசை தளமட்டம் ஆயிற்று.

வேகமும் அதிகமாய் இருந்தன. ஆகவே, கோன்டிகி மிக வேகமாய் அலைகளின் மேற்பரப்பைக் கிழித்துக் கொண்டு சென்றது. நடுக் கடலில் அகப்பட்டுக் கொண்டதால், உயிரைக் காப்பாற்றி கொள்ளும் முயற்சியில் நாங்கள் முழு பலத்துடன் ஈடுபடவேண்டியிருந்தது. மிகுந்த துன்பப்பட்டு, கட்டுமரத்தைத் துரத்திப் பிடித்தோம். கட்டு மரமோ பிடிக்க முடியாத வேகத்திற் சென்றது. நிற்றலோ, காத்திருத்தலோ, திரும்பி வந்து படகில் இருந்தவர்களை ஏற்றிக் கொள்ளுதலோ இயலாமற் போயின. கோன்டிகியில் இருந்தவர்கள் அதன் பாய்த்துணியைச் சுருட்டி விட்ட பிறகும், வேகமாக மேற்குத் திசையில் அது நகர்ந்துக் கொண்டே இருந்தது. நம்மில் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து போகக்கூடாதே என்ற ஒரே பயம்தான் எங்கள் அனைவருடைய உள்ளத்திலும் மேலிட்டிருந்தது. அறுத்துக் கொண்டு ஓடிய கட்டு மரத்தை ஒரு வகையாய்ப் பிடித்துத் தளத்தில் ஏறி மற்றவர்களுடன் சேர்ந்து கொள்ளும் வரை ஒவ்வொரு நிமிடமும் பயங்கரமாய் இருந்தது. அன்று நாங்கள் பட்ட தொல்லையை இன்று வரை மறக்கவேயில்லை. அன்று முதல் ரப்பர்ப் படகை ஒரு கயிற்றினல் கட்டுமரத்துடன் கட்டிய பிறகே, கடலில் படகைச் செலுத்தலாம் என்று ஒரு விதி செய்து கொண்டோம். அவ்வாறு செய்தால், வேண்டிய போது கட்டுமரத்தில் இருப்போர், கயிற்றைக் கொண்டு படகைத் தம்மிடம் இழுத்துக் கொள்ளலாம் அல்லவா? இவ் விதி செய்த பிறகும், காற்றின் வேகம் மிகக் குறைந்திருந்த நேரங்களில் தவிர, மற்ற நேரங்களில் அதிக தூரம் செல்வதை நிறுத்தி விட்டோம். அப்போது பாலினீசியாவுக்குப் பாதி தூரத்தில் நாங்கள் இருந்தோம். எங்களைச் சுற்றி நாற்புறமும் எல்லையின்றிப் பரந்து கிடந்தது கடல். காற்றின் விசை அதிகமாய் இருக்கவில்லை. ஆகவே, கடல் அமைதியுற்றிருந்தது. அச்சம் சிறிதும் இன்றி, கோன்டிகியை விட்டு விலகி, ரப்பர்ப் படகில் ஏறிக் கொண்டு, மோனக் கடலுக்கும் வான வெளிக்கும் இடையில் இருந்த நீலப் பரப்பில் செல்ல முடிந்தது. செல்லச் செல்ல எங்கள் கட்டுமரம் உருவத்தில் சிறியதாய்த் தோன்றிற்று. முடிவில் பெரிய பாய்த்துணியும் தொடுவானத்தோடு ஒட்டிய ஒரு சிறிய கருஞ் சதுரமாகவே தோன்றியது. மேலிருந்த வானத்தைப் போலவே கீழிருந்த கடலும் வளைந்து வளைந்து

இடையருத நீலமாகவே தெரிந்தது. வானமும் கடலும் தொடுவது போலத் தெரிந்த இடத்தில் இரு நீலங்களும் ஒன்றுள் ஒன்று ஓடிக் கலந்தன. வெறும் வெளியில் ஆதாரம் ஒன்றும் இன்றித் தொங்கவிடப்பட்டது போன்ற உணர்ச்சி எங்களுக்கு ஏற்பட்டது. எங்கள் தோள் பட்டைகளைச் சிவக்கச் சூடேற்றித் தங்கநிறம் அடையச் செய்த சூரியனைத் தவிர, வேருெரு நிலைத்த பொருளும் காணப்படவில்லை. அப்போது, தொலைவில் தனித்து மிதந்த கட்டு மரத்தின் பாய்த்துணி எங்கள் கண்ணுக்குத் தெரிந்து, தொடு வானத்தில் இருந்த ஒரு காந்தப் புள்ளியைப்போல் எங்களை மீண்டும் இழுத்தது. மெல்ல ரப்பர்ப் படகைத் தள்ளிக் கொண்டு, கட்டுமரத்திற்கு வந்து சேர்ந்தோம். எங்கள் வீட்டுக்கே திரும்பிச் சென்றது போன்ற ஓர் உணர்ச்சி மேலிட்டது. கட்டுமரமேயானுலும், உறுதியான பாதுகாப்பான இடம்; குடிசைக்குள் நிழல்; மூங்கில், வாடிய இலைகள் ஆகியவற்றின் மணம்; குடிசைச் சுவரின் வழியே உட்புகுந்த மங்கிய ஒளி. இவை அனைத்தும் சேர்ந்து இன்பப் பெருவெள்ளமாக எங்கள் உள்ளத்தில் பாய்ந்தன. ஆயினும், வெளியில் தெரிந்த எல்லையற்ற தெளிவான நீலம் எங்களை அவ்வப்போது கவர்ந்து விடும். உடனே படகில் ஏறிச் செல்வோம். விரைவில் திரும்பி வருவோம்.

உறுதியற்று ஆட்டம் கண்ட ஒரு மூங்கிற் குடிசை எங்கள் மனத்தில் எத்தகையதோர் இடம் பெற்றுவிட்டது என்று எண்ணும்போது வியப்பு உண்டாகிறது. அதன் நீளம் 14 அடி, அகலம் 8 அடி. காற்றுக்கும் கடலுக்கும் ஈடு கொடுத்து, அழுத்தத்தைத் தாங்கிக் கொள்வதற்காக அது மிகவும் தாழ்வாக அமைக்கப்பட்டிருந்தது. அதற்குள் புகுந்தபின் நாங்கள் நிமிர்ந்து நிற்க முடியாது. சுவர்களும், கூரையும் பலமான மூங்கிற் கழிகளைக் கயிறுகொண்டு பிணைத்து அமைக்கப்பட்டிருந்தன. பிளக்கப்பட்ட மூங்கிற் கழிகளை இறுக்கமாகப் பின்னி, கூரையின் மேல் மூடியிருந்தோம். பச்சையும் மஞ்சளுமாய் இருந்த மூங்கில், ஆங்காங்குத் தொங்கிக் கொண்டிருந்த பச்சை இலைகளோடு சேர்ந்து கண்ணுக்கினிய காட்சியளித்தது. வலது புறத்தில் ஒரு பங்குக்கு மூங்கிற் சுவர் திறப்பாய் இருந்தது. கூரையும் சுவர்களும், வெய்யிலையும், நிலவையும் உள்ளே அனுமதித்தன. இந்தப் பழமையான பொந்து எங்களுக்கு

அளித்த பாதுகாப்பையும் வசதியையும், இதே நிலையில் வேறெந்தக் கட்டிடமும் அளித்திருக்க முடியாது. இதற்குக் காரணம் காண முயன்று, கீழ்க் கண்ட முடிவுக்கு வந்தோம். ஓலைகள் கட்டி அமைக்கப்பட்டிருந்த மூங்கிற் குடிசையையும் கடற் பயணத்தையும் ஒருமைப் படுத்திப் பார்க்க எங்கள் உள்ளம் பழகியதில்லை. அலைகளின் இடையே காற்றோட்டமாக மிதந்து கொண்டிருந்த மூங்கிற் குடிசைக்கும், உருண்டு புரண்டு கொண்டிருந்த பெருங் கடலுக்கும் இயற்கையான பொருத்தம் ஒன்றும் இல்லை. ஆகவே, அலைகளினிடையே குடிசை பொருத்தமற்றதாய்த் தோன்றிற்று. குடிசைக்குள் இருந்து பார்த்தபோது அலைகள் பொருத்தமற்றவையாய்த் தோன்றின. கட்டு மரத்தில் நாங்கள் இருக்கும் வரை குடிசை உண்மைப் பொருளாய்த் தோன்றிற்று. அலைத்துக் கொண்டிருந்த கடல் உருவெளித் தோற்றம் போல் காணப்பட்டது. ரப்பர்ப் படகிலிருந்து பார்த்தபோது கடல் உண்மைப் பொருளாயும், குடிசை அதற்குப் பொருத்த மற்றதாகவும் தோன்றிற்று. கடற் பறவையைப் போல் பால்ஸா கட்டைகள் அலைகளின் மீது ஏறி மிதந்தன. அலை தளத்தின் மீது விழுந்தாலும், பின் புறத்தில் இடைவெளிகள் வழியே நீர் வழிந்தோடிற்று. ஆகவே, குடிசை அமைந்திருந்த நடுப் பகுதி எப்போதும் உலர்ந்திருந்தது. நாட்கள் செல்லச் செல்ல பயணத்தில் ஓர் ஆர்வமும் திருப்தியும் ஏற்பட்டது. அலைகளைக் காணும்போது, அவை அபாயம் விளைவிக்கக் கூடியன அல்ல, மனத்தைக் கவரும் ஒரு படக்காட்சி என்றே எங்களுக்குத் தோன்றிற்று. குடிசையின் வாயில், கட்டுமரத்தின் விளிம்பிலிருந்து 5 அடி தூரத்திலும், நீர்மட்டத்திலிருந்து ஒன்றரை அடி உயரத்திலுமே இருந்தது. ஆயினும், குடிசைக்குள் நுழைந்ததும், கடலை விட்டுப் பலமைல் தூரம் சென்று விட்டதாக ஓர் உணர்ச்சி ஏற்பட்டது. குடிசைக்குள் மல்லாந்து படுத்துக் கொண்டு பார்த்தபோது. குடிசையின் விநோதமான கூரையில் தெரிந்த நெளிவுகள் காற்றில் கிளைகள் அசைவதை நினைவூட்டின. பச்சை மரம், மூங்கில்கள், வாடிய ஓலைகள் இவற்றின் மணமெல்லாம் சேர்ந்து காட்டு மணம் பரவியிருந்தது.

வெளியிலிருந்து கோன்டிகியைக் காணவேண்டும் என்னும் ஆசையால் தூண்டப்பட்டு, இரவு நேரங்களிலும்

ரப்பர்ப்படகில் ஏறிச் சென்றதுண்டு. அப்போது நிலக்கரி போல் கருத்த அலைகள் எல்லாப் பக்கங்களிலும் கோபுரங்களைப் போல் எழும்பி விழுந்தன; நீரில் இருந்த பிளாங்டன், உஷ்ணப் பிரதேசத்திய வானத்து விண்மீன்களின் இணையிலா மினுமினுப்புக்குப் பிரதிபிம்பம்போல் அமைந்திருந்தன. இது சிக்கல் இல்லாத உலகம். விண்மீன்களும் இருளும்—ஆக இரண்டேதான். இயந்திர காலத்துக்கு முன்னரும் மனித வாழ்வு முழுமை பெற்றிருந்தது என்னும் உண்மையை நாங்கள் அறிந்து கொண்டோம். இன்னும் சொல்லப் புகுந்தால், தற்கால மனிதனுடைய வாழ்க்கையை விடப் பண்டைக்கால வாழ்வு எத்தனையோ துறைகளில் செழித்து நிறைவு எய்தி இருந்தது. நடுக்கடலில் காலமும், சிறிது சிறிதாக முன்னேறும் மனிதனின் நாகரீக வளர்ச்சியும் திடீரென்று இன்மையினுள் மறைந்துபோயின. பண்டொரு காலத்தில் எவை தலைசிறந்த உண்மைகளாய் இருந்தனவோ, அவற்றைத்தான் இன்றும் உண்மைகளாய்ப் போற்றுகிறோம்; வருங்காலத்திலும் போற்றுவோம். எல்லை கடந்து நின்ற இடையறுத இருளும், வானில் மொய்க்கும் விண்மீன்களும் என்றுமே மாறுத பேருண்மைகள். இவற்றினிடையே நாங்கள் வைத்து மூடப்பட்டிருந்தோம்.

இரவில் கறுத்த பெரும் நீர்க்குன்றுகள் உயர்ந்தபோது, கோன்டிகி மேலெழுவதும் அலையிடை வெளியில் இறங்குவதுமாய் இருந்தது. தடித்த மரக்கட்டைகள் கடற்பாசிகளால் மூடப்பட்டுப் பளபளத்தன. பாய்த்துணி கீலைப்போல் கருத்திருந்தது. மூங்கிற் குடிசைத் தன் நிழலைப் படர விட்டுத் தனியே நின்றிருந்தது. பின் புறம் வைக்கப் பட்டிருந்த மெழுகு விளக்கு மஞ்சள் ஒளிவிட்டுப் பிரகாசித்தது. இவை யாவும் சேர்ந்து, கதைகளில் வரும் காட்சிகளை நினைவூட்டினவே அன்றி உண்மைக் காட்சியாகத் தோன்ற வில்லை. இவ்வாறு தனித்து மிதந்த கட்டுமரத்தைக் கண்டபோது, எங்கள் கற்பனையில் வேறொரு காட்சியும் பிறந்தது. கடலை முதன் முதல் தாண்டிய காலத்தில் கட்டுமரங்களை ஒரு விசிறி வடிவமாக அமைத்துக்கொண்டு, தொடுவான வட்டத்தில் மனிதன் சென்ற காட்சியே அது. பெரு, [1] இக்வடார் என்னும் இரு நாடுகளையும் தன் ஆட்சியின் கீழ்க் கொணர்ந்த

1. Ecuador

டுபாக்யுபாங்கி என்னும் இங்கா தலைவன், ஸ்பானியர்களின் வருகைக்கு முன் இம்மாதிரித்தான் கடலைத் தாண்ட முயன்றான். பசிபிக்கில் இருந்ததாகச் சொல்லப்பட்ட தீவுகளைத் தேடிக்கொண்டு, பல்லாயிரம் மனிதர்களுடன் பால்ஸா கட்டுமரங்களில் ஏறிச் சென்றான். அவன் கண்டு பிடித்தவை இரு தீவுகள். அவையே கலபாகோஸ் தீவுகள் என்று சிலர் கருதுகிறார்கள். எட்டு மாதகாலம் இம்மாதிரிச் சென்றபின் அவனும் அவனுடைய கட்டுமரங்களும் பலவிதத் துன்பங்களுக்கு உள்ளாகி மறுபடியும் இக்வடாருக்கே வந்து சேர்ந்ததாகத் தெரிகிறது. கோன்டிகியும் அவனுடைய நண்பர்களும் பல நூற்றாண்டுகளுக்கு முன் இதே போலக் கடல் கடந்தார்கள். பாலினீசியத் தீவுகளைக் கண்டு பிடித்து விட்டதால் திரும்பிவர வேண்டிய அவசியம் அவர்களுக்கு ஏற்படவில்லை.

இரவு நேரங்களில் மெழுகு விளக்கைச் சுற்றி வட்டமாக உட்கார்ந்து கொண்டு, 1,500 வருடங்களுக்கு முன்பு பெருவிலிருந்து கிளம்பிய கடற் பிரயாணிகளைப் பற்றிப் பேசுவது எங்களுக்கு வழக்கமாய் இருந்தது. விளக்கின் ஒளியில் பாய்த் துணியின் மீது தாடி மனிதர்களின் பெரிய நிழல் உருவங்கள் விழுந்தன. அவற்றைப் பார்த்ததும், பண்டைக் காலத்தில் பெருவில் இருந்த தாடி பொருந்திய வெள்ளையரைப் பற்றிய நினைவு எழும். புராணங்களையும் சிற்பக்கலையையும்கொண்டு ஆராயுமிடத்து, மெக்ஸிகோவிலிருந்து மத்திய அமெரிக்கா வரை நாகரீகத்தின் தொடர்ச்சியைக் காணமுடிகிறது. அங்கிருந்து தென் அமெரிக்காவின் வடமேற்கில் இருக்கும் பெரு வரையிலும் கூட இந்த நாகரீகத்தின் வேர் ஓடுகிறது. இங்காக்கள் ஆட்சி பெறுவதற்கு சற்று முன்னதாக இந்த நாகரீகம் திடீரென்று மறைந்தது. ஆனால், நாங்கள் நெருங்கிக் கொண்டிருந்த, மேற்கில் இருந்த, தொடர்பற்ற தீவுகளில் இதே நாகரீகம் திடீரென்று முளைத்தது.

மேற்கூறியவாறு கடற்பயணம் செய்து, தம் நாகரீகத்தைப் பரப்பிச்சென்றவர்கள் ஒரு பழமையான நாகரீகத்தில் வளர்ந்த இனத்தாராய் இருக்க வேண்டும் அல்லவா? [1] கானரி தீவுகளிலிருந்து அவர்கள் மேற்சொன்ன எளிய

1. Canary

முறையில் மேற்கத்திய கடல் நீரோட்டத்தையும், வியாபாரக் காற்றுகளையும் பயன்படுத்திக்கொண்டு, நெடுங்காலத்துக்கு முன்பே மெக்ஸிகோ குடாவுக்கு வந்து சேர்ந்தார்களா? அவ்வாறு செய்திருப்பினும், அவர்கள் கடலின் மீது கடந்த தூரம் குறைவானது தான். மேலும், ஒரு நாட்டையும் மற்றொரு நாட்டையும் தொடர்பின்றிப் பிரிக்கக் கடலால் முடியாது என்பதை நாங்கள் கண்டறிந்தோம். மெக்ஸிகோவில் இருந்த [2] அஸ்டெக்குகள் முதல், பெருவில் இருந்த இங்காக்கள் வரை மிக முக்கியமான அமெரிக்க இந்திய நாகரீகங்கள் தோன்றி வளர்ந்ததன் காரணம், கிழக்கில் இருந்த கடல்களின் மூலம் அடிக்கடித் தூண்டுதல்கள் கிடைத்ததேயாகும் என்று பல ஆராய்ச்சியாளர்கள் நம்புகின்றனர்; அதைத்தக்க சான்றுகளைக் கொண்டு நிரூபிக்கின்றனர். பொதுவாகச் சொல்லும்போது, அமெரிக்க இந்தியர் ஆசியாவில் வேட்டை ஆடியும், மீன்பிடித்தும் வாழ்ந்தவர்கள்; 20,000 வருட காலத்தில் சிறிது சிறிதாக சைபீரியாவிலிருந்து அமெரிக்காவிற்கு வந்தவர்கள். மெக்ஸிகோவிலிருந்து பெரு வரை பரவியிருந்த நாகரீகங்கள் காலப்போக்கில் சிறிது சிறிதாக மாறுதல் அடைந்தன என்பதற்கான அறிகுறிகள் ஒன்றுமே யில்லை என்பது வியப்புக்குரியதாகும். நாகரீகம் மிகுந்திருந்ததாகச் சொல்லப்பட்ட இடங்களில் ஆழமாகத் தோண்டினால், கிடைக்கும் பொருள்கள் முதிர்ந்த ஒரு நாகரீகத்தின் சின்னங்களையே காட்டுகின்றன. ஆனால், ஒரு கட்டத்துக்கு மேல் இந்நிலை திடீரென்று மாறுகிறது. அதற்குமேல் தோண்டினால், வேறு புராதனமான நாகரீகங்களின் அறிகுறிகள் காணப்படுகின்றன. ஆகவே, முன் சொன்ன நாகரீகங்கள் மிகப்புராதனமான நாகரீகங்களின் அடிப்படையில் தோன்றாமல், வேறு வகையில் திடீரென்று தோன்றியிருக்க வேண்டும்.

அட்லாண்டிக்கிலிருந்து கடல் நீரோட்டம் வந்து சேருமிடத்தில் இந்த நாகரீகங்கள் முளைத்து எழுந்தன. முற்காலத்திலும் தற்காலத்திலும் கூட நாகரீகங்கள் எளிதில் வளர்ச்சி பெறத்தக்க சூழ்நிலை சமசீதோஷ்ணப் பிரதேசங்களில்தான் உண்டு. ஆயினும், அங்கு இந்நாகரீகங்கள் தோன்றவில்லை. மத்திய அமெரிக்காவிலும், தென் அமெரிக்-

1. Aztecs

காவிலும் வறண்ட நிலங்களும் காடுகளும் அமைந்த பகுதியில்தான் இவை காலூன்றின. தென்கடற் தீவுகளிலும் இதையே நாம் பார்க்கிறோம். பெருவுக்கு மிக அருகாமையில் உள்ளது ஈஸ்டர் தீவு. பசிபிக்கில் இருக்கும தீவுகள் எல்லாவற்றிலும் இது தான் ஆசியாவிலிருந்து அதிக தூரத்தில் இருக்கிறது. இது மிகச்சிறியது, வறண்டது. எனினும், இங்குத்தான் பழைய நாகரீகத்தின் சின்னங்கள் அழுத்தமாகப் பதிந்துள்ளன. பெருவிலிருந்து ஈஸ்டர் தீவுக்கு அருகில் வந்தால், எங்கள் பயணத்தில் பாதி முற்றுப் பெற்றதாகும். அப்போது பழம் பெருமை பெற்ற அத்தீவு எங்களுக்குத் தெற்கே வந்து விடுகிறது. பெருவின் கடற்கரைக்கு நடுவில் எதேச்சையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் இடத்திலிருந்து நாங்கள் புறப்பட்டோம். ஆகவே, எங்கள் போக்கு, பெருவிலிருந்து புறப்படும் கட்டுமரங்களின் சராசரிப் போக்கை ஒத்திருந்தது. இன்னும் தெற்கே கோன்டிகியின் பாழடைந்த நகரமாகிய [1] டியா ஹுவானகோ அருகிலிருந்து புறப்பட்டிருந்தால், நாங்கள் அதே வியாபாரக் காற்றினுள் அகப்பட்டிருப்போம். கடல் நீரோட்டம் தெற்கில் வேகம் குறைந்திருக்கும். ஆதலால், நேரே ஈஸ்டர் தீவுக்குச் செல்லும் பாதையிலேயே சென்றிருப்போம். 110° மேற்குத் தீர்க்கரேகையைத் தாண்டியதும் நாங்கள் பாலினீசியக் கடற்பரப்புக்குள் வந்து விட்டோம். ஏனெனில் ஈஸ்டர் தீவு இப்போது எங்களைவிடப் பெருவுக்குச் சமீபத்தில் இருந்தது. தென் கடற் தீவுகளின் முதல் எல்லைக்கே வந்து சேர்ந்து விட்டோம். பண்டையத் தீவு-நாகரீகத்தின் முக்கிய இருப்பிடம் இது. இரவு நெருங்கிற்று. சூரியன் வானத்திலிருந்து இறங்கித் தன் முழுநிற வரிசையுடன் மேற்கடலுக்கு அப்பால் மறைந்தான். மெல்ல வீசிய வியாபாரக்காற்று ஈஸ்டர்தீவு என்னும் புதிரைச் சூழ்ந்து நின்ற பழங்கதைகளுக்குப் புத்துயிர் ஊட்டியது. இரவு நேரத்தில் கடந்த காலத்தின் நினைவை வானவெளி அழித்து விட்டது. பாய்த்துணியின் மீது மீண்டும் தாடியுடன் கூடிய அரக்க உருவங்கள் தெரிந்தன.

ஆனால், தெற்கே நெடுந் தொலைவில் இருந்த ஈஸ்டர் தீவில் இதனினும் பெரிய அரக்கத் தலை உருவங்கள் கல்லில்

1. Tiahuanaco

செதுக்கப்பட்டிருக்கின்றன. குவிந்த தாடிகளும், வெள்ளையரின் முக அமைப்பும் கொண்ட இந்த மனிதத் தலை வடிவங்கள், கடந்த நூற்ருண்டுகளில் தாம் புதையுண்ட இரகசியத்தைப்பற்றி ஆழ்ந்து சிந்தித்துக்கொண்டே இருக்கின்றன போலும்! 1,722-ஆம் வருடத்தில் ஐரோப்பியர் முதன்முதலாக இத் தீவைக் கண்டுபிடித்தபோதும் அவை இதே நிலையில் இருந்தன. அதற்குமுன் பல தலைமுறைகளிலும்கூட அவற்றின் சிந்தனை கலைந்ததில்லை. ஐரோப்பியர் வருவதற்கு 22 தலைமுறைகளுக்கு முன்னர், பாலினீசியாவின் இன்றையக் குடிமக்கள் படகுகளின் மூலம் வந்து, இவ்விடத்தை அடைந்தார்கள்; அதற்குமுன் இங்குக் குடியேறி நாகரீக முதிர்ச்சி அடைந்திருந்த மனிதர் அனைவரையும் கொன்று ஒழித்தார்கள். அன்று முதல், ஈஸ்டர் தீவில் கல்லிற் செதுக்கிய இந்த அரக்க உருவங்கள், பழங்காலத்துப் புதிர்-உருவங்களில் முதலிடம் பெற்றுவிட்டன. மரங்கள் அற்ற இத்தீவின் சரிவுகளில் ஆங்காங்கே இப்பெரும் வடிவங்கள் வானளாவி நிற்பதைக் காணலாம். மூன்று அல்லது நான்கு மாடிகளைக் கொண்ட ஒரு வீட்டின் உயரத்துக்கு, ஒரே கல்லில் சாமர்த்தியமாகச் செதுக்கப்பட்ட மனித உருவங்கள் இவை. பண்டைக்கால மனிதர்கள் எவ்வாறு இவ்வுருவங்களைச் செதுக்கினுர்கள்? செதுக்கிய பின் எவ்வாறு இடம் விட்டு இடம் சுமந்து கொண்டுபோய் ஆங்காங்கு நிறுத்தி வைத்தார்கள்? சிலவிடங்களில், இக் கற்சிலைகளின் தலையில் பெரும் சிவப்புப் பாறைகள் ஏற்றி வைக்கப்பட்டிருக்கின்றன. இதற்கெல்லாம் பொருள் யாது? த்ற்காலத்தியத் தனிப்பெரும் பொறியியல் வல்லுநருக்கும் கடினமான பிரச்னைகளைச் சமாளிக்க இம் மறைந்துபோன சிற்பிகளுக்கு என்ன திறமை இருந்தது? எல்லாவற்றையும் பொருத்திப் பார்க்கும்போது, பெருவிலிருந்து கட்டுமரங்களில் மனிதர்கள் வந்தார்கள் என்ற அடிப்படையில் ஆராய்வோமானுல் ஈஸ்டர்தீவு எழுப்பும் பிரச்னைக்கு வழிகாணலாம். கால வெள்ளத்தால் அழிக்கமுடியாத நிலைத்த சில சின்னங்களை இத்தீவில் பண்டைய நாகரீகம் விட்டுச் சென்றிருக்கிறது.

முன்னெரு காலத்தில் எரிந்து அவிந்துபோன ஒரு எரிமலையின் உச்சிக்குவடுதான் இந்த ஈஸ்டர் தீவு. நாகரீகம் மிக்க பழங் குடிகள் கடற்கரையில் இறங்கத் துறைகளை

அமைத்து, அத்துறைகளுக்குச் செல்லச் சீரான பாதை-களை அமைத்திருந்தார்கள். இன்றளவும் நல்ல நிலையில் இருக்கும் இந்த இறங்கு துறைகளிலிருந்தும், பாதைகளி-லிருந்தும், கடற்கரை முன்பிருந்த அளவிலேயே இன்றும் இருக்கிறது என்பதை அறியலாம். சிலர் எண்ணுவது-போல் ஈஸ்டர் தீவு என்பது கடலுள் ஆழ்ந்துவிட்ட ஒரு கண்டத்தின் எஞ்சிய பகுதி அன்று. அது என்றுமே சிறிதாகவும் தனித்தும்தான் இருந்திருக்கின்றது. பசிபிக்-கின் கலாச்சாரத்துக்கு நிலைக்களனாக விளங்கிய அன்றும் இதே போலத் தான் இருந்தது.

ஆப்பை போன்று அமைந்த இத்தீவின் நடுவில் உள்ளது எரிமலையின் அவிந்தவாய். பண்டைச் சிற்பிகள் கல்வெட்டி எடுத்த இடமும் அவர்களுடைய கல்செதுக்கும் கலைக்கூடமும் எரிமலை வாயில் அமைந்திருக்கிறது. பல நூறு வருடங்களுக்குமுன் பழைய கலைஞர்களும் சிற்பி-களும் விட்டு விட்டுச் சென்ற அதே நிலையில் இன்றும் இதைக் காணலாம். இத் தீவுக்குப் புதிதாக வந்த இனத்-தாரிடமிருந்து உயிர் தப்புவதற்காக, பழங்குடிகள் தீவின் கிழக்குக் கரைக்கு ஓடினார்கள் என்றும், அங்கு அவர்களில் ஆண்மக்கள் அனைவரும் கொலை செய்யப்பட்டனர் என்றும் பழங்கதைகள் கூறுகின்றன. அன்னியரின் படையெடுப்-பால் திடீரென்று நிறுத்திவிடப்பட்ட கலையமைப்பைக் கொண்டு, ஈஸ்டர் தீவில் பண்டை நாளில் கலைத்திறமையும் உழைப்பும் எவ்வளவு உயரிய நிலையில் இருந்தன என்ப-தைத் தெரிந்துகொள்ளலாம். வேலையாட்களின் செதுக்கும் கோடரிகள் கல்லினாற் செய்யப்பட்டிருந்தன. அவை ஆங்-காங்குச் சிதறிக்கிடக்கின்றன. பழங்குடிகள் இரும்பின் உபயோகத்தை அறிந்திருக்கவில்லை என்பது இதிலிருந்து விளங்குகிறது. இதேபோன்று, பெருவை விட்டு விரட்டப்-பட்ட கோன்டிகியின் சிற்பிகளும் இரும்பின் உபயோகத்தை அறியாதவர்களே. அவர்களும் ஆண்டிஸ் மலைக்கு அருகில் இதே போன்ற பெரிய கற்சிலைகளை விட்டுவிட்டுத்தான் ஓடினார்கள். பெரு, ஈஸ்டர் தீவு ஆகிய இரு இடங்களிலுமே பண்டைக் கதைகளிற் சொல்லப்பட்ட தாடியமைந்த வெள்ளையர், மலைப் பக்கங்களிலிருந்துதான் கற்களைப் பெயர்த்து எடுத்தார்கள். மலைப் பாறைகளைவிட உறுதி

வாய்ந்த கற்கோடரிகளைக்கொண்டு 30—40 அடி நீளமுள்ள பெருங் கற்கள் வெட்டி எடுக்கப்பட்டன. பல டன் எடை- யுள்ள இப் பெருங்கற்கள் கரடுமுரடான நிலப்பரப்பின்மீது பல மைல் தூரத்துக்கு இழுத்துச் செல்லப்பட்டன. உரிய இடத்துக்கு வந்து சேர்ந்ததும் மனித உருவங்களாகவோ அல்லது ஒன்றன்மீது ஒன்ருக வைத்து அமைக்கப்பட்ட மேல்தளங்களாகவோ சுவர்களாகவோ உருப்பெற்றன. ஈஸ்டர் தீவில் எரிமலைப்பக்கம் உள்ள பள்ளங்களில் முடிவு பெருத பல பெரிய உருவங்கள் விட்டுவிடப் பெற்றிருக்- கின்றன. செதுக்கு வேலை பல்வேறு கட்டங்களில் எவ்- வாறு நடைபெற்றது என்பதை இவை காட்டுகின்றன. இவற்றுள் பெரிய மனித வடிவம் 66 அடி நீளமானது. இது ஏறக்குறைய முடிவுறும் நிலையில் சிற்பிகள் ஓடவேண்டி நேரிட்டது. இவ்வேலை முடிவுபெற்று உருவமும் நிறுத்தப் பெற்றிருந்தால், இப்பெரும் ஒற்றைக் கல்லின் தலை ஏழு மாடிகள் கொண்ட ஒரு கட்டிடத்தின் கூரையளவுக்கு உயர்ந்திருக்கும். ஒவ்வோர் உருவமும் ஒரே கற்பாறையி- லிருந்து செதுக்கப்பட்டது. ஒவ்வொரு கல்லுருவின் அரு- காமையிலும் சிற்பி தங்குவதற்காக ஒரு பிறை அமைக்- கப்பட்டிருக்கிறது. அப்பிறையின் நீள அகலங்களை ஆராயும்போது, அதில் ஒரு மனிதன் தான் வசித்திருக்க முடியும் என்பது தெரிகிறது. ஆகவே, ஒரு சிலையை உரு- வாக்குவதில் ஒரே சிற்பி ஈடுபட்டிருந்தான் என்பது தெளி- வாகிறது. மனித உருவங்களிற் பல, மல்லாந்து படுத்துக் கொண்டு, கைகளை வளைத்து, வயிறுகளின்மீது வைத்துக் கொண்டது போன்று அமைக்கப் பெற்றவை. பெரு நாட்டுக் கல்லுருவங்களும் இதுபோன்றவையே. நுணுக்க- மான கடைசிச் செதுக்கல் வரை முடிந்த பின்னரே, இவ்வுரு- வங்கள் கலைக்கூடங்களிலிருந்து அவ்வவற்றிற்குரிய இடங்- களுக்கு எடுத்துச் செல்லப்பட்டன.

இக்கல்லுருவங்கள் மலையடிவாரம் வரை இழுத்துச் செல்லப்பட்டு, ஆங்காங்கே சரிவில் நிறுத்தப்பட்டன. ஆயினும், மிகப் பெரியனவாய் இருந்த பல கல் உருவங்கள் இன்னும் மேலே இழுத்துச் செல்லப்பட்டு மலை உச்சிக்கும் அப்பால் கரடுமுரடான பூமியில் பல மைல் தூரம் கொண்டு செல்லப்பட்ட பின்னரே, அவ்வவற்றிற்குரிய கல் மேடை-

களின்மீது வைக்கப்பட்டன. அதன் பின்னர், அவற்றின் தலைகளில் சிவப்பு நிறம் பொருந்திய எரிமலைக் குழம்புப்-பாறையின் பெரிய துண்டுகளும் வைக்கப்பட்டன. இப் பெருங் கற்கள் எவ்வாறு சுமந்து செல்லப்பட்டன என்பதே நமக்கு ஒரு புதிராகத் தோன்றலாம். ஆனால், கல்லுரு-வங்கள் இடம் பெயர்த்து எடுத்துச் செல்லப்பட்டன என்பதை நாம் மறுக்க முடியாது. பெருவில் வாழ்ந்த சிற்பிகளும் இவ்வளவு பெரிய கல்லுருவங்களை விட்டுச் சென்றிருக்கிறார்கள் என்பதையும் நாம் ஒப்புக்கொள்ளத்-தான் வேண்டும். இவ்வுருவங்களைப் பார்க்கும்போது அவற்-றைக் கல்லில் வடித்த சிற்பிகளின் கலைத்திறம் தெரிகிறது. ஈஸ்டர் தீவில் உள்ள ஒற்றைக்கல் வடிவங்கள் எண்ணிக்-யிலும் அளவிலும் பெரியன. அவற்றைச் செதுக்கிய சிற்பிகளுக்கு ஒரு தனிப் பாணி இருந்தது. எனினும், இதே நாகரீகம்தான் பசிபிக் தீவுகளிலுள்ள கற்சிலைகளுக்கும் காரணமாய் இருந்திருக்கவேண்டும். இவ்விடங்கள் அனைத்-திலும் கோயிற்பீடத்துக்கு ஒற்றைக் கற்சிலைகள் வெகு-தொலைவில் இருந்துதான் கொண்டுவரப்பட்டிருக்க வேண்-டும். [1]மார்க்கிஸா தீவுகளில் இப்பெரும் கல்லுருவங்கள் எவ்வாறு நகர்த்தப்பட்டன என்ற பழங்கதைகளை நான் கேட்க நேர்ந்தது. [2]டோங்கடாபூவில் இருக்கும் பெரிய கல்தூண்கள் நகர்த்தப்பட்ட விதத்தைப்பற்றி அங்கிருக்கும் பழங்குடிகள் கூறுவதும், மேற்சொன்ன கதைகளும் ஒத்திருக்கின்றன. ஆகவே, அதே மனிதர்கள் அதே முறைகளைக் கையாண்டு கற்களை நகர்த்தினார்கள் என்று நாம் கொள்வதில் தவறில்லை.

பண்டைக் காலத்தில் ஈஸ்டர் தீவு மீன்களிலும், பயிரிலும் செழித்திருந்தது. பெருவிலிருந்து கொண்டு வரப்பட்ட வள்ளிக்கிழங்கு ஏராளமான அளவிற் பயிரிடப்-பட்டது. இத்தீவில் சுமார் எட்டாயிரம் மக்கள் இருந்திருக்க-லாம் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். ஆயிரம் மனிதர் இருந்தால் இப்பெரும் கற்சிலைகளை மலைஉச்சிக்குத் தூக்கிவிட முடியும். ஐந்நூறு மனிதர் இருந்தால் அச்-சிலைகளை மேலும் இழுத்துக் கொண்டுபோய்த் தீவில் ஆங்காங்கே நிறுத்திவிடமுடியும். எலுமிச்சை வகையைச்

1. Marquesas 2. Tongatabu

சேர்ந்த செடிகளிலிருந்தும் மற்றத் தாவர வகைகளிலிருந்தும், எளிதில் அறுபடாத கயிறுகள் பின்னப்பட்டன. பின்னர் மரச்சட்ட அமைப்புக்களைக் கொண்டு கல்லுருவம் மரக் கட்டைகளின் மீதும், சிறிய பாறைகளின் மீதும் இழுக்கப்பட்டு மெல்ல நகர்ந்தது. இழுப்பதற்கு வசதியாய் இருப்பதற்காக டாரோ என்னும் ஒருவகை வேரைக்கொண்டு கற்பாறைகளும், கட்டைகளும் வழவழப்பாகச் செய்யப்பட்டன. பண்டைய நாகரீகத்தினர் கயிறுகள் திரிப்பதில் மிக்க திறமை பெற்றிருந்தனர் என்பது தென்கடற் தீவுகளைப் பார்க்கும்போதும் பெருவைப் பார்க்கும்போதும் தெரிகிறது. பெரும் அருவிகளுக்கும் பாறைப் பிளவுகளுக்கும் குறுக்கே அமைக்கப்பட்டிருந்த தொங்கும் பாலங்களைப் பெருவிற்கு வந்த முதல் ஐரோப்பியர் கண்டனர். ஏறக்குறைய மூன்றடிப் பருமனுள்ள கயிறுகளைப் பின்னி, 300 அடிக்கும் மேற்பட்ட தொலைவிற்குப் பாலங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

ஒரு கல்லுருவம் அதற்குரிய இடத்துக்கு நகர்த்தப்பட்டபின் அதை நிமிர்த்தவேண்டிய பிரச்னை தோன்றுகிறது. உருவத்தை நிறுத்தவேண்டிய இடத்தை ஒட்டிக் கற்களையும், மணலையும் கொண்டு ஒரு சாய்தளம் அமைத்தார்கள். இந்த மேட்டின் அதிகச் சாய்வான பக்கத்தின்மேல் கல்லுருவம் கால் முன்னாக ஏற்றப்பட்டது. உருவம் உச்சியைச் சென்று அடைந்ததும், செங்குத்தான பக்கத்தில் நழுவித் தயாராகத் தோண்டப்பட்ட குழியில் சரியானபடி விழுந்து தங்குகிறது. பிறகு ஒரு பெரிய கல் உருளையும் சாய்தளத்தின்மீது கொண்டு செல்லப்பட்டு, சிலையின் தலையில் வைக்கப்படும். இவ் வேலை முடிந்ததும் சாய்தளம் தூர எறியப்படும். இவ்வாறு பண்டைய மனிதர் உபயோகித்த சாய்தளங்கள் பல இன்றும் ஈஸ்டர் தீவில் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. கல்லுருவங்கள் தயாராவதற்கு முன்னரே இச்சாய்தளங்கள் செய்யப்பட்டுத் தயாராக வைக்கப்படும். இவற்றையெல்லாம் ஆராயும்போது, அக்காலத்து மனிதருடைய புத்திகூர்மையும், தளர்விலா ஊக்கமும் புலனாகின்றன. அவர்கள் ஏன் பெருஞ் சிலைகளைச் செய்தார்கள்? அச் சிலைகளின்மேல் வைப்பதற்காகச் சிவப்புக் கற்களைத் தேடிக்கொண்டு பல மைல்

தூரம் சென்று அவதிப்பட்டது ஏன்? தென் அமெரிக்காவிலும் மார்க்கிஸா தீவுகளிலும் பலவிடங்களில் கற்சிலைகள் முழுதுமே சிவப்புக் கல்லில் செதுக்கப்பட்டிருக்கின்றன. பாலினீசியாவிலும் பெருவிலும் இருந்த பழங்குடிகளிடையே உயர்ந்த பதவிகளை வகித்தவர்கள் சிவப்புத் தலையணி அணிந்திருந்தனர். சிவப்புத் தலைப்பாகை அணிதல் பெருமைக் குரியதாகக் கருதப்பட்டது.

இக் கல்லுருவங்கள் யாரை உருவகப்படுத்துகின்றன என்பதைச் சிறிது காண்போம். இத்தீவுக்கு முதன் முறையாக ஐரோப்பியர் வந்தபோது, கடற்கரையில் சில வெள்ளை மனிதரைக் கண்டார்கள். இவ்வெள்ளையர் நீண்டு புரளும் தாடி வைத்திருந்தார்கள். ஆனால், இத்தீவின் பழங்குடிகள் இடையே தாடி வைத்துக் கொள்ளும் பழக்கம் கிடையாது. அதற்குமுன் இத்தீவின்மீது படையெடுத்துவந்த ஓரினத்தார், தாம் கண்ட பழங்குடிகளின் பெண்டு பிள்ளைகளை மட்டும் உயிரோடு இருக்க அனுமதித்தனர். ஆண்மக்களை விரட்டிச் சென்று கொல்ல முயன்றனர். ஆயினும் சிலர் உயிர் தப்பி ஓடினர். அவ்வாறு உயிர் தப்பியவருடைய வழித்தோன்றல்களே மேற்கூறிய தாடி கொண்ட வெள்ளையர். மேலும், இத்தீவினரிடைப் பேசிக் கொண்டிருந்தபோது, வேறொரு உண்மையும் புலனாயிற்று. அவர்களுடைய முன்னோர்களில் சிலர் வெள்ளையாகவும் மற்றவர்கள் கருப்பாகவும் இருந்ததாகப் பழங்குடிகளே சொன்னார்கள். கருப்பாக இருந்தவர்கள் 22 தலைமுறைகளுக்கு முன்னால் வேறு எங்கிருந்தோ பாலினீசியாவுக்கு வந்ததாக அவர்கள் கணக்கிட்டுக் கூறினார்கள். வெள்ளையரோ கிழக்குத் திசையிலிருந்து பெரிய கப்பல்களில் 57 தலைமுறைகளுக்கு முன்னால் (ஏறக்குறைய கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில்) வந்து சேர்ந்தார்களாம். கிழக்கிலிருந்து வந்த இவ் வெள்ளையருக்கு 'நீண்ட காது உடையோர்' என்ற பெயர் தரப்பட்டது. ஏனெனில், காதுகளில் பளுவைத் தொங்கவிட்டு, செயற்கையாகக் காதுகளை நீட்டிக் கொண்டு தோள்களில் இடிக்குமாறு அவர்கள் செய்து கொள்வார்களாம். இந் நீண்ட காது உடையோரை, இத் தீவுக்கு வந்த குறுகிய காது உடையோர் கொன்று தீர்த்தனர். எல்லாக் கல்லுருவங்களிலும் நீண்ட காதுகள்

உள்ளன. அவற்றைச் செதுக்கிய சிற்பிகளுக்கும் அதே-போல் தொங்கும் காதுகள் இருந்தன. பெருவில் வழங்கும் இங்கா புராணங்களில் கோன்டிகியைப்பற்றிக் கூறுமிடத்து, "சூரிய வமிசத்து அரசன் கோன்டிகி, தாடிகள் வைத்தி-ருந்த ஒரு வெள்ளை இனத்தாருக்கு அரசனாய் இருந்தான்," என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இவ் வெள்ளை இனத்-தாரை இங்காக்கள் நீண்ட காது உடையோர் என்று அழைத்தனர். டிடிகாகா ஏரியில் இருந்த ஒரு தீவில் நடந்த சண்டையில் இங்காக்களால் முறியடிக்கப்பட்டுக் கொல்லப் பட்டும் விரட்டப்பட்டும் மறைந்துபோன அதே கோன்டிகி-யின் நீண்ட காது உடையோரே ஆண்டிஸ் மலைச் சரிவு-களில் இன்று கேட்பாரற்றுக் கிடக்கும் பேருருவங்களைக் கல்-லிற் செதுக்கி நிறுவியவர்கள். இச்செய்தியை இங்காக்களே அழுத்தமாய்க் கூறினார்கள். இச் செய்தித் துணுக்குகள் யாவற்றையும் சேர்த்துப் பார்த்தால் நாம் கொள்ளவேண்-டிய முடிவு பின்வருமாறு :— கோன்டிகியைச் சேர்ந்த வெள்-ளையர் நீண்ட காது உடையோர். அவர்கள் பெருவிலிருந்து மேற்கில் பயணம் செய்து மறைந்து போனார்கள். பெருங்-கற்சிலைகளைச் செதுக்குவதில் அவர்களுக்கு மிகுந்த அனு-பவம் இருந்தது. டிகியின் நீண்ட காதுடையோர் கிழக்குப் புறத்திலிருந்து ஈஸ்டர் தீவுக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்-களும் செதுக்கு வேலையில் தேர்ச்சி பெற்றிருந்தனர். அவர்கள் சிறிது சிறிதாக அக் கலையைக் கற்றுக்கொண்-டார்கள் என்பதற்குச் சான்றுகள் கிடையா. ஈஸ்டர் தீவில் காணப்படும் எல்லா உருவங்களும், மிகப் பழமையானவை கூட, கைதேர்ந்த சிற்பிகளின் கலைப்படைப்புக்களாய் உள்ளன. ஆகவே, பெருவிலிருந்து கிளம்பிய கோன்டிகி-யும், பாலினீசியாவில் தன் அரசாட்சியை நிறுவிய டிகியும் ஒரே மனிதனைக் குறிக்கும் என்று எண்ண இடம் உண்டு. பெருவில் உள்ள கற்சிலைகளுக்கும், சில தென்கடற் தீவு-களில் நிற்கும் ஒற்றைக்கல் உருவங்களுக்கும் அதிக ஒற்றுமை இருப்பதைக் காணலாம். தென்கடற் தீவுகளில் உள்ள கல்லுருவங்கள் யாவும் ஒரே மாதிரி அமைந்தவை அல்ல. ஒரு தீவில் காணப்படும் உருவங்களுக்கும் மற்றொரு தீவில் காணப்படுவனவற்றுக்கும் இடையே ஒற்றுமை மிகக் குறைவு. மார்க்கிஸா தீவுகளிலும் டாஹிடியிலும் இம் மாதிரிக் கல்லுருவங்களுக்கு டிகி என்றே ஒரு பொதுப்

பெயர் வழங்குகிறது. இத் தீவுகளின் வரலாற்றில் பெரு-மதிப்புப் பெற்று, இறந்தபின் தெய்வங்களாகப் போற்றப்-பட்ட தம் முன்னேரையே மக்கள் இக்கல்லுருவங்களில் உருவகப்படுத்தினர். ஈஸ்டர் தீவிலுள்ள கற்சிலைகளில் காணப்படும் சிவப்புக்கல் தலையணிகளுக்கு இதிலிருந்து சரியான விளக்கம் கிடைக்கிறது. சிவப்புத் தலைமயிரும், வெள்ளைத் தோலும் கொண்ட தனி மனிதர்களும், ஒரு சில குடும்பங்களும் பாலினீசியாவில் எல்லாத் தீவுகளிலும் சிதறிக் கிடந்தது பற்றி முன்னரே கூறினேம். இவர்கள் இத் தீவுகளில் முதன்முதல் இருந்த வெள்ளையரின் வழித்-தோன்றல்கள் என்று இத் தீவிலுள்ள மக்களே உறுதியாக நம்புகிறுர்கள். இன்றும் அங்கு நிகழும் சமயப் பெரு விழாக்-களில் பங்குகொள்வோர் (தம் முன்னேரைப் போல) மேல்-தோலுக்கு வெள்ளை நிறமும், தலைமயிருக்குச் சிவப்புநிறமும் ஏற்றிக்கொள்வர். வருடாந்திரச் சடங்குகளில் முக்கியப் பங்கு ஏற்பவனின் தலைமுழுதும் மழிக்கப்பட்டுச் சிவப்புச் சாயம் தடவப்படுகிறது. ஈஸ்டர் தீவின் பூதாகாரமான கற்சிலைகளின் தலையில் வைக்கப்பட்ட சிவப்புக்கல் தலை-யணிகள் ஆங்காங்குள்ள தலை சிங்காரப் பாணியில் செதுக்-கப்பட்டிருக்கின்றன. நம்முள் சிலர், பண்டை வழக்கப்படி, நடுத்தலையில் மயிரைச் சேர்த்து உச்சிமுடிச்சு போட்டுக் கொள்வதை அனைவரும் அறிவர். அதே போன்று சிலைகளின் தலையணிகளின் நடுவே கல்முடிச்சுக்கள் காணப்படுகின்-றன. இவ்வுருவங்களின் காதுகள் நீண்டுள்ளன. ஏனெனில், அவற்றைச் செதுக்கிய சிற்பிகளின் காதுகள் நீண்டிருந்-தன. மேலும், அச் சிற்பிகளின் தலைமயிர் சிவப்பாயும், தாடைகள் குவிந்தும், மூக்கு நீண்டும், உதடுகள் மெலிந்தும் இருந்தமையால் அப் பண்புகள் யாவும் அவர்கள் செதுக்கிய சிலைகளிலும் இடம் பெறலாயின.

ஈஸ்டர் தீவின் சிலைகளில் மனித உருவங்களுக்கு அலங்காரமாகச் செதுக்கப்பட்டிருப்பது இடுப்பைச் சுற்றிய கச்சை ஒன்றேயாம். இதே மாதிரியான இடுப்புக் கச்சையை, டிடிகாகா ஏரியின் அருகில் உள்ள, கோன்டிகியின் பாழ-டைந்த இருப்பிடத்தில் நிறுவப்பட்ட, ஒவ்வொரு சிலையிலும் காணலாம். புராணங்களில் சூரிய தேவனின் அடையாள-மாகக் கூறப்படும் வானவிற்கச்சை இதுவேயாம்.

நாங்கள் கட்டுமரத்தில் சென்றவழி பாலினீசியாவின் மையத்திற்கு எங்களைக் கொண்டு சேர்க்குமேயன்றி, ஈஸ்டர் தீவின் அருகில் செல்லும் வாய்ப்பே எங்களுக்கில்லை. ஈஸ்டர் தீவைப்பற்றி வரைப்படத்தில் கண்டதன்றி வேறு ஒன்றுமே நாங்கள் காணவில்லை. ஈஸ்டர் என்று இத் தீவுக்குப் பெயர் வரக் காரணம் யாது? யாரோ ஒரு டச்சுக்காரர் ஈஸ்டர் பண்டிகையன்று இத்தீவைக் கண்டுபிடித்தாராம். ஆகவே, அப்பெயர் இத் தீவுக்கு இடப்பட்டது. அதற்கு, முன்பாக இத்தீவில் குடி புகுந்த மக்கள் தங்கள் வீட்டுக்கு முக்கியமான செய்திகளை விளக்கக்கூடிய காரணப் பெயர்களை வைத்திருந்தனர் என்பதை நாம் மறந்துவிட்டோம். பாலினீசியாவில் இத்தீவுக்கு மூன்று பெயர்கள் வழங்கின. முதற்பெயர் [1] டெ-பிடோ-டெ-ஹெனுவா என்பது. இதன் பொருள் தீவுகளின் தொப்புள் என்பது. கவித்துவம் செறிந்த இப்பெயரால், மேற்கில் உள்ள மற்ற தீவுகளைவிடச் சிறப்பானது ஈஸ்டர் என்பது தெளிவாகிறது. இப் பெயர் மிகப் பழமையானதென்று பாலினீசியர்களே கூறுகிறார்கள். இத்தீவின் கிழக்குக் கரையில் பெருஞ் செவியர்கள் வந்திறங்கியதாகக் கூறப்படும் இடத்தில், கவனமாகச் செதுக்கப்பட்டுள்ள ஒரு கற்பந்து இருக்கிறது. பொன் தொப்புள் என்று அழைக்கப்படும் இது ஈஸ்டர் தீவுக்கே ஒரு தொப்புளாகக் கருதப்படுகிறது. இத் தீவுகளின் கூட்டத்துக்கே ஈஸ்டர் தான் பிறப்புக் குறியாகக் கருதப்பட்டது. தாய்க்கும் சேய்க்கும் தொப்புள் ஒரு தொடர்பு ஏற்படுத்துவதுபோல, இத் தீவுதான் பண்டைத் தாய்நாட்டுடன் இப் பகுதிக்கிருந்த தொடர்பு.

ஈஸ்டர் தீவின் இரண்டாவது பெயர் [2] ராபா நுய் அல்லது பெரிய ராபா என்பது. [3]ராபா இடி அல்லது சிறிய ராபா என்பது ஏறக்குறைய இதே பரப்புள்ள மற்றொரு தீவு. ஈஸ்டர் தீவுக்கு மேற்கே வெகு தொலைவில் உள்ளது. இத்தீவில் உள்ளவர்கள் தம் முதல் இருப்பிடத்துக்குப் பெரிய ராபா என்றும், அடுத்ததற்குச் சிறிய ராபா என்றும் பெயரிடுகிறார்கள். இரு தீவுகளும் ஒரே பரப்புள்ளவை. எனினும், இவ்வாறு அழைப்பதே பண்டு முதல் வந்த வழக்கம். சிறிய ராபாவில் இருப்பவர்கள் தம் பழஞ் சரித்திரத்தைச் சிறிதும்

1. Te-Pito-te-Henua 2. Rapa-nui 3. Rapa-iti.

பிசகின்றி நினைவில் வைத்துக்கொண்டுள்ளனர். அவர்களுடைய தீவில் முதன் முதல் குடியேறியவர்கள் கிழக்கிலிருந்து தான் வந்தனர் என்று அவர்கள் கருதுகிறார்கள்.

ஈஸ்டர் தீவின் மூன்றாவது பெயர் [1] மாடா-கிடெ-ரானி என்பது. சுவர்க்கத்தை நோக்கும் விழி என்பது அதன் பொருள். சமுத்திர மட்டத்திலிருந்து அதிக உயரம் இல்லாதது ஈஸ்டர் தீவு. மற்ற தீவுகளைவிட எவ்வகையிலும் சிறப்பாக இது வானளாவி நிற்பதல்ல. டாஹிடி, மார்க்கிஸா, ஹவாய் போன்ற எத்தனையோ உயரமான மலைகள் கொண்ட தீவுகள் உள்ளன. ஆயினும், ரானி, சுவர்க்கம் என்பதற்கு பாலினீசியாவில் இரு பொருள்கள் உண்டு. ரானி என்பது அவருடைய மூதாதையர்கள் இருந்த பழைய நாட்டைக் குறிக்கும் பெயராகும். அதுதான் சூரிய தேவனின் புண்ணிய பூமி. டிகியினால் விடப்பட்டுவந்த மலைநாடு. தம்முடைய புண்ணியபூமிக்கு வெகு அருகாமையில் இருப்பதால் ஈஸ்டர் தீவைச் சுவர்க்கத்துக்கு நோக்கும் விழி என்ற சிறப்புப் பெயரிட்டு அவர்கள் அழைத்தனர். பெருவின் பசிபிக் கடற்கரையில் ஈஸ்டர் தீவுக்குச் சரியாக அமைந்த இடத்தின் பெயரும் மாடா-ரானி அல்லது சுவர்க்கத்தின் விழி என்பதாகும்.

விண்மீன்கள் பூத்த விதானத்தின்கீழ் எங்களுடைய மூங்கில் தளத்தின்மீது அமர்ந்து நாங்கள் பேசியபோதெல்லாம், ஈஸ்டர் தீவைப்பற்றிய செய்திகளே ஆராயப்பட்டன. சரித்திர காலத்துக்கு முற்பட்ட ஒரு பெருஞ் செயலில் நாங்களே பங்குகொண்டது போன்ற உணர்ச்சி எங்களுக்கு ஏற்பட்டது. கடலலைகளிடம் எங்களுக்கிருந்த பயமும் மதிப்பும் நாளடைவில் குறைந்துபோயின. ஏனெனில், அவற்றோடு நெருங்கிய தொடர்புகொண்டு, அவற்றின் இரகசியங்கள் அனைத்தையும் நாங்கள் அறிந்துவிட்டோம். சுறுமீன்கள் நாள்தோறும் எங்களை வந்து காணும். அவை எங்களுக்கு உற்ற நண்பர்களாய் விட்டன. ஆகவே, கட்டுமரத்தின் அருகில் அவை வந்தாலும் நாங்கள் கை ஈட்டியைப்பற்றி நினைக்கவே மாட்டோம். பயந்து தூரச் செல்லவும் மாட்டோம். அதற்கு மாறாக, கட்டைகளுக்-

1. Mata-Kite-Rani

கருகில் சுறுமீன் வரும்போது அதன் முதுகுச் சிறகைப்-பற்றி இழுக்கலாம் என்று தோன்றும். இது முடிவில் ஒரு விளையாட்டாக மாறிற்று. தூண்டில் இன்றியே சுறுவை இழுத்துவிடும் விளையாட்டில் நாங்கள் உற்சாகத்தோடு ஈடுபட்டோம்.

எங்களுக்கு நிரம்ப டால்பின்கள் கிடைத்தன. தேவைக்கும் அதிகமாக உணவு கிடைத்துவிட்டபடியால், ஏதேனும் ஒரு விளையாட்டில் ஈடுபட உள்ளம் விரும்பியது. ஆகவே, தூண்டில் இன்றி மீன்பிடிக்கத் தொடங்கினோம். உபயோகமற்ற பறக்கும் மீன் ஒன்றை ஒரு கயிற்றில் கட்டி நீர்மட்டத்தின் மேலாக அசைத்தோம். ஒரு டால்பின் உடனே பாய்ந்து எழுந்து அம் மீனை விழுங்கிவிட்டது. பிறகு நாங்கள் ஒரு நுனியிலும், டால்பின் மற்றொரு நுனியிலு-மாகக் கயிற்றைப்பிடித்து இழுக்கத் தொடங்கினோம். இது சிறந்த சர்க்கஸ் வேடிக்கையைப் போலிருந்தது. ஒரு டால்பின் விட்டுவிட்டுப் போனால் மற்றொன்று அதன் இடத்-துக்கு வந்துவிடும். எங்களுக்கு இதனால் சந்தோஷமாகப் பொழுதுபோயிற்று. கடைசியில் டால்பினுக்கும் அந்த மீன் கிடைத்தது. பிறகு இதே விளையாட்டைச் சுறுக்-களுடன் ஆட ஆரம்பித்தோம். ஒரு கயிற்றின் நுனியில் ஒரு மீன் துண்டையோ, மிஞ்சிப்போன சாப்பாட்டு வகை-களையோ கட்டி வைத்தோம். கடலில் இதைப் போட்டதும், தலைகீழாகத் திரும்பிக் கொள்வதற்குப் பதில் சுறுமீன் தன் முகத்தை நீர்மட்டத்துக்குமேல் நீட்டி, உணவை விழுங்கு-வதற்காகத் தாடைகளை அகலத் திறந்தது. சுறு தன் வாயை மூடிக்கொள்ளும் சமயத்தில், கயிற்றைப் பிடித்-திழுத்து, அதன் ஆகாரத்தைப் பிடுங்கிக் கொண்டோம். ஏமாற்றம் அடைந்த சுறு, மடத்தனம் முகத்தில் விளங்க, பொறுமையுடன் நீந்தி வந்து உணவைப் பற்றிக்கொள்ளும் நோக்கத்துடன் மறுபடியும் வாயைத் திறந்தது. ஒவ்வொரு தடவை அது விழுங்க முயற்சித்தபோதும், இரை அதன் வாய்க்கு வெளியில் சட்டென்று எழும்பித் தப்பியது. இவ்வேடிக்கையின் முடிவில் சுறுமீன் கட்டைக்கு அருகில் வந்து, உணவைப் பிச்சை கேட்பதுபோலக் காத்து நிற்கும்.

பயணம் தொடங்கி மூன்று மாதங்கள் ஆனபின், ஜூலை மாதக் கடைசியில் ஒருநாள் குறிப்பேட்டில் பின்வரு-

மாறு எழுதப்பட்டிருந்தது:—எங்களைத் தொடர்ந்துவந்த சுருமீனுடன் நாங்கள் நட்பு கொண்டோம். காலையில் நாங்கள் உண்ணும்போது அது எங்களருகில் வந்து வாய் திறந்து நிற்கும். உணவுத் துண்டுகளை நேரே அதன் வாயில் இடுவோம். நன்கு பழகிய நாய்போல் அது எங்க-ளுடன் பழகும். நாள் முழுவதும் எங்களைச்சுற்றி நீந்திக்-கொண்டிருக்கும். ஒருநாள் ஒரு மூங்கிற் கழியின் நுனியில் இரையைக்கட்டி, கட்டுமரத்தின் விளிம்பில் தயாராக வைத்திருந்தோம். ஒரு பேரலை வந்து அதைக் கடலுக்குள் அடித்துச் சென்றது; கட்டுமரத்திற்குப்பின் சுமார் 600 அடி தூரத்துக்கு மெல்ல நகர்ந்து சென்றது. பின் திடீரென்று அது நீரில் செங்குத்தாகத் திரும்பிக்கொண்டு வேகமாகக் கட்டுமரத்தை நோக்கி வந்தது. கடலில் விழுந்த இரை தானாகவே நகர்ந்து வருவதைக்கண்டு வியப்-புற்றவர்களாய், மீன்பிடிக்கும் மூங்கிற் கழியை நீரில் விட்டோம். இரைக்கு அடியில் பத்தடி நீளமுள்ள ஒரு சுரு நீந்திவருவதைக் கண்டோம். மூங்கில் அலைகளுக்கு மேல் நீட்டிக் கொண்டிருந்தது. இரையை மூங்கிலோடு பிணைத்-துக் கட்டியிருந்த கயிறு அறுபடாமலேயே, ஆகாரப்-பையைச் சுரு விழுங்கிவிட்டது. மூங்கில் விரைவில் எங்களை முந்திக்கொண்டு தொலைவிற் சென்று மறைந்தது.

நாளடைவில் சுருமீனுடன் நெருங்கிப்பழகி மகிழ்ந்-தோம். ஆயினும், அதனுடைய அகன்ற தாடைகளும், அவற்றுள் பதுங்கி இருந்த கத்தியைப்போல் கூர்மையான ஐந்தாறு வரிசைப் பற்களும் எப்போதும் எங்கள் நினைவில் அச்சம் விளைத்தன. கட்டுமரம் நில்லாமல் நகர்ந்து கொண்டே இருந்தாலும், கடல் நீரில் சுருக்கள் மிகுந்திருந்-தாலும், கட்டுமரத்திலிருந்து வெகுதூரம் நீந்திச் செல்ல எவருமே அனுமதிக்கப்படவில்லை. ஒருநாள் கடல் அமைதி-யாய் இருந்தது. சுற்றிவந்த சுருமீன்களைத் தூண்டிலிற் சிக்கவைத்துக் கட்டுமரத்தின்மீது இழுத்து விட்டோம். ஆகவே கடலில் ஒரு முழுக்குப் போட நாங்கள் அனுமதிக்கப் பட்டோம். நுட் நீரில் குதித்து மூழ்கினான். வெகுநேரம் கழித்து நீர்மட்டத்துக்கு வந்து, எங்களை நோக்கி நீந்தி வந்தான். நாங்கள் பாய்த்தூணிலிருந்து அவனையே பார்த்துக் கொண்டிருந்தோம். அவனுக்குக் கீழே பெரிய-

தோர் உருவம் ஒன்று தொடர்ந்து வந்துகொண்டிருந்த-தாகத் தெரிந்தது. உரக்கக் கூவினல் பயம் தோன்றலாம் என்றெண்ணி, எங்கள் உணர்ச்சியை அடக்கிக்கொண்டு, நுட்டை மெல்ல எச்சரித்தோம். நுட் கடுவேகமாகக் கட்டுமரத்தை நோக்கி நீந்தி வந்தான். ஆனல், அவனுக்-குப்பின் தெரிந்த நிழலுருவம் அவனைவிட வேகமாக நீந்திற்று. ஆகவே, அதற்கும் நுட்டுக்கும் இடையிலிருந்த தூரம் வரவரக் குறைந்துகொண்டே வந்தது. இறுதியில் அவ்விருவரும் ஒருங்கே கட்டுமரத்திற்கு வந்து சேர்ந்தனர். நுட் கட்டுமரத்தின்மீது ஏறிக் கொண்டான். ஆறடிச் சுரு-மீன் ஒன்று அவனடியில் வந்து கட்டுமரத்தருகில் நின்றது. நுட்டை விழுங்காமல் விட்டதற்காக அதற்கு நன்றி செலுத்-தும் முறையில் ஒரு நல்ல டால்பின் தலையை இரையாகப் போட்டோம்.

சுரு மீனுக்குத் தீனியாசை மேலிடுவது, உணவுப் பொருள்களை அது காண்பதால் அன்று; உணவை முகர்-வதாலே யாகும். இதைக் கீழ்க் காணும் முறையில் நாங்கள் சோதித்துப் பார்த்தோம். தளத்தின் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டு, கால்களை நீரில் விட்டு அசைத்துக் கொண்-டிருப்போம். சுருக்கள் விரைந்து வரும். கால்களுக்கு இரண்டு அல்லது மூன்று அடி தூரம் வரை நீந்தி வந்த பின்னும், அமைதியாகத் திரும்பிப் போய் விடும். ஆனல், ஒரு மீன் துண்டை நீரில் அமிழ்த்திஞல், சிறிதளவு இரத்தம் நீரில் கலக்கும். இரத்தம் கலந்த நீரில் நீந்தும்போது சுருவுக்கு ஒரு புத்துணர்ச்சி ஏற்படுகிறதுபோலும்! எங்கோ தொலேவில் இருந்த சுருக்களெல்லாம் திடீரென்று ஈ மொய்ப்பதுபோல் வந்து சூழ்ந்து கொள்ளும். சுருக்களின் குடல் பாகங்களை நாங்கள் நீரில் எறிந்தபோது, கூட்டங்-கூட்டமாகச் சுருக்கள் வந்துசேர்ந்தன. குருட்டு வெறியுடன் அவை இங்கும் அங்கும் பாய்ந்தன. தம்மினமாயிற்றே என்ற இரக்கம் சிறிதுமின்றி கிடைத்த குடல் பாகங்களைக் காட்டு மிராண்டித்தனமாக விழுங்கின. சுருமீன்களுடன் நாங்கள் கொண்ட தொடர்பின் கடைசிக் கட்டத்தில் அவற்றின் வால்களைப் பிடித்து இழுக்கத் தொடங்கினேம். எங்களுக்குத் தெரிந்த மட்டும், சுருவின் வாலே யாரும் பிடித்திழுத்தது கிடையாது. உண்மையில் இது மிகவும்

அபாயகரமான விளையாட்டு. ஒரு சுருவின் வாலைப் பிடித்துக் கொள்வதற்காக முதலில் அதற்கு நல்ல இரையைத் தரவேண்டியிருந்தது. இரையைப் பிடித்துக் கொள்ளும் பொருட்டு சுரு நீருக்கு வெளியே வந்து, தன் தலையை உயர நீட்டும். சாதாரணமாக அதற்குரிய ஆகாரத்தை ஒரு பையில் வைத்து, அப் பையையே அதன் வாயில் கொடுக்க வேண்டும். ஏனெனில், கையில் வைத்தபடியே ஆகாரத்தைத் தருவது அபாயகரமானது. வேடிக்கையாகவும் இருக்காது. நாய்களுக்கோ, பழக்கிய கரடிகளுக்கோ ஆகாரத்தை நம் கையில் வைத்தபடியே கொடுக்கலாம். ஆனால், சுரு மீனின் கதை வேறு. தகுந்த தூரத்தில் பாதுகாப்பாக நின்று கொண்டு, ஒரு பெரிய டால்பினை அதற்கு நாம் தர முயற்சித்தால், அது நீந்திக் கொண்டே வந்து திறந்த தாடைகளைக் 'கப்' பென்று மூடிக் கொள்ளும். கையில் பிடித்திருந்த மீன் இழுபட்டதே தெரியாது. பாதி மீன் காணமற் போயிருக்கும். நம் கையில் மீனின் வால் மட்டும் எஞ்சியிருக்கும். ஒரு டால்பினைக் கத்திகளைக் கொண்டு அறுத்தெடுப்பது எங்களுக்கு வெகு கடினமாய் இருந்தது. ஆனால், இமை கொட்டும் நேரத்தில் சுரு மீன், தன் முக்கோண வடிவமான அரம் போன்ற பற்களை அசைத்து டால்பின் முதுகெலும்பு உள்பட எல்லாவற்றையும் அறுத்து விடுகிறது. சுருங்கச் சொன்னால் அதன் வாய் ஒரு பெரிய இயந்திரத்தைப் போல் இயங்குகிறது.

இரையைப் பிடித்துக் கொள்வதற்காக நீருக்கு மேலே வந்த சுரு மீன் திரும்ப நீரில் மூழ்க முயற்சி செய்தபோது, அதன் வால் நீருக்குமேல் தெரிந்தது. சுருவின் மேல்தோல் மணற் காகிதம் போல் இருக்கிறது. பிடியில் அகப்படுவதற்கென்றே ஏற்பட்டது போன்ற ஒரு வளைவு வாலின் மேற்பகுதியில் இருக்கிறது. அந்த வளைவில் சரியானபடி பிடித்துக் கொண்டோமானால், அதன் பின்னர் பிடி நழுவுவதற்கு இடமில்லை. பிடித்துக் கொண்டதும் அதை ஒரு முறை குலுக்கி, வாலைக் கட்டைகளுக்குமேல் இழுத்து விட்டோம். ஓரிரண்டு விநாடிகளுக்குச் சுரு ஒன்றையும் புரிந்து கொள்ளவில்லை. அதன் பிறகு நெளிந்து திமிர ஆரம்பித்தது. அத்தகைய நிலையில் அது தன்னுடலில்

முன் பாகத்தைச் சிறிதளவே அசைக்கும். வாலின் உதவி-யின்றி அதனுல் வேகமாக நீந்த முடியாது. நீரில் புரண்டு விடாமல் அதன் நிலேயை நிறுத்திக் கொள்வதற்கும், திசை மாற்றிக் கொள்வதற்கும் மட்டுமே மற்றச் சிறகுகள் உதவு-கின்றன. வால் சிறகு ஒன்றே வேகமாய் நகர உதவுவது. சிற்சில போது சுரு உலுக்கி இழுத்துப் பார்க்கும். அப்போதும் வாலே விடாமல் இறுகப் பற்றிக் கொண்டிருந்-தால், சுரு வியப்பு அடையும், தைரியம் இழக்கும், செய-லற்றுப் போகும். தளர்வாக இருக்கும் சுருவின் குடற்பாகம் மெல்ல அதன் தலேயை நோக்கி சரியும். அப்போது சுரு அநேகமாக மூர்ச்சை அடையும். இவ்வாறு சுரு ஒடுங்கிப் போய் விறைப்பாய் தொங்கிக் கொண்டிருக்கும்போதுதான், நாங்கள் அதை முழுப் பலத்துடன் இழுத்துத் தளத்தின் மீது ஏற்றுவோம். ஆனுல், பாதி வழி இழுப்பதற்குள்ளா-கவே அது விழித்துக் கொண்டு மற்ற வேலேகளேத் தானே செய்து விடும். வெகு வேகமாகத் தலேயைக் குலுக்கிப் போட்டுக் கட்டைகளுக்கு மேல் வந்து விடும். நன்ருக இழுத்து விட்டுத் தூரச் சென்றுவிட வேண்டும். இல்லா-விடின், கால்களுக்கு ஆபத்து நேரிடும். நெளிந்து கொண்டு வாலால் அடித்து வெகு உயரம் எழும்பி விடும். மூங்கிற்-குடிசையின் சுவர்களே அது வாலால் அடித்தால் ஒரு பெரிய சுத்தியில் கொண்டு தாக்கப்பட்டதுபோல் குடிசை அசை-யும். இரும்புத் தசைகளில் தேங்கி நிற்கும் முழு சக்தியும் இப்போது நன்ருகத் தெரியும். பெரிய தாடைகள் அகல-மாய்த் திறந்து வாய்க்கு அகப்பட்டதைக் கடிக்க முயற்சி செய்யும். இவ்வாறெல்லாம் செய்தபின் சுரு மீன் தானுகவே கடலுக்குள் துள்ளி விழுந்து பெரும் அவமானத்துடன் ஓடிப்போவதும் உண்டு. ஆயினும், அவ்வாறு ஓடிப்போகா-மல் கட்டுமரத்தின் பின்புறத்தில் மீண்டும் மீண்டும் துள்ளிக் கொண்டிருப்பதையும் நாங்கள் பலமுறை பார்த்திருக்கிருேம். கடைசியில், அது தன் வாலே அடித்-துக் கொள்ளாதபடி கயிற்றுச் சுருக்கினுல் கட்டி விடுவோம். அதன் வேகம் குறைந்து போகும். சுருவும் செயலற்ற நிலேயை அடைந்து விடும்.

இவ்வாறு சுருமீனேப் பிடித்து மூங்கிற் தளத்தின் மீது இழுத்துப் போட்ட போதெல்லாம், எங்களுடன் இருந்த கிளி

யின் உற்சாகம் எல்லை மீறி விடும். மூங்கிற் குடிசையை விட்டு அது வெகு விரைவாக வெளியே வந்து சுவரின்மேல் ஏறிக்கொள்ளும். கூரையில் பாதுகாப்பான ஓர் இடத்தில் உட்கார்ந்து கொண்டு, எட்டிப் பார்த்துத் தலையைத் திருப்பித் திருப்பி ஆட்டும் அல்லது பரபரப்புடன் கூச்ச-லிட்டுக் கொண்டே கூரை விளிம்பில் இங்கும் அங்குமாக ஓடிக்கொண்டிருக்கும். எங்களில் ஒரு ஆளாகவே அதை நாங்கள் கருதினோம். ஆகவே, கட்டுமரத்தின் மீதிருந்தோர் எழுவர் என்றே எப்போதும் கணக்கிட்டோம். ஜொஹென்-னிஸ் என்னும் நண்டும் எங்களுடன் இருந்தது. ஆயினும், எங்களுடன் வந்து ஒட்டிக் கொண்ட ஒரு குளிர் இரத்தப் பிராணிதானே! அதை எங்களில் ஒருவராகக் கணக்கிட-வில்லை. இரவு நேரத்தில் குடிசையின் கூரையில் இருந்த தன் கூண்டுக்குள் கிளி சென்று விடும். பகற் பொழுதில் தன்னிச்சைப் போல் மூங்கில் தளத்தின் மேல் பெருமித-மாக நடை போட்டுக் கொண்டிருக்கும். கயிறுகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டு வேடிக்கையான சர்க்கஸ் வேலைகளெல்லாம் செய்து காட்டும். பாய்மரத்தைக் கட்டி-யிருந்த கயிறுகள் வெய்யில், மழை, காற்று ஆகியவற்றின் விளைவாகத் தளர்ந்து போகும். ஆகவே, அவ்வப்போது அக் கயிறுகளை இழுத்துக் கட்டவேண்டியிருக்கும். அவ்-வாறு நாங்கள் சிரமப்பட்டு வேலை செய்து கொண்டிருக்கும் போது, கிளி தன் கரகரத்த குரலில் "இழுடா, இழுடா, ஹோ, ஹோ, ஹோ, ஹா, ஹா" என்று கத்த ஆரம்பிக்-கும். கடினமான வேலை செய்யும் எங்களுக்குச் சிரமம் தெரியாது, வயிறு குலுங்கச் சிரிப்போம். கிளியும் கூடச் சிரிக்கும்.

கிளி எங்களுக்குத் தொல்லை கொடுத்ததும் உண்டு. குறிப்பாக, வயர்லெஸ் செயலாளருக்கு அதனால் தொல்லை ஏற்படும். அவர்கள் கேட்கும் கருவிகளைக் காதில் மாட்டிக் கொண்டு தொலைவில் உள்ள நண்பர்களுடன் பேசிக்-கொண்டிருப்பார்கள். திடீரென்று கேட்கும் ஒலி நின்று-விடும். கம்பிகளை எவ்வளவு தூரம் மாற்றிப் பார்த்தாலும் அல்லது திருகும் குமிழ்களைத் திருப்பினாலும் சத்தம் சிறிதும் கேட்காது. பிறகு உண்மை தெரியவரும். அலைக் கம்பியைக் கிளி கத்தரித்து விட்ட செய்தியை யாரேனும் தருவர். முதல்

சில நாட்களுக்கு ஒரு பலூனில் அலைக் கம்பியைக் கட்டி உபயோகித்தோம். அப்போதெல்லாம் இந்தக் கத்திரிப்பு வேலை கிளிக்கு மிகவும் பிடித்தமான விளையாட்டாக இருந்தது. பிறகு திடீரென்று ஒரு நாள் கிளிக்கு உடல் நலமில்லை. பேசாமல் கூண்டில் உட்கார்ந்துகொண்டிருந்தது. உணவே உட்கொள்ளவில்லை. அதன் எச்சம் அலைக் கம்பியின் தூளோடு சேர்ந்து பளபளத்தது. பிறகு வயர்லெஸ் செயலாளருக்கு இரக்கம் மேலிட்டது. "கிளியைப் பல முறை கோபித்துக் கொண்டோமே, இன்று அது உடல் நலக் குறைவால் வருந்துகின்றதே," என்று எண்ணி எண்ணி வருந்தினர். கிளியும் தான் செய்து வந்த தவற்றை நினைத்து வருந்தித் திருந்திவிட்டது. அன்று முதல் நுட், டார்ஸ்டைன் ஆகிய இருவரும் கிளியின் அருமை நண்பர்கள் ஆயினர். அக் கிளியும் வயர்லெஸ் மூலையிலேயே தூங்கத் தீர்மானித்தது. கட்டு மரத்துக்கு வந்து சேரும்போது கிளி ஸ்பானிய மொழி பேசிக்கொண்டிருந்தது. ஆனால், எங்களுடைய உறவால், அது ஸ்பானிய மொழியை நார்வீஜிய பாணியில் பேசவும் பிறகு கலப்பற்ற நார்வீஜிய மொழியைப் பேசவும் கற்றுக் கொண்டது. நாளடைவில் டார்ஸ்டைனுக்குப் பிடித்தமான வசை மொழிகளையெல்லாம் அது சொல்லத் தொடங்கியது. இரு மாதங்களுக்குக் கிளி செய்த வேடிக்கைகளையும் அதன் பளபளத்த நிறங்களையும் கண்டு இன்புற்றோம். பின் ஒரு நாள் பாய்க்கம்பத்துக் கயிற்றைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருந்தது கிளி. பின் புறமிருந்து வந்து ஒரு பேரலை அதை அடித்துச்சென்று விட்டது. கிளி கடலுக்குள் விழுந்து விட்டது என்னும் செய்தி எங்களுக்குத் தெரியவே வெகு நேரமாய் விட்டது. ஆகவே, அதை மீட்க ஒன்றும் செய்ய இயலவில்லை. கட்டு மரத்தை நிறுத்தவோ, திருப்பிக் கொண்டு விழுந்த பொருளை மீட்கச் செல்லவோ முடியாது. ஆகவே, அன்று மாலையும் இரவும் சொல்ல முடியாத துயரத்தில் ஆழ்ந்திருந்தோம். சுக்கான் பிடித்துக் கொண்டிருக்கும் ஒருவன் இரவு நேரத்தில் கடலில் விழுந்து விட்டால் அவனுக்கும் கிளிக்கு ஏற்பட்ட கதி தான் என்பதை நன்கு உணர்ந்தோம். எங்கள் பாதுகாப்புக்கான விதிகளை முன்னிலும் கடினமாக்கிக் கொண்டோம். இரவில் வேலை செய்பவனுக்காக, உயிர்தப்ப உதவும் புதிய கயிறுகளை அமைத்தோம். கவனக்

குறைவாக ஓர் அடி எடுத்து வைத்தாலும், மறதியாகச் சிறிது அசைந்தாலும் நாங்கள் பச்சைக் கிளி சென்ற வழியே செல்ல நேரிடும் என்ற பயம் எங்கள் மனத்தில் குடிகொண்டது.

நாங்கள் பயணம் தொடங்கியதிலிருந்து இரு வயர்லெஸ் கருவியாளருக்கும் வேலை அதிகமாய் இருந்தது. ஹம்போல்ட் நீரோட்டத்தில் புகுந்த முதல் நாளே பாட்டரிகளின்மீது கடல் நீர் வாரி இறைக்கப்பட்டுச் சொட்டிக் கொண்டிருந்தது. ஆகவே, அலைகள் மேலெழுந்து வரும்போது வயர்லெஸ் மூலையைத் தடித்த நீர் உட்புகாத துணியால் மூடவேண்டியிருந்தது. மேலும், நீண்டதோர் அலைக் கம்பியைக் கட்டு மரத்தில் பொருத்தவேண்டி நேரிட்டது. ஒரு காற்றாடியில் அலைக் கம்பியைக் கட்டி உயரத்துக்கு அனுப்ப முயற்சித்தனர். ஆனால், காற்று வேகமாய் வீசியபோது காற்றாடி கடலலையில் போய் விழுந்தது. பிறகு ஒரு பலூனில் அலைக் கம்பியைக் கட்டிவிட்டனர். ஆனால், கடும் வெய்யிலால் பலூனில் தொளைகள் ஏற்பட்டு அது சுருங்கிக் கொண்டு கடலில் விழுந்தது. இவை போதாவென்று கிளியும் அவர்களுக்குத் தொல்லை கொடுத்தது. இவை யாவற்றிலும் மிக்க சிரமம் ஒன்று இருந்தது. ஹம்போல்ட் நீரோட்டத்தில் 15 நாட்கள் பயணம் செய்த பின்னரே ஆண்டிஸ் மலையின் அமைதியான பகுதியை நாங்கள் தாண்ட முடிந்தது. காலி சோப்புப் பெட்டியில் இருக்கும் காற்றுப்போல் இவ்வமைதியான பகுதியில் சிற்றலைகள் செயலிழந்து அமைதியாய் இருந்தன. ஆயினும், பின் ஒரு நாள் இரவில் எங்கள் அலை நிலையத்தின் சிற்றலைகள் எல்லா எதிர்ப்புக்களையும் சமாளித்து வெற்றி பெற்றன. டார்ஸ்டைன் அனுப்பிய அழைப்பொலி [1] லாஸ் ஏஞ்சலீஸில் இருந்தவருக்கு எட்டியது. ஸ்வீடனில் இருந்த ஒரு நண்பருடன் தொடர்பு கொள்ள முயன்று கொண்டிருந்தார் அந்த லாஸ் ஏஞ்சலீஸ் மனிதர். ஆனால், தற்செயலாக நாங்கள் அனுப்பிய சிற்றலைகளைத் தன் வயர்லெஸ் கருவியில் பிடித்து விட்டார். எங்களிடம் எத்தகைய கருவி இருந்தது என்பதை அவர் கேட்டார்; பதில் அளித்தோம். “நீர் யார்? எங்கு வசிக்கிறீர்?” என்று டார்ஸ்டைனை வினவினர். “நான்

1. Los Angeles

வசிக்கும் இடம் பசிபிக்கின் நடுவில் ஒரு கட்டு மரத்தின் மீதுள்ள குடிசை" என்றான் டார்ஸ்டைன். உடனே வயர்லெஸ் கருவியில் சில வேடிக்கையான ஒலிகள் எழுந்தன. டார்ஸ்டைன் முழு விவரங்களையும் கொடுத்த பிறகு தான் அவர் நம்பினார். தனக்கு எழுந்த ஐயமும், வியப்பும் ஓரளவு தீரவே, அவர் தன்னைப் பற்றிச் சொன்னார். "என் பெயர் [1] ஹால். என் மனைவியின் பெயர் [2] ஆனே. அவள் பிறப்பினால் ஸ்வீடனைச் சேர்ந்தவள். ஆகையால், நீங்கள் உயிருடன் சுகமாக இருக்கும் செய்தியை உங்கள் உற்றார் உறவினருக்கு அவள் தெரிவித்து விடுவாள்," என்றார். லாஸ் ஏஞ்சலீஸ் பெரியதொரு பட்டினம். அங்கு வசிக்கும் இலட்சக்கணக்கான மக்களில் இவர் ஒருவரே எங்களைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டவர். இவர் எங்களுக்கு முன் பின் பழக்கமில்லாதவர்; புகைப்படத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர். அன்றுமுதல் இவரும், இவருடைய நண்பர் ஒருவரும் இரவுதோறும் மாறிமாறி எங்களுடைய வயர்லெஸ் செய்திகளைக் கேட்டு வந்தனர். ஹெர்மன் தயாரித்து அனுப்பிய கால நிலைப் புள்ளி விவரங்களுக்காக, அமெரிக்க ஐக்கிய நாட்டின் கால நிலைக் காரியாலயத்திலிருந்து நன்றி உரைகள் அனுப்பப்பட்டன. கடற்பரப்பில், புள்ளி விவரங்களே அதிகமில்லாத ஒரு பகுதியைப் பற்றிய இக் குறிப்புக்கள் முக்கியமானவை.

நாட்கள் செல்லச் செல்ல பல ரேடியோ அன்பர்கள் எங்களுக்கு நண்பர்கள் ஆயினர். இரவு தோறும் நுட், டார்ஸ்டைன் ஆகிய இருவரும் அவர்களுடன் கம்பியில்லாத் தொடர்பு கொள்ளுவர். அவர்கள் மூலமும் [3] எகில் பெர்க் என்ற அன்பர் மூலமாகவும் நார்வே தேசத்துக்கு எங்களுடைய செய்திகள் அனுப்பப்பட்டன. ஒரு முறை கடல் நீர் பொங்கி வந்து வயர்லெஸ் நிலையம் முழுதும் நீரில் ஆழ்ந்தது. ஆகவே, வேலை ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனால், அந் நிகழ்ச்சிக்குப்பின் நாங்கள் மிக்க எச்சரிக்கையுடன் இருந்தோம். வயர்லெஸ் கருவியாளர்கள் அடிக்கடித் தலைகீழாக நின்று பார்ப்பர். திருகு மரைகளையும் பற்றவைக்கும் கருவியையும் வைத்துக்கொண்டு, இரவும் பகலுமாய் வேலை செய்துகொண்டிருப்பர். இவ்வாறாகச்

1. Hal 2. Anna 3. Egil Berg.

சில நாட்கள் உழைத்து, வயர்லெஸ் நிலையத்தைப் பழைய நிலைக்குக் கொண்டு வந்தனர். அதற்குள் எங்கள் கட்டுமரம் கடலில் ஆழ்ந்துபோயிற்று என்று தொலைவில் இருந்த ரேடியோ அன்பர்கள் முடிவு செய்துவிட்டனர். முடிவில் ஒரு நாள் எங்கள் சிற்றலை அழைப்பொலி வானவெளியில் ஊடுருவிச் சென்றது. ஒரு கணத்தில் எங்கள் வயர்லெஸ் நிலையத்தில் ஒலி எழத் தொடங்கியது. குளவிக் கூட்டைப்போல் கரகரத்த ஒலிகள் பல காதிற்பட்டன. நூற்றுக் கணக்கான அமெரிக்க அன்பர்கள் எங்கள் அழைப்புக்குப் பதில் அனுப்பினர்.

மரக்கட்டைகளின் வழியே எப்போதும் கடல் நீர் உள்ளே வந்துகொண்டிருக்கும். ஆகவே, வயர்லெஸ் மூலை ஈரமாகவே இருக்கும். வயர்லெஸ் கருவியை உபயோகிப்போன் பால்ஸா கட்டையின்மீது போடப்பட்டிருந்த ஒரு ரப்பர் துண்டின்மீது அமர்ந்திருப்பான். ஆயினும், மார்ஸ் நாதியைத் தொடும்போது மின் அதிர்ச்சிகள் ஏற்பட்டன. எப்போதாவது வயர்லெஸ் மூலையிலிருந்த சேமிப்பிலிருந்து ஒரு பென்சிலை எடுக்க முயற்சித்தால், எங்கள் தலைமயிரெல்லாம் விறைப்பாக நிற்கும்; அல்லது பென்சிலிலிருந்து நீண்ட பொறிகள் பறக்கும். டார்ஸ்டைன், கிளி, நுட் இம்மூவர் மட்டுமே அம்மூலையில் கவலையின்றி நகர முடிந்தது. ஆகவே, எங்களுக்கு அது ஓர் அபாயப் பகுதியாகவே தோன்றிற்று. அட்டைகளைக் கொண்டு அதைச் சிறியதோர் அறைபோன்று தடுத்திருந்தோம்.

ஒரு நாள் இரவு வெகு நேரம் வரை விளக்கின் ஒளியில் வயர்லெஸ் மூலையில் ஏதோ செய்துகொண்டிருந்தான் நுட். திடீரென்று என்னை எழுப்பி, ஆஸ்லோவுக்கு அருகில் வசித்த [1] கிறிஸ்டியன் அமுன்ஸன் என்பானுடன் தான் பேசிக்கொண்டிருந்ததாகத் தெரிவித்தான். அது எப்படி முடியும் என்பது எனக்கு விளங்கவில்லை. எங்களிடம் இருந்த சிற்றலைக் கருவி விநாடிக்கு 13,990 கிலோ சைகில் அளவில்தான் அலைகளை அனுப்பமுடியும். ஆறு வாட் சக்திக்குமேல் அதனிடமிருந்து பெறமுடியாது. இவ்வளவு சக்தியை ஒரு சிறிய மின்சாரக் கைவிளக்கிலிருந்தே பெற-

1. Christian Amundsen.

லாம். அன்று ஆகஸ்டு மாதம் இரண்டாம் நாள். ஆஸ்லோ பூகோளத்தின் எதிர்பக்கத்தில் இருந்தது. ஆகவே, மிக்க தொலேவில் இருந்தது. அன்றைக்கு மறுநாள் ஆஸ்லோவில் இருந்த [1] ஹாகோன் அரசருக்கு 75 வயது முடிவடைந்தது. கட்டுமரத்திலிருந்து நேரே அவருக்கு எங்களுடைய வாழ்த்-துச் செய்திகளே அனுப்பினேம். அதற்கு மறுநாள்கிறிஸ்-டியன் அனுப்பிய செய்தி மறுபடியும் எங்களுக்குக் கேட்டது. பயணத்தில் தொடர்ச்சியாக அதிருஷ்டமும் முடிவில் வெற்றியும் நாங்கள் பெறவேண்டும் என்னும் நல்வாழ்த்தை ஹாகோன் அரசர் கிறிஸ்டியன் மூலம் எங்களுக்கு அனுப்-பினுர். அப்போது எங்களுடைய வாழ்க்கையில் மற்ருெரு எதிர்பாராத நிகழ்ச்சியும் நடந்தது. எங்களிடம் இரண்டு புகைப்படக் கருவிகள் இருந்தன. புகைப் படலங்களேக் கழுவுவதற்கான ரசாயனப் பொருள்களே எரிக் கொண்டு-வந்திருந்தான். சரியாக விழாத புகைப்படங்கள் எவை என்று கண்டுபிடித்து உடனே மறுபடி எடுத்துவிடலாம் என்பதற்-காகவே இந்த ஏற்பாடு. திமிங்கலச் சுருவின் வருகைக்குப் பிறகு எரிக்கால் பொறுமையாய் இருக்க முடியவில்லே. ஒரு நாள் மாலே சரியான அளவில் ரசாயனப் பொருள்களேயும் தண்ணீரையும் கலந்து இருபடங்களேக் கழுவிப் பார்த்தான். எதிர் மறைப் படங்கள் வெகுதூரத்திலிருந்து எடுக்கப்பட்-டவைபோல் மங்கலாய்த் தோன்றின. மங்கலான புள்ளி-களும், வளேவுகளும் தவிர வேருென்றும் சரியாகத் தெரிய வில்லே. புகைப்படம் பாழாகி இருந்தது. இதுபற்றி எங்க-ளுடைய வயர்லெஸ் அன்பர்களிடம் ஆலோசனே கேட்டோம். ஹாலிவுட்டில் இருந்த ஓர் அன்பர் எங்கள் செய்தியைப் பெற்று ஒரு புகைப்படப் பரிசோதனேச் சாலேக்கு அனுப்பினுர். சில நாட்களில் அங்கிருந்து பதில் கிடைத்தது. கழுவும் கருவியின் வெப்பநிலே அதிகம் என்றும், 60°-க்கு மேற்பட்ட வெப்பநிலேயில் கழுவுநீர் இருக்-கக்கூடாதென்றும், அவ்வாறு இல்லாததால், எதிர் மறைப் படத்தில் நெளிவுகளும், சுருக்கங்களும் விழுகின்றன என்-றும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. எங்கள் சூழ்நிலேயில் மிகக்குறைந்த வெப்பநிலே உடையது கடல்நீரோட்டம்தான். அதுவும் 80° வெப்பநிலேயில் இருந்தது. ஹெர்மன் ஒரு குளிர்ப்பொறி இயலாளன். ஆகவே, அவனிடம் சென்று

1. King Haakon.

நீரின் வெப்பநிலையை 60°க்குக் குறைக்க முடியுமா என்று வேடிக்கையாகக் கேட்டேன். காற்றடைத்த, ரப்பர்ப் படகிலிருந்த, ஒரு திரவம் நிறைந்த புட்டியை எடுத்துக்கொண்டான். ஒரு பாத்திரத்தில் நீரை ஊற்றி, அதன்மேல் தூங்கும் பையையும் கம்பளித் துணியையும் போர்த்து மூடினன். பிறகு சிறிது நேரம் ஏதோ மந்திரம் போட்டான். விரைவில் அவனுடைய தாடியில் பனித்துளிகள் தோன்றின. பாத்திரத்தில் ஒரு பெரும் பனிக்கட்டியை எடுத்துக் கொண்டு உள்ளே வந்தான். எரிக் இப்போது மீண்டும் புகைப் படங்களைக் கழுவியதில் சிறந்த பலன் கிடைத்தது.

சொல் வடிவங்களை வானவெளியில் கொண்டு செல்லும் மின்சிற்றலை எங்களுக்குக் கிடைத்த ஒரு பெரும் வசதியாகும். முற்காலத்தில் கோன்டிகிக்கு இவ்வசதி கிடையாது. ஆனல் எங்கள் கட்டுமரத்தைத் தாங்கிச் சென்ற கடல் அலைகளும், கடல் நீரோட்டமும் அக்காலத்தில் இருந்தவையே; இன்றுபோலவே அன்றும் இருந்திருக்கும். தென் கடற்தீவுகளுக்கு அருகில் நாங்கள் சென்றபோது காலநிலை அடிக்கடி ஒழுங்கற்றுப் போயிற்று. அடிக்கடிப் பெருங்காற்றுகள் வீசி மழையைக் கொணர்ந்தன. வியாபாரக் காற்றும் திசைமாறி விட்டது. இதுவரை அக்காற்று தென் கிழக்கிலிருந்து ஒரே சீராக வீசிக்கொண்டிருந்தது. சிறிது சிறிதாக மாறி இப்போது கீழ்த்திசையிலிருந்து வீசத்தொடங்கியது. ஜூன் மாதம் பத்தாம் நாளன்று நாங்கள் பயணப் பாதையின் வடக்கு எல்லையை அடைந்தோம். அன்று நாங்கள் இருந்தது 6°19′ அட்சரேகையில். பூமத்திய ரேகைக்கு மிகவும் அருகில் நாங்கள் சென்றுவிட்டபடியால், மார்க்கிஸா கூட்டத்தின் எல்லைத் தீவுகளுக்கும் வடக்காகவே சென்று, கரைகாணுமலேயே மீண்டும் பெருங்கடலுக்குள் புகுந்துவிடுவோமோ என்ற பயம் தோன்றிற்று. ஆனல், வியாபாரக் காற்று மேலும் திசைமாறிற்று. கிழக்கிலிருந்து அடித்த காற்று வடகிழக்கிலிருந்து அடிக்கத்தொடங்கி, வளைவான கோட்டில் எங்களைச் செலுத்தி, தீவுக்கூட்டம் இருந்த அட்ச ரேகைக்கே தள்ளிவிட்டது. தொடர்ந்தாற்போல பலநாட்கள் காற்றும் கடலும் ஒரேமாதிரியாக இருக்கும். அப்போது யார் எந்த நேரத்தில் சுக்கான் பிடிக்கவேண்டும் என்பதைக் கூட

நாங்கள் மறந்து விடுவோம். இரவில் யார் சுக்கான் பிடிக்க வேண்டும் என்பது மட்டும் ஞாபகம் இருக்கும். ஏனெனில் அவன் தனியே இருந்து இரவு நேரத்தைக் கழிக்கவேண்டும். காற்றும் கடல் நீரோட்டமும் திசைமாருமல் இருந்தால் அவனுக்கு அதிக வேலே இராது. அவனுதவி இல்லாமலே கோன்டிகியின் பாய்த்துணியில் எப்போதும் காற்று நிரம்பி-யிருக்கும். அவன் குடிசை வாயிலில் அமர்ந்து, வானத்-தைப் பார்த்துக் கொண்டிருந்தால் போதுமானது. விண்-மீன்களின் இடமாற்றத்தை மட்டும் அவன் பார்த்துக் கொண்டால், அதன் மூலம் காற்றின் திசை மாற்றமும், துடுப்புப் பலகையின் திருப்பமும் தெரிந்துவிடும்.

வாரக் கணக்கில் விண்மீன்களேப் பார்த்துப் பழகிய-தால், அவற்றின் உதவி கொண்டு கட்டுமரத்தைச் செலுத்துவது எளிதாயிற்று. இரவில் அவற்றைத் தவிரப் பார்க்கத்தான் என்ன இருக்கிறது? இரவுக்குப்பின் இரவாகப் பார்த்து அறிந்தபின் எந்தெந்த விண்மீன் கூட்-டங்கள் எங்கெங்கு தோன்றும் என்பது எங்களுக்குத் தெளிவாகி விட்டது. பூமத்திய ரேகைக்கு அருகில் நாங்-கள் வந்தபோது சப்தரிஷி மண்டலம் வடக்குத் தொடுவா-னில் இருந்தது. துருவ நட்சத்திரமும் கண்ணிற்படுமோ என்பதே எங்கள் கவலே. ஏனெனில், தெற்கிலிருந்து பயணம் செய்பவனுக்கு, பூமத்திய ரேகையைத் தாண்டிய பின் துருவ நட்சத்திரம் புலப்படும். ஆனுல், வட கிழக்கி-லிருந்து காற்று வீச ஆரம்பித்ததும் சப்தரிஷி மண்டலமும் அடிவானத்துடன் இறங்கி மறைந்தது. (மறைவது போல எங்களுக்குத் தோன்றியது.)

பண்டைக்காலத்தில் பாலினீசியர்கள் கடற்பயணம் செய்வதில் தேர்ச்சி பெற்றவர்களாய் இருந்தனர். பகலில் சூரியனேக் கொண்டும், இரவில் நட்சத்திரங்களேக் கொண்-டும் கடலில் தாம் இருந்த இடத்தை அவர்கள் கண்டறிந்-தார்கள். வானியலில் அவர்களுக்கு இருந்த அறிவு வியக்கத்தக்கது. பூமி உருண்டையானது என்பது அவர்-களுக்குத் தெரியும். பூமத்திய ரேகை, வட உஷ்ணப்பகுதி, தென் உஷ்ணப்பகுதி என்பது போன்ற கருத்துக்களுக்கு அவர்கள் தக்க சொற்களே வடித்திருந்தனர். பேசும்போது அச்சொற்களேக் கையாண்டனர். கடல்களுக்கான வரைப்-

படங்களை உருண்டையான சுரைக்காயின் மேற்புறத்தோலில் வரைந்து வைத்திருந்தார்கள் ஹவாய் தீவில் இருந்தவர்கள். வேறு சில தீவினர், கொம்புகளைப் பின்னலாகக் கட்டிய வரைப்படங்களை அமைத்திருந்தனர். தீவுகளைக் குறிக்க ஓடுகளையும், நீரோட்டங்களைக் குறிக்கக் குச்சிகளையும் உபயோகித்தனர். பாலினீசியருக்கு ஐந்து கிரகங்களைப் பற்றித் தெரியும். இவற்றை அலையும் விண்மீன்கள் என்று அவர்கள் குறிப்பிட்டனர். இவற்றுக்கும் நிலைத்த விண்மீன்களுக்கும் உள்ள வேற்றுமை அவர்களுக்கு நன்கு தெரியும். நிலைத்த விண்மீன்களில் ஏறக்குறைய இருநூற்றைக் குறிக்க அவர்கள் சொற்களைக் கண்டுபிடித்திருந்தனர். ஒவ்வொரு மீனும் விண்ணில் எப்பகுதியில், எப்போது தோன்றும் என்பதையும் அறிந்திருந்தனர். விடியும் நேரத்தில் எந்தெந்தத் தீவுக்கு நேர் மேலே எந்தெந்த மீன்கள் மறையும் என்பதும் அவர்கள் அறிந்திருந்ததே. தொடர்ந்து பல்லாண்டுகளாக, ஒரு தீவுக்கு நேர் மேலே ஒரு மீன் மறையுமானால், அதன் பெயரை அத்தீவுக்கு இட்டு வழங்கினர். வான வெளியை ஒரு பெரும் திசையறி கருவியாகக் கொண்டதுமன்றி, மீன்களின் உதவியைக் கொண்டு தாம் நகர்ந்த தூரத்தையும் அவர்கள் கணக்கிட்டனர். பாலினீசியர் அமெரிக்காவை அடுத்த கடற்பரப்பு முழுவதையும் ஆராய்ந்து இத்தீவுகளைத் தம் ஆட்சிக்குள் கொணர்ந்தபின், இவற்றின் இடையே கடற்போக்குவரவு ஏற்பட்டது. பல்லாயிரக் கணக்கான மைல்கள் கடந்து வந்து ஹவாயை அடைந்த பல மக்கட்கூட்டத்தினரைப் பற்றி வரலாறு கூறுகிறது.

இவ்வாறு வியக்கத்தக்க முறையில் பஞ்சாங்கங்களைக் கணக்கிடும் ஆற்றலும், வானியற் தேர்ச்சியும் பாலினீசியருக்கு எங்ஙனம் கிடைத்தன? மேற்கில் இருக்கும் [1] மெலானேசியர் இடமிருந்தும், மலேயா மக்களிடமிருந்தும் கிடைத்திருக்க முடியாது என்பது உறுதி. ஆனால், அமெரிக்காவில் அஸ்டெக்குகள், மாயாக்கள், இங்காக்கள் ஆகியோருக்குத் தம் பண்பாட்டைத் தந்து மறைந்து போன, தாடி உடைய, நாகரீக முதிர்ச்சி அடைந்த, வெள்ளையினத்தார் இதே போன்ற பஞ்சாங்கத்தை

1 Melanesian

வகுத்திருந்தனர். வானியலிலும் அவர்கள் மிக்க தேர்ச்சி பெற்றிருந்தனர். அக்காலத்தில் அவர்களை நிகர்க்கும் தேர்ச்சி ஐரோப்பியருக்கும் இருக்கவில்லை. பெருவிலும், பாலினீசியாவிலும், வருட ஆரம்பத்தைப் பஞ்சாங்கத்தில் குறிப்பிடும் வகை ஒரே மாதிரியாய் இருந்தது. கார்த்திகை நட்சத்திரங்கள் (முதன் முதலில்) தொடு வானத்திலிருந்து மேலே கிளம்பும் நாளில் ஆண்டு ஆரம்பித்தது. அந் நட்சத்திரங்களை உழவுத் தொழிலுடன் தொடர்பு உடையனவாகக் கருதிப் போற்றும் வழக்கம் இரு நாட்டினரிடையிலும் இருந்து வந்தது. பெருவில், நிலப்பரப்பு பசிபிக்கை நோக்கிச் சரிவாக அமைந்திருக்கும் இடத்தில், வறண்ட பாலை நிலத்தில், பண்டைக்காலத்து வானியல் ஆராய்ச்சிக் கூடத்தின் பாழடைந்த பகுதிகள் இன்றும் காட்சி அளிக்கின்றன. அதே பண்டைக் காலத்து மனிதர்கள் பெரும் கல்லுருவங்களைச் செதுக்கியதுடன் பட்டைக் கோபுரங்களையும் அமைத்திருந்தனர். வள்ளிக்கிழங்கையும் சுரையையும் பயிரிட்டவர்களும் அவர்களே. பசிபிக் கடலில் பயணத்தை மேற்கொண்ட கோன்டிகிக்கு நட்சத்திர சஞ்சாரங்கள் யாவும் தெரியும்.

ஜூலை இரண்டாம் நாள். இரவு சுக்கான் பிடிப்பவன் வானத்தைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்க முடியாமற் போயிற்று. வடகிழக்கிலிருந்து பல நாட்களுக்கு மெல்லிய காற்று வீசியபின், இப்போது காற்றின் வேகம் வலுத்திருந்தது. கடலும் அலைத்து நுரைத்தது. இரவில் வெகு நேரத்துக்குப் பிறகு நல்ல நிலவொளியும், கட்டுமரத்தைத் தள்ளப் போதுமான காற்றும் எங்களுக்கு வாய்த்தன. ஒரு சிறிய மரத்துண்டைக் கடலில் கட்டுமரத்துக்கு முன்னால் விட்டெறிந்த பின் அதைத் தாண்டிச் செல்ல எத்தனை விநாடிகள் ஆகின்றன என்பதைக் கொண்டு, எங்கள் வேகத்தைக் கணக்கிட்டோம். வேகம் மிக அதிகம் என்பது தெரிந்தது.

கடலில் தோன்றும் ஒளி கட்டுமரத்தின் பின்புறம் ஒரு கோடு போலத் தெரிந்தது. குடிசைக்குள் நால்வர் குறட்டை விட்டுக்கொண்டிருந்தனர். டார்ஸ்டைன் மார்ஸ் நாதியை வைத்துக்கொண்டு தந்தி அடித்துக்கொண்டிருந்தான். நான் அப்போது சுக்கான் பிடித்துக்கொண்டிருந்தேன்.

நள்ளிரவுக்குச் சற்று முன்னர் ஓரலை காணுமிடமெல்லாம் பரவி, பின்புறமிருந்து கட்டுமரத்தைத் துரத்தி வந்தது. இதேபோன்ற இன்னும் இரு பேரலைகள் நுரைத்த விளிம்புடன் வேகமாக முதல் அலையைத் துரத்திக்கொண்டு வந்ததைக் கண்டேன். இவ்வலைகள் எழுந்த கடற்பரப்பை நாங்கள் முன்னரே தாண்டி இராவிட்டால், ஏதோ ஒரு பாறைமீது அலைகள் எழும்பி விழுவதாகத்தான் நினைத்திருப்பேன். நிலா வொளியில் நீண்ட பெருஞ்சுவர் போன்ற முதல் அலை எங்களைத் துரத்திக்கொண்டு வந்தபோது, நான் மற்றவர்களுக்கு எச்சரிக்கைக் குரல் கொடுத்துவிட்டு, அலையைச் சமாளிக்கச் சரியானபடி கட்டுமரத்தைத் திருப்பினேன். முதலலை வந்து சேர்ந்ததும், கட்டுமரத்தின் பின்புறம் திடீரென்று மேலே தூக்கப்பட்டது. உடைந்து நுரைத்த அலையின்மேல் கட்டுமரம் ஏறியது. சீறிக் கொந்தளித்த நீர் இரு பக்கங்களிலும் எழும்பிக் கட்டுமரத்தின் மீது வந்து விழுந்தது. நீர்க்குன்றின் பெரும்பாகம் கட்டுமரத்தின் அடியில் உருண்டு ஓடியது. கடைசியாகத் தூக்கப்பட்டது கட்டுமரத்தின் முன்புறம். அலை எங்களைக் கடந்து சென்றதும் கட்டுமரம் அகன்ற அலைப்பள்ளத்தில் பின் முன்னுக நழுவியது. உடனே அடுத்த நீர்ச்சுவர் எழும்பிவரவும், விரைவாக மீண்டும் ஆகாயத்தில் தூக்கப்பட்டோம். அலை விளிம்பில் கட்டுமரம் வேகமாக ஏறி இறங்கியபோது, தெளிந்த கடல்நீர் பெருமளவில் பின்புறமிருந்து கட்டுமரத்தின்மீது வாரி இறைக்கப்பட்டது. இதனுல், கட்டுமரமே சுழன்று திரும்பிவிட்டது. அடுத்த அலை வருமுன் மறுபடியும் அதைச் சரியானபடி திருப்ப முடியவில்லை. அடுத்த அலையும் வந்தது. சுற்றிலும் குமுறிக்கொண்டிருந்த நீரை நுரையுடன் வாரிச் சுருட்டிக்கொண்டு பளபளப்பான சுவராகத் தாவி எழுந்தது. கட்டுமரத்தை அடைந்ததும் மேல் விளிம்பைச் சாய்த்துக்கொண்டு பாய்ந்தது. அது விழுந்தபோது நான் குடிசைக் கூரையில் நீட்டிக்கொண்டிருந்த ஒரு மூங்கிற்கழியை இறுகப் பிடித்துக்கொண்டு தொங்கினேன். மூச்சை அடக்கிக்கொண்டு காத்திருந்தேன். கட்டுமரமே வானத்தில் தூக்கி எறியப்பட்டதுபோலாயிற்று. பேரிரைச்சலிட்ட நுரைச் சுழல்களில் என்னைச் சுற்றி இருந்த பொருள்கள் யாவும் அடித்துச் செல்லப்பட்டதுபோல் தோன்றிற்று. ஒரு

நொடியில் கோன்டிகி அலையின் உச்சிக்கு ஏறிற்று; பிறகு சரிவாய் இருந்த அலை முதுகில் அமைதியாக இறங்கிற்று. இதற்குப் பின் வந்த அலைகள் சிறியவை. எங்களைக் கடந்து விட்ட மூன்று அலைச்சுவர்களும் வேகமாக முன்னேறி, தொலைவிற் சென்றுவிட்டன. அடித்துச் செல்லப்பட்ட பல தேங்காய்கள் கட்டுமரத்தின் பின்னல் நீரில் மிதந்துகொண்டிருந்ததை நிலாவொளியில் கண்டேன். கடைசி அலை குடிசையின்மீது வெகு பலமாக மோதியதால் டார்ஸ்டைன் குப்புற உருட்டப்பட்டான். மற்றவர்களும் இந்தப் பேரிரைச்சலில் விழித்துக் கொண்டனர். கட்டைகளின் இடுக்குகள் வழியாகவும், சுவர்களின் வழியாகவும் நீர் பீறிட்டுக்கொண்டு வந்து குடிசையில் புகுந்திருந்தது. முன் தளத்தின் இடதுபுறம் மூங்கிற் பின்னலில் சிறிய வாய்போன்ற துளை ஏற்பட்டிருந்தது. நாங்கள் கடலில் மூழ்குவதற்கென வைத்திருந்த கூடை கட்டுமரத்தின் முன்புறம் தட்டையாக அடிக்கப்பட்டது. இவை தவிர வேறு மாறுதல் ஏதும் உண்டாகவில்லை. இம்மூன்று அலைகளும் எங்கிருந்து வந்தன என்பதை எங்களால் அறிந்துகொள்ள முடியவில்லை. கடலின் ஆழத்தில் பெரும் அதிர்ச்சியை ஏற்படுத்தக்கூடிய நிகழ்ச்சி ஏதேனும் நிகழ்ந்திருக்கலாம்.

இந்நிகழ்ச்சிக்கு இரண்டு நாட்கள் கழித்து, எங்களுக்குப் புயலின் அனுபவம் முதன் முறையாக ஏற்பட்டது. திடீரென்று வியாபாரக் காற்று அறவே நின்றுபோயிற்று. இதுதான் புயலின் முதல் அறிகுறி. நீல வானில் வியாபாரக் காற்ருல் உந்தப்பட்டு சென்றுகொண்டிருந்த சிறகு போன்ற வெண் மேகங்களை மறைத்துக்கொண்டு, தெற்கு அடிவானிலிருந்து ஒரு கனத்தக் கருமேகக் கூட்டம் எழுந்தது. பின் எதிர்பாராத திசைகளிலிருந்தெல்லாம் பலமாகக் காற்று வீசத் தொடங்கியது. சுக்கான் பிடிந்திருந்தவனுல் கட்டுமரத்தைச் செலுத்த முடியவில்லை. காற்றின் திசைக்குத் தக்கபடி பின்புறத்தைச் சுழற்றி, பாய்த்துணி நிரம்பி வீங்கி இருக்குமாறு செய்தோம். ஆனல், மறுகணமே எங்கள் முயற்சி வீணுயிற்று. காற்று மீண்டும் திசை மாற்றிக் கொண்டது. எதிர்ப்புறத்தில் பாய்த்துணி வளைந்தடித்தது. எங்களுக்கும், தளத்தில் இருந்த பொருள்களுக்கும் பேராபத்து நேரும்போல் இருந்தது. திடீரென்று கருமேகங்கள்

வரும் திசையிலிருந்தே காற்றும் வீசத் தொடங்கியது. கருமேகங்கள் வானிடைப் பரவி மூடிக்கொண்டன. காற்றின் வேகமும் அதிகரித்துக்கொண்டே போயிற்று; முடிவில் அது ஒரு பெரும் புயலாக மாறியது.

மிகக் குறைந்த கால அளவில் 15 அடிக்கும் அதிகமான உயரமுள்ள அலைகள் அலைப் பள்ளங்களுக்கு 20 முதல் 25 அடி வரை சீறிக் குதித்தன. கட்டுமரம் அலைப் பள்ளத்துள் இறங்கியபோது அவ்வலைகள் பாய்த்தூணின் உயரத்துக்குத் தலைதூக்கின. நாங்கள் அனைவரும் தளத்தின்மீது கூனிக்கொண்டு மெல்ல நடந்தோம். காற்று மூங்கிற் சுவர்களைக் குலுக்கிக் கொண்டு ஊளையிட்டுப் பேரொலி செய்தது.

வயர்லெஸ் நிலையத்துக்குப் பாதுகாப்பாகக் குடிசையின் பின்புறத்திலும் இடதுபுறச் சுவரிலும் நீர் உட்புகாத துணியை இழுத்துக் கட்டினோம். பிணைக்கப்படாமல் இருந்த சாமான்கள் யாவற்றையும் பத்திரமாகக் கயிறுகளைக் கொண்டு கட்டினோம். பாய்த் துணியைக் கீழிறக்கி மூங்கிற் தூணில் பலமாகக் கட்டினோம். இதற்குள் விண்ணகம் முற்றிலும் இருண்டது. கடல் இருண்டு பயங்கரமாகத் தோற்றம் அளித்தது. எங்கும் அலைகள் மோதி உடைந்ததால் வெண்நுரை ஆங்காங்கு தெரிந்தது. நீண்ட அலைகளின் முதுகு விளிம்புகளில் வரிகளைப்போல் நுரைக் கீறுகள் தெரிந்தன. அலைகள் உடைந்தபோது அவற்றின் விளிம்பு வீசி எறியப்பட்டதால், கடலில் உப்பு மழை பெய்ததுபோலத் தூவானம் தெறித்தது. வெப்பப் பகுதியில் கடுமழை கொட்டத் தொடங்கியது. காற்றும் மழையும் வீசியடித்தன. கடலோ சவுக்கடி பெற்றதுபோல மிண்டிக் குதித்தது. எங்கள் தலைமயிரிலிருந்தும் தாடியிலிருந்தும் உப்புநீர் வழிந்தோடியது. புயலைச் சமாளிக்கக் கட்டுமரத்தில் யாவும் ஒழுங்காக இருக்கின்றனவா என்று பார்ப்பதற்காக நாங்கள் உடம்பைக் குறுக்கிக்கொண்டு தளத்தில் இங்குமங்கும் நகர்ந்து கொண்டிருந்தோம். தொடுவானிலிருந்து ஓடிவந்த புயல் முதன் முறையாக எங்களைச் சூழ்ந்து தாக்கியபோது, எங்கள் முகத்தில் பரபரப்பும், கவலையும் தெரிந்தன. ஆயினும், புயல் முழு

வேகத்துடன் வந்து தாக்கியபோது, கோன்டிகி எப்படியோ சமாளித்துவிட்டது. இப்போது புயலே உற்சாகம் ஊட்டும் ஒருவகை விளையாட்டாகி விட்டது. எங்களைச் சுற்றிலும் வீசிய காற்றின் வெறியில் நாங்களும் திளைத்து நகைத்தோம். காற்றின் முழு கோபத்தையும் எங்கள் பால்ஸாமரம் வெகு அழகாகவும் நிதானமாகவும் சமாளித்து, நெட்டியைப்போல் அலை உச்சிக்கே ஏறியது. உறுமிப் புரண்ட நீர் எப்போதும் கட்டுமரத்துக்குச் சில அங்குலங்கள் கீழாகத்தான் இருந்தது. இம்மாதிரிக் காலநிலையில் கடலுக்கும் மலைக்கும் பல ஒற்றுமைகள் உள்ளன. எங்களை மூட முயற்சித்த பெருவெள்ளம் கவைமுள்ளின் வழியே ஓடுவது போல் இடுக்குகளில் வழிந்தோடிவிடும். அமைதியுடன் இருந்த கடலில் பேரலைகள் ஒன்றன்பின் ஒன்றாகச் சுமார் ஏழு விநாடி இடை நேரத்தில் வந்துகொண்டிருக்கும். இம்மாதிரி சமயங்களில் சுமார் 200 டன் நீர் 24 மணி நேரத்தில் கட்டுமரத்தின் பின் புறத்துக்கு வந்ததாக நாங்கள் கணக்கிட்டோம். கனத்த நீர்த்தொகுதிகள் சில விநாடிகளுக்கு ஒரு முறை கட்டுமரத்தை வந்து தாக்கிய வண்ணம் இருந்தன. காது செவிடுபடும்படி ஆரவாரம் செய்து கொண்டு அலைகள் தளத்தின்மீது வந்து விழுந்து உடைந்தபோது, சுக்கான் பிடித்தவனின் இடுப்பளவுக்கு நீர் இருந்தது. வேகமாய் ஓடிய ஆற்றுநீரைப் பிளந்து வழி செய்து கொள்வது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. ஒரு கண நேரத்துக்குக் கட்டுமரமே நடுங்கியது போலத் தோன்றிற்று. ஆனால், பின்புறம் அழுத்திக்கொண்டிருந்த கனத்த நீர்ப்படலம், அடுத்த கணமே பெரும் அருவிகளாய்த் தளத்திலிருந்து வழிந்தோடியது.

புயல் வீசிய 24 மணிநேரமும் ஹெர்மன் சுறுசுறுப்பாய் வேலை செய்து கொண்டிருந்தான். வேகம் அளக்கும் கருவியைக்கொண்டு புயலின் வேகத்தைக் கணக்கிடுவதில் அவன் முனைந்திருந்தான். மெல்ல புயலின் வேகம் குறைந்தது. பலமான காற்றுடன் கூடிய இலேசான மழை பெய்யத் தொடங்கியது. நாங்கள் மேற்கு நோக்கி நகர்ந்தபடியே இருந்தோம். கடலின் குமுறல் இன்னும் முற்றிலும் அடங்கவில்லை. அலை மூட்டமும் வாரி இறைக்கப்பட்ட நீரும் சேர்ந்து, பிசகின்றி காற்றின் விசையை அளப்பதில்

ஹெர்மனுக்குப் பெரும் இடையூருக இருந்தன. ஆகவே, முடிந்தபோதெல்லாம் ஹெர்மன் பாய்த்தூணின் மீதேற வேண்டியிருந்தது. ஏறிய பின்னரோ, பிடித்துக்கொண்டு நிற்பதே கடினமாயிருந்தது.

கால நிலை அமைதியுற்றதும் எங்களைச் சுற்றியிருந்த பெரிய மீன்களுக்கெல்லாம் திடீரென்று வெறிபிடித்து விட்டதோ என்று எண்ணத் தோன்றியது. கட்டுமரத்தின் அருகில் சுரு மீன்கள், டன்னி, டால்பின் வகைகள் நீந்தின. ஒரு சில பானிட்டோக்களும் நெளிந்து கொண்டிருந்தன. கடலில் இடையருது நிகழும் வாழ்வுச் சாவுப் போராட்டத்தின் ஒரு பகுதியே அங்கு அப்போது நிகழ்ந்தது. பெரிய மீன்களின் முதுகுப்புறங்கள் நீர் மட்டத்துக்குமேல் வளைவாகத் தெரிந்தன. ராக்கெட்டுகளின் வேகத்தில் ஒன்றை ஒன்று துரத்திக்கொண்டு அவைசெய்த சண்டையால் சூழ்புறக் கடல் நீரில் அடிக்கடி இரத்தம் தெரிந்தது. சண்டை இட்டவை முக்கியமாக டன்னிகளும், டால்பின்களுமே. பெருங்கூட்டங்களாக வந்த டால்பின்கள் வழக்கத்தைவிட வேகமாயும் கவனமாயும் நீந்தின. டன்னிகள்தாம் துரத்தும் மீன்கள். 150 முதல் 200 பவுண்டு வரை எடையுள்ள ஒரு மீன் டால்பின் ஒன்றின் தலையை வாயில் கடித்துக் கொண்டு நீருக்குமேல் பாய்ந்து விழுந்ததைப் பலமுறை பார்த்தோம். தனித்தனி டால்பின்கள் டன்னிகளால் துரத்தப்பட்டு பொறிகலங்க நீந்தினுலும், பொதுவாக டால்பின் கூட்டம் டன்னிகளுக்குச் சிறிதும் விட்டுக் கொடுக்க வில்லை. பல டால்பின்கள் கழுத்துப் புறங்களில் பெருங்காயங்களுடன் நீந்திக் கொண்டிருந்தன. அவ்வப்போது பெரிய சுரு மீன்களும் கோபத்துடன் பாய்ந்து எழுந்தன; பெரிய டன்னிகளையும் போரிட்டு வென்று பிடித்துக் கொண்டன. வழிகாட்டி-மீன்கள் அப்போது காணப்படவில்லை. அவை வெறி மிகுந்த டன்னிகளால் விழுங்கப்பட்டிருக்கலாம் அல்லது கட்டுமரத்தின் இடுக்குகளில் மறைந்து கொண்டோ, நெடுந்தொலைவில் இருந்து கொண்டோ கடற்போரைக் கவனித்துக் கொண்டிருக்கலாம். நீரில் இறங்கி வழிகாட்டி-மீன்களைப் பார்க்க அப்போது எங்களில் ஒருவருக்கும் துணிவு இல்லை. கட்டுமரத்தின் பின்புறம் நான் ஒருசமயம் நின்றுகொண்டிருந்தபோது,

திடீரென்று திடுக்கிடும் சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. சில்லிட்டுப் பெரிதாய் இருந்த ஏதோ ஒன்று என்மேல் மோதிற்று. சுருமீன் என்று நினைத்து, நான் பாய்த்தூணின் அருகில் ஓடினேன். ஹெர்மன் சிரித்துவிட்டு, சுமார் 160 பவுண்டு கனமுள்ள ஒரு பெரிய டன்னி அருகில் வந்து, பக்கவாட்டில் என்னை மோதியதாகச் சொன்னான். இதே மீன், பின்னால் ஹெர்மனும் அதன்பின் டார்ஸ்டைனும் சுக்கான் பிடித்திருந்தபோது, தளத்தின் மீது பாய்ந்து விழ முயற்சித்தது. இருமுறை கடல் அலைகளோடு கட்டுமரத்தின் மீது ஏறிவிட்டது. ஆனால், அதன் உடல் வழவழப்பாய் இருந்ததால் அதைச் சரியாகப் பிடித்துக்கொள்ளுமுன்பே அது கடலுக்குள் துள்ளிப் போயிற்று. இதற்குப் பிறகு ஒரு கனத்த பானிடோ அலைநீருடன் எழும்பி, தளத்தில் குழப்பம் அடைந்து விழுந்தது. அதையும் அதற்கு முந்திய நாள் பிடித்திருந்த ஒரு டன்னியையும் வைத்துக்கொண்டு மீன்பிடிக்க நிச்சயித்தோம். சூழ்புற நீரில் நடந்த இரத்தக் களரியைத் தடுக்க இதுவொன்றே சரியான வழி என்று தோன்றிற்று. எங்கள் குறிப்பேட்டில் காணக்கிடைக்கும் செய்திகள் கீழ்வருமாறு:—

“முதலில் ஓர் ஆறடிச் சுருமீன் தூண்டிலிற் சிக்கித் தளத்தின் மீது இழுக்கப்பட்டது. தூண்டிலை விடுவித்து இரையுடன் கடலில் போட்டவுடனே ஒரு எட்டடிச் சுருமீன் அதை விழுங்கிற்று. அதையும் தளத்துக்கு இழுத்துக் கொண்டோம். தூண்டிலை மறுபடியும் போட்டவுடன் மற்றொரு ஆறடிச் சுரு சிக்கிக்கொண்டது. கட்டுமரத்தின் விளிம்பருகில் அதை நாங்கள் இழுத்துக்கொண்டிந்தபோது அது எப்படியோ தப்பி நீருள் மூழ்கிப் போயிற்று. மீண்டும் தூண்டிற் கொக்கியை நீரில் இட்டோம். உடனே ஒரு எட்டடிச் சுருமீன் அதில் சிக்கிக் கொண்டு, எங்களுடன் போராடி இழுத்தது. அதன் தலையைக் கட்டைகளின்மேல் இழுத்துவிட்டோம். அப்போது அதில் கட்டியிருந்த நான்கு எஃகுக்கம்பிகளும் அறுபட்டுச் சுரு மறுபடியும் ஆழத்தில் முழுகி விட்டது. மீண்டும் தூண்டிலை வீசி, ஒரு ஏழடிச் சுருமீனைக் கட்டுமரத்தின் மீது இழுத்துக் கொண்டோம். இப்போது பின்புறம் இருந்த வழவழப்பான கட்டைகளில் நிற்பதே அபாயகரமாக இருந்தது. எங்களால் பிடிக்கப் பட்ட மூன்று சுருமீன்களும் வெகுநேரம் வரை மூங்கில்

தளத்தின்மேல் தலைகளைத் தூக்கிப்போட்டு வாயில் அகப்பட்டதைக் கடிக்க முயன்றன. இறந்து விட்டதாக நாங்கள் நினைத்த மீனும் சிறிது நேரத்துக்கு அசைவற்றுக் கிடந்து, பின்னர் மீண்டும் துள்ளி எழுந்தது. அச்சுருமீன்களை வாலைக்கொண்டு பிடித்து, கட்டுமரத்தின் முன்புறம் இருந்த குவியலுக்குள் இழுத்து விட்டோம். இதன் பிறகு ஒரு பெரிய டன்னி பிடிபட்டுச் சுருமீன்களையும் மிஞ்சும் வகையில் எங்களுடன் போராடியது. மிகவும் கடினமாயும் பருமனும் இருந்ததால், எங்களில் ஒருவராலும் அதன் வாலைப் பிடித்துத் தூக்கமுடியவில்லை. இதற்குப் பின்னும் கடல்மட்டத்தில் தெரிந்த வெறிகொண்ட மீன்களின் எண்ணிக்கை சிறிதும் குறையவில்லை. மற்றொரு சுருவும் தூண்டிலில் பிடிபட்டது. கட்டுமரத்தின் மீது இழுக்கும்போது அது தப்பி ஓடிப்போயிற்று. அடுத்த படியாக ஒரு ஆறடிச் சுருமீனைத் தளத்தின் மீது பத்திரமாக ஏற்றினோம். பின்னர், ஐந்தடிச் சுரு பிடிபட்டு தளத்தின் மேல் ஏற்றப்பட்டது. பிறகு, மற்றொரு ஆறடிச்சுரு கிடைத்தது. மீண்டும், தூண்டிலைக் கடலில் எறிந்தபோது ஒரு ஏழடிச் சுருமீன் பிடிபட்டுக் கட்டுமரத்தின் மீது ஏற்றப்பட்டது.

கட்டுமரத்தின்மீது எங்களால் எளிதில் நடக்க முடியவில்லை. வழியை அடைத்துக்கொண்டு குறுக்கே கிடந்த சுருமீன்கள் தளத்தின்மீது வாலினால் அடித்துக்கொண்டு, குடிசையின்மீது மோதி அகப்பட்டதைக் கடிக்க முயன்றன. புயல் அடித்த இரவுகளுக்குப்பின் மீன் பிடிப்பதில் ஈடுபட்ட நாங்கள் இதற்குள் களைத்துப் போயிருந்தோம். எந்தச் சுருக்கள் முற்றிலும் இறந்துவிட்டன, எவை நாங்கள் அருகிற் சென்றபோது மட்டும் துள்ளிக்கொண்டு கடிக்க முயற்சி செய்தன, எவை பச்சையான பூனைக் கண்களுடன் உயிர்ப்பின் முழு சக்தியுடன் எங்களைப் பழிவாங்க அசையாமல் காத்துக் கிடந்தன என்பவற்றை நாங்கள் மறந்து விட்டோம். ஒன்பது பெரிய சுருக்களைப் பிடித்தபின் எங்களுக்கு அலுப்பு ஏற்பட்டது. மேல் தளமுற்றும் சுருமீன் உடல்கள் சிதறிக் கிடந்தன. ஐந்துமணி நேரத்துக்குப்பின், மீன் பிடிப்பதை நிறுத்தினோம்.

அடுத்தநாள் டால்பின்களும் டன்னிகளும் தொகையிற் குறைந்திருந்தன. சுருக்களின் எண்ணிக்கை குறைய-

வில்லை. மீண்டும் அவற்றைப் பிடித்துக் கட்டுமரத்தின்மேல் இழுத்துப்போடத் தொடங்கினோம். ஆனால், இம்முயற்சியைச் சீக்கிரத்திலே நிறுத்தவேண்டி நேரிட்டது. ஏனெனில், கட்டுமரத்திலிருந்து வழிந்தோடிய சுறுமீன்களின் இரத்தம் மற்ற சுறுமீன்களைக் கவர்ந்தது. கடைசியில் இறந்துபோன சுருக்களையெல்லாம் கடலில் எரிந்துவிட்டுத் தளத்தை நன்றாகக் கழுவினோம். சுருக்களின் பற்களால் கடிபட்டதாலும், அவற்றின் முரட்டுத் தோல்களுடன் உராய்ந்ததாலும் மூங்கிற் பாய்கள் கிழிந்திருந்தன. அதிகமாய் கிழிந்துபோய் இரத்தத்தில் நனைந்துபோன பாய்களைக் கடலில் எறிந்தோம். புதிய பொன் மஞ்சளான மூங்கிற் பாய்களைத் தளத்தின்மீது பொருத்தினோம். தளத்தின் முன்புறம் இம்மாதிரிப் புதிய பாய்களிற் பலவற்றைச் சுருட்டி, உபயோகத்திற்காக முன்பே கட்டி வைத்திருந்தோம். இந் நிகழ்ச்சிகளுக்குப் பின்னர், மாலை நேரத்தில் குடிசைக்குள் இளைப்பாறும்போது கூட, அகலத் திறந்த பேராசை பிடித்த சுறுமீன்களின் வாயும் இரத்தமும் எங்கள் மனத்தை விட்டு அகலவில்லை. சுறுமீன் இறைச்சியின் நாற்றமும் எங்கள் மூக்கைவிட்டு அகலவேயில்லை. சுறுமீன்களை எங்களால் சாப்பிடமுடியும். சுமார் 24 மணி நேரத்துக்குக் கடல் நீரில் அவற்றை ஊற வைத்தபின் அவற்றைச் சாப்பிடுவதால், உடலுக்கு ஒரு கெடுதியும் ஏற்படுவதில்லை. காட் மீன் வகையைப் போன்றவை இச் சுருக்கள். ஆனால், பானிடோக்களும், டன்னிகளும் இவற்றைவிட மேம்பட்டவை. அன்றுதான் முதன் முதலாக எங்களில் ஒருவன், "தென்னை மரங்கள் அடர்ந்த ஒரு தீவின் தரையில் செழித்த பசும் புல்லின்மீது வசதியாக காலை நீட்டிப் படுத்துக்கொண்டால் மிக்க இன்பமாக இருக்கும். சில்லிட்ட மீனையும், குமுறும் கடலையும் விட்டு வேறு எதையாவது சற்றுப் பார்த்தால் தேவலை," என்று கூறியதைக் கேட்டேன். கால நிலை இப்போது மிகவும் அமைதியாய் இருந்தது. ஆயினும், அவ்வப்போது திடீரென மாற்றங்கள் இருந்தன. வேகமான காற்றுக்கள் எதிர்பாராத வகையில் அடிக்கடி வீசின. மழை பெய்ததில் எங்களுக்கு மகிழ்ச்சிதான். ஏனெனில், இதற்குள் நாங்கள் கொண்டுவந்திருந்த குடிநீர் பெரும்பாலும் செலவாய் விட்டது. மீதியிருந்த சிறிது நீரும் நாற்றமடிக்க ஆரம்பித்தது; சுவையும் மாறலாயிற்று. கனத்த மழை பெய்த-

போது, குடிசையின் கூரையிலிருந்து வழிந்தோடிய நீரைச் சேமித்து வைத்துக் கொண்டோம். மழையில் நின்று குளித்து, உடம்பில் படிந்திருந்த உப்பைப் போக்கிக்-கொண்டோம். இது எங்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுத்தது. வழிகாட்டி மீன்கள் தங்களுடைய வழக்கமான இடங்களிலேயே நீந்திக் கொண்டிருந்தன. முன்பே எங்க-ளுடன் தொடர்புகொண்டு சுருமீன்களின் இரத்த வெள்-ளத்தில் குளித்த பின்னும், இவை எங்களை விடாமல் தொடர்ந்தன.

ஜூலை மாதம் 21-ஆம் நாள் காற்றடிப்பது திடீரென்று நின்றுவிட்டது. சிறிதும் சலனம் இல்லாத இந்நிலை எங்களை மிகவும் தொல்லைப் படுத்தியது. நாங்கள் முன்பு பெற்றிருந்த அனுபவத்திலிருந்து இதன் பொருள் என்னவென்று அறிந்திருந்தோம். எதிர்பார்த்ததுபோலவே கிழக்கு, மேற்கு, தெற்குத் திசைகளிலிருந்து காற்று மாறி மாறி வேகமாய் வீசிற்று. பிறகு, தென் திசையிலிருந்து அடித்த காற்றின் வேகம் மெல்ல அதிகரித்தது. அங்கு அடிவாரத்தின்மீது கருத்த, பயங்கரமான மேகங்கள் தோன்றியிருந்தன. ஹெர்மன் காற்றின் வேகத்தை அடிக்கடி அளந்து கொண்டு இருந்தான். இதற்குள் காற்றின் வேகம் விரைவில் அதிகரித்தது. டார்ஸ்டைனின் படுக்கைப்பை திடீரென்று கடலிற்போய் விழுந்தது. அடித்துச் செல்லப்பட்ட பையைப் பிடிக்க முயன்ற ஹெர்மன் அளவைமீறி ஓரடி எடுத்து வைத்துக் கடலில் விழுந்துவிட்டான். அலைகளின் பேரொலியின் இடையே அவன் உதவிவேண்டி எழுப்பிய குரல் மிக மெல்லியதாகக் கேட்டது. ஹெர்மனின் தலையும் ஒரு தோளும் நீரின்மீது தெரிந்தன. அவனருகில் தெளிவற்றுப் பச்சையான ஏதோ ஒன்று நீரில் சுழன்றது. பேரலைகள் அவனைக் கட்டுமரத்தின் இடப்புறமிருந்து தொலைவிற் தூக்கிச் சென்றன. ஹெர்மன் அவற்றுடன் உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்தான். எங்ஙனமாயினும் கட்டுமரத்துக்கு வந்து சேரவேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தான். பின்புறம் சுக்கான் பிடித்திருந்த டார்ஸ்டைனும், முன்புறமிருந்த நானும் முதலில் அவனைப் பார்த்தோம். திடீரென்று இரத்தம் உறைந்து விட்டது போன்ற உணர்ச்சி எங்களுக்கு ஏற்பட்டது. “கடலில் விழுந்து விட்டான்” என்று தொண்டை கிழியக்

கத்தினேம். அருகில் இருந்த உயிர் தப்பும் கருவியை எடுக்க ஓடினேம். கடலில் பேரிரைச்சலால் ஹெர்மனின் கூக்குரல் மற்றவர்களுடைய காதில் விழவில்லை போலும்! ஆயினும், ஒரு நொடிக்குள் தளத்தில் பெருஞ்சந்தடி ஏற்பட்டது. ஹெர்மன் மிக சாமர்த்தியமாக நீந்த வல்லவன். அவன் உயிர் இப்போது பயணம் வைக்கப்பட்டிருக்கிறது என்பதை நாங்கள் உணர்ந்தோம். எனினும், விரைவில் கட்டுமரத்துக்கு நீந்தி வரக்கூடிய ஆற்றல் அவனிடம் இருப்பதாக நாங்கள் நம்பினேம். டார்ஸ்டைன் உயிர்காக்கும் படகிற்கான கயிற்றைப் பற்றினன். ஆனல், அது எடுக்கமுடியாமல் சிக்கிக் கொண்டது. இதற்குள் ஹெர்மன் கட்டுமரத்தின் பின்புறம் சென்றுவிட்டான். கட்டுமரம் முன்னேறிக் கொண்டேயிருந்தது. ஹெர்மனுடைய கடைசி நம்பிக்கை, துடுப்புப் பலகையைப் பிடித்துக் கொள்ளலாம் என்பதொன்றே. எவ்வாறேனும் துடுப்பை அவன் இறுகப் பற்றிக்கொண்டால் போதும்.

துடுப்புக்கட்டையை அவன் பிடிக்க முயன்ருன். ஆனல், அது அவன் கையிலிருந்து நழுவி விட்டது. நானும் பெங்டும் ரப்பர்ப் படகைக் கடலில் இறக்கினேம். நுட், எரிக் ஆகிய இருவரும் உயிர்க் கச்சையை எறிந்தார்கள். நீண்ட கயிறு கட்டித் தயாராக அதைக் குடிசைக் கூரையின் ஒரு மூலையில் வைத்திருந்தோம். ஆனல், இன்று காற்று வெகு வேகமாக அடித்தது. தூக்கி எறிந்த உயிர்க் கச்சை மீண்டும் கட்டுமரத்தின்மீதே வந்து விழுந்தது. இவ்வாறு மீண்டும் மீண்டும் உயிர்க் கச்சையை நாங்கள் கடலில் எறிவதும், அது திரும்பி வருவதுமாக இருந்தது. அதற்குள் ஹெர்மன் தொலைவிற் சென்றுவிட்டான். கட்டுமரத்தை நோக்கி அவன் நீந்த நீந்த காற்றின் வேகத்தினல், அவனுக்கும் கட்டுமரத்துக்கும் இடையே இருந்த தூரம் அதிகரித்தது. ஆனல், இதற்குள் ரப்பர்ப் படகின் மீது அவனுக்குச் சிறிது நம்பிக்கை ஏற்பட்டது. படகுக்கும் கட்டுமரத்துக்கும் இப்போது கயிற்றுப் பிணைப்பின் தடை இல்லை. ஆகவே, இருவரும் படகைத் தள்ளிக்கொண்டுபோய், நீந்தும் மனிதனைப் பிடித்திருக்கலாம். ஆனல், படகு மீண்டும் கட்டுமரத்துக்கு வந்து சேருமா என்பது புதிராய்த்தான் இருந்தது. திடீரென்று நுட் தலைகீழாய்க் கடலுக்குள் பாய்ந்ததைக் கண்டோம். ஒரு

கையில் உயிர்க் கச்சையைப் பிடித்துக்கொண்டு, அவன் நீந்திச் சென்முன். ஹெர்மனுடைய தலை அலையின்மீது தெரிந்தபோது, நுட் அலைக்குன்றில் மறைந்தான். நுட் மேலெழுந்து வந்தபோது ஹெர்மன் நீரில் மூழ்கினுன். முடிவில் இரு தலைகளையும் ஒரே சமயத்தில் கண்டோம். ஒருவரை நோக்கி ஒருவர் நீந்திச் சந்தித்துவிட்டார்கள். இருவரும் உயிர்க் கச்சையைப் பிடித்துக்கொண்டு கடலில் தொங்கிக் கொண்டிருந்தார்கள். நுட் தன் கையை அசைத்-தான். இதற்குள் ரப்பர்ப் படகும் கட்டுமரத்தை அடைந்து விட்டது. ஆகவே, நாங்கள் நால்வர் உயிர்க் கச்சையில் கட்டியிருந்த கயிற்றைப் பிடித்து இழுத்தோம். கடலில் இருந்த இருவருக்கும் பின்னுல் கருப்பாக ஏதோ தெரிந்தது. அதை விட்டு எங்கள் கண்கள் அகலவில்லை. அது கடலில் இருந்தவாறு, அலை விளிம்பில் ஒரு பெரிய கரும்பச்சை முக்கோணம்போல் தெரிந்தது. ஹெர்மனைப் பிடிக்கச் சென்ற நுட்டுக்கும் இது பேரதிர்ச்சியை அளித்தது. ஹெர்மனுக்கு மட்டுமே இது சுருவோ, கடல் அரக்கனே அல்ல என்பது தெரியும். அது டார்ஸ்டைனின் தூங்கும் பையினுடைய ஒரு துண்டு. இவ்விருவரும் பத்திரமாகக் கட்டுமரத்தின் மீது ஏறிவிட்டார்கள். தூங்கும் பையைக் கடலின் ஆழத்துக்கு எந்தப் பிராணி இழுத்துச் சென்றதோ! தூங்கும் பையை விட மிகச் சிறந்த ஆகாரம் அதற்குக் கிடைக்க இருந்தது; ஆனுல், மயிரிழையில் தப்பிப் பிழைத்துவிட்டது. "விதி வசமாக தூங்கும் பையில் நான் இல்லை" என்முன் டார்ஸ்டைன். தான் இதுவரை மறந்-திருந்த சுக்கான் துடுப்பை அவன் மறுபடியும் பிடித்துக் கொண்டு, வேலை செய்யத் தொடங்கினுன்.

ஆயினும், அன்று மாலையில் நாங்கள் மகிழ்ச்சி அற்றி-ருந்தோம். வெகு நேரத்துக்கு எலும்பும் நரம்பும் சில்லிட்-டன. மனம் எவ்வேலையிலும் நாட்டங் கொள்ளவில்லை. ஆனுல், நாங்கள் அறுவரும் முன்போலவே சேர்ந்து இருக்-கிருேம் என்ற நினைவில் இதயத்தில் மகிழ்ச்சி பொங்கிற்று. எங்களை மீண்டும் சேர்த்து வைத்த சக்திக்காக நெஞ்சில் நன்றி உணர்வு நிரம்பியிருந்தது.

ஹெர்மனும் மற்றவர்களும் அன்று நுட் ஹாக்லாண்-டைக் கொண்டாடினேம். ஆனுல், நடந்து போனதைப்

பற்றிச் சிந்திக்க அப்போது நேரமில்லை. தலைக்குமேல் வானத்தில் கருமை மூடிக்கொண்டே வந்தது. காற்றின் வேகம் அதிகரித்தது. பொழுது சாயுமுன்னரே மீண்டும் ஒரு புயல் தோன்றிவிட்டது. உயிர்க் கச்சையில் ஒரு நீண்ட கயிற்றைக் கட்டி, கட்டுமரத்தின் பின்புறத்தில் அக் கயிற்றைப் பிணைத்தோம். விசையுடன் காற்று அடிக்கும்போது, யாரேனும் கடலில் விழுந்துவிட்டாலும் நீந்திவந்துப் பிடித்துக்கொள்ளத் துடுப்புக் கட்டைக்கும் பின்னுல் உயிர்க் கச்சை இருக்கும் அல்லவா? இரவு படர்ந்தது. நீட்டிய கை கண்ணுக்குத் தெரியாத காரிருளில் கடலும், கட்டுமரமும் மறைந்தன. கட்டுமரத்தில் இருந்தவாறு அலைகளின் மேலும் கீழுமாகக் குதித்து உருண்டுகொண்டிருந்த எங்களுக்குப் புயல் ஊளையிடும் பேரிரைச்சலாகக் கேட்டது. பாய்மரமும் பிணைப்புக் கயிறுகளும், காற்றின் வேகத்தைத் தாங்க முடியாமல் அவதியுற்றன. கடுங்காற்று குடிசையின் மேல் தன் முழு சக்தியையும் காட்டிற்று. குடிசை பெயர்க்கப்பட்டுக் கடலில் உருண்டோடி விடுமோ என்று பயந்தோம். ஆனுல், அது கெட்டித் துணியினுல் மூடப்பட்டு நன்ருக இழுத்துக் கட்டப்பட்டிருந்தது. நுரைத்திரைக் கடலில் கோன்டிகி அங்கும் இங்கும் தூக்கி எறியப் படுவதாக உணர்ந்தோம். அடி மரங்கள் மேலும் கீழும் பலமாக அசைந்தாடின. அலை எழும்போதெல்லாம், அடித் தளத்தின் இடுக்குகள் வழியே கடல்நீர் பெரும் ஊற்றுக்களைப்போலப் பொங்கி விழாததைக் கண்டு வியப்புற்ருேம். ஊதும் துருத்தியின் வழியே காற்று செல்வதுபோல், அடிக்கட்டைகளின் இடுக்குகளில் ஈரக்காற்று மட்டும் மேலும் கீழுமாய் ஓடிக்கொண்டிருந்தது. ஐந்து நாட்களுக்கு மாறி மாறி வேகமாய்க் காற்றடிப்பதும், பெரும்புயல் வீசுவதுமாய் இருந்தது. அலைகளுக்கிடையில் பெரும் பள்ளத்தாக்குகள் தெரிந்தன. அவற்றில் அலைகளிலிருந்து கிளம்பிய தூவானம் சென்று தங்கியது. இறுதியாக ஐந்தாம் நாளன்று மேகங்கள் பிளந்து விலகி, நீல வானம் கண்ணுக்குத் தெரிந்தது. பல நாட்களாக இடைவிடாமல் மூடியிருந்த இருள் திரை விலகிற்று. எங்கள் துடுப்புமரம் ஒடிந்துபோயிற்று. பாய்த்துணி கிழிந்திருந்தது. நடுப் பலகைகள் தளர்ந்து தொங்கிக் கொண்டிருந்தன. அவற்றை நீரினடியில் இறுகப் பிணைத்திருந்த கயிறுகள் நைந்துபோகவே, அவை

கட்டுக் குலைந்து ஆடத் தொடங்கின. அடிக்கட்டைகளின்மீது அவை அடிக்கடி மோதிக்கொண்டன. ஆயினும், எங்களுக்கோ, நாங்கள் கொண்டுசென்ற பொருள்களுக்கோ சிறிதும் பழுது ஏற்படாதபடி பிழைத்துக் கொண்டோம்.

இரு புயல்களுக்குப் பின் கோன்டிகியின் கயிற்றுப் பிணைப்புகள் தளர்ந்துவிட்டன. செங்குத்தான அலைகளின்மீது ஏறி இறங்கியபோது கயிறுகள் பலமாக இழுக்கப்பட்டன. கட்டைகளும் இடைவிடாமல் அசைந்தாடியதால் கயிறுகள் பால்ஸாகட்டைகளை அறுத்துக்கொண்டு அழுந்திப் பதிந்துவிட்டன. நல்ல வேளையாக, இங்காக்கள் கூறியபடியே நாங்கள் கட்டுமரத்தை அமைத்தது பற்றி மகிழ்ந்தோம்; கடவுளுக்கு நன்றி செலுத்தினோம். கம்பிகளைக் கொண்டு கட்டைகளைக் கட்டியிருந்தால் இந்தப் புயலில் மரம் துண்டு துண்டாய்ப் போயிருக்கும். அடுத்தபடியாக, பயணம் தொடங்கும்போது முழுதும் உலர்ந்த கட்டைகளை உபயோகித்திருந்தால் முதலில் நன்றாக மிதந்திருக்கும்; ஆனால், காலம் செல்லச்செல்ல நீரில் ஊறி எங்களுடன் நீரில் ஆழ்ந்திருக்கும். புதிதாக வெட்டப்பட்ட மரத்தை உபயோகித்ததால், அதில் இருந்த திரவ சாரம் பால்ஸா மரத்தின் நுண்ணறைகளில் தங்கி, கடல்நீர் மரத்தினுள் ஊறிப் பரவாமல் தடுத்துவிட்டது. ஆனால், இப்போது கயிறுகள் தளர்ந்திருந்தபடியால், இரு கட்டைகளின் இடையில் எங்கள் கால் நழுவுவதும் கூட ஆபத்தாயிருந்தது. வேகமாய்க் கட்டைகள் ஒன்றோடொன்று மோதும்போது கால் நசுக்கப்படும். முன்புறமும் பின்புறமும் மூங்கில் தளமில்லாதபடியால் இரண்டு வெவ்வேறு கட்டைகளில் கால்களை அகல வைத்துக்கொண்டு நின்றபோது முழங்காலில் வலி ஏற்பட்டது. பின்புறம் இருந்த கட்டைகளில் கடற்பாசி பரவியிருந்தது. ஆகவே, அவை வாழையிலையைப் போல் வழுக்கும். சுக்கான் பிடிப்பவன் நிற்பதற்காக ஓர் அகன்ற பலகையையும் அமைத்திருந்தோம். இவ்வளவு இருந்தும் அலைவந்து மோதியபோது சமாளிப்பது மிகக் கடினமாய் இருந்தது. மேலும், ஒன்பதடி மரம் ஒன்று குறுக்குக் கட்டைகளின்மேல் மோதியதால் இரவும் பகலும் விடாமல் ஈரமரங்கள் ஒன்றோடொன்று இடித்துப் பேரொலி

செய்துகொண்டிருந்தன. பாய்மரமும் சிறிது ஆட்டங்கண்டது. அதைக் கழிகளுடன் கட்டியிருந்த கயிறுகள் ஒன்றுக்கொன்று இசைவின்றி ஆடின. உடைந்த துடுப்பு மரத்தை ஒட்டுப்போட்டுச் சரி செய்ததுடன், எஃகைப்போன்ற உறுதியான மாங்கிரோவ் மரத்துண்டுகளைக் கொண்டு வலுவாகக் கட்டினேம். பெங்டும், எரிக்கும் பாய்த் துணியைச் சீர்படுத்தும் வேலையைச் செய்தனர். மறுபடியும் கோன்டிகி தலையை நிமிர்த்திக்கொண்டது. கோன்டிகியின் மார்பு புடைத்தெழுந்து பாலினீசியாவை நோக்கி வளைந்தது. துடுப்புக்கட்டை மீண்டும் அலைகளின்மீது நடனமாடத் தொடங்கியது. காலநிலை மீண்டும் ஒழுங்காகி விட்டபடியால் கடலும் அமைதி அடைந்தது. ஆயினும், நடுப்பலகைகள் முன்பிருந்த நிலைக்கு வரவில்லை. முழுபலத்தை உபயோகித்தாலும், நீரின் அழுத்தத்தைத் தாங்க அவற்ருல் முடியவில்லை. கடற்பாசி அடிப்புறத்துக் கயிறுகளை முற்றிலும் மூடிக்கொண்டது. ஆகவே, அவற்றைச் சரிபார்க்கும் முயற்சி வீணுயிற்று. மூங்கிற் தளம் முழுவதையும் ஆராய்ந்து பார்த்ததில், மூன்று பெரிய கயிறுகள் மட்டும் அறுந்திருந்ததைக் கண்டோம். மற்றச் சாமான்களுடன் உராய்ந்துகொண்டு அவை கோணலாகியிருந்தன. ஊறிய கட்டைகள் நீரை அதிகமாய் உறிஞ்சியிருந்தன. ஆனல், சாமான்களின் கனம் முன்னிலும் குறைந்து விட்டது. ஆகவே, ஊறிய கட்டைகள நீரில் அதிகமாய் அமிழவில்லை. நாங்கள் சேமித்து வைத்திருந்த உணவும், நீரும் இதற்குள் பெரும்பாலும் செலவாகிவிட்டன. வயர்லெஸ் செய்திகள் அனுப்ப நாங்கள் உபயோகித்துவந்த பாட்டரிகளும் அநேகமாக சக்தி இழந்துவிட்டன. இவ்வளவு தொல்லைகளுக்கிடையேயும், அருகில் இருந்த தீவுகளுக்குப் போய்ச் சேர்ந்துவிட முடியும் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருந்தது. இப்போது எங்களுக்கு எழுந்த பிரச்னை, பயணம் எவ்வாறு முடிவெய்தும் என்பதுதான்.

கோன்டிகி தவிர்க்க முடியாத வகையில் மேற்குத் திசையில் முன்னேறிக்கொண்டே இருக்கும். முடிவில் அதன் முன்பாகம் பாறைபோன்ற ஏதாவது ஒன்றில் மோதிய பின்னரே கட்டுமரத்தின் முன்னேற்றம் தடைபடும். எதிரிலிருக்கும் பாலினீசியத் தீவுகளில் ஏதாவது ஒன்றில்

போய் இறங்கினல் ஒழிய, எங்கள் பயணம் முடிவெய்த முடியாது. மார்க்கிஸா தீவுகளுக்கும் டுவாமோடு தீவுகளுக்கும் சமதூரத்தில் அப்போது இருந்தோம். இருந்த நிலேயில் தொடர்ந்து சென்ருல், இவ்விரு தீவுக் கூட்டங்களுக்கும் இடைப்பட்ட கடல் வழியே சென்றுவிட முடியும். எந்த நிலப்பரப்பும் கண்ணிற்படாமலே இத்தீவுகளேத் தாண்டிவிடுவோம். மார்க்கிஸா கூட்டத்தில் மிக அருகில் இருந்த தீவு எங்களுக்கு வடமேற்கில் சுமார் 350 மைல் தொலேவில் இருந்தது. டுவாமோடு கூட்டத்தில் மிக அருகில் இருந்த தீவு எங்களுக்குத் தென்மேற்கில் 350 மைல் தொலேவில் இருந்தது. கடலும், காற்றும் நம்பமுடியாதபடி இருந்தன. ஆனல், அவையிரண்டும் இத்தீவுக் கூட்டங்களுக்கு இடைப்பட்ட அகன்ற கடல் வழியே எங்களே அழைத்துச் செல்வதுபோலவே தோன்றிற்று.

வடமேற்கில் மிகச் சமீபத்தில் இருந்த தீவு பாடுஹிவா என்பது. இத்தீவின் கடற்கரையில், மரத்தூண்களேக் கொண்டு அமைக்கப்பட்டதோர் குடிசையில் நான் சில நாட்கள் வசித்ததுண்டு. இங்கேதான் டிகி என்ற என் முன்னேனேப் பற்றிய கதைகளே ஒரு கிழவனிடமிருந்து கேட்டறிந்தேன். மறுபடியும் அதே தீவுக்குப் போய்ச் சேர்ந்தால், பழைய நண்பர்களேச் சந்திக்க முடியும். ஆனல், டிகியைப்பற்றி மனத்தைக் கவரும் முறையில் கதைகளேச் சொன்ன அக்கிழவனேக் காணமுடியுமா ?

மார்க்கிஸா கூட்டத்தில் இருந்த தீவுகள் ஒன்றுக்கொன்று தொலேவில் இருந்தன. கடற்கரையில் செங்குத்தான குன்றுகளும், அவற்றையடுத்த கடற்பகுதியில் தடுக்க முடியாத வேகத்துடன் மோதி விழும் அலேகளும் மிக்கிருந்தன. ஆகவே, அத்தீவுகளே நெருங்கும்போது சுக்கானே வெகு கவனமாகக் கட்டுப்படுத்தி, கட்டுமரத்தை ஒரு பள்ளத்தாக்கில் செலுத்தவேண்டியிருக்கும்.

இதற்கு மாருக டுவாமோடு கூட்டத்தைச் சேர்ந்த பவளப்பாறைகளுக்கு எங்கள் கட்டுமரம் சென்றுவிடலாம். தீவுகள் அங்கு நெருக்கமாக அமைந்து, கடலின் ஒரு பெரும் பகுதியையே அடைத்துக்கொண்டிருந்தன. இக்கூட்டத்துக்குத் 'தாழ்ந்த தீவுக்கூட்டம்' என்றும், 'அபாயகரமான

தீவுக்கூட்டம்' என்றும் பெயர் வழங்கிற்று. ஏனெனில், இத்தீவுக் கூட்டமே பவளப்பூச்சிகளால் கட்டப்பட்டிருந்தது. நீரில் மறைந்து கிடந்த பாறைகளும், கடல் மட்டத்துக்கு ஆறு, அல்லது பத்து அடி உயரமே இருந்த நிலப்பரப்புக்களும் இருந்தன. கடலும் அதைச் சூழ எழுந்து அதன் கரைபோல் அமைந்திருக்கும் பாறைகளும் பேராபத்தை விளைவிப்பன. அங்குச் செல்லும் கப்பல்கள் கவனமாய் விலகியே செல்லவேண்டியிருக்கும். டுவாமோடு தீவுகள் முழுதும் பவளப்பூச்சியினல் அமைக்கப்பட்டவை. மார்க்கிஸா தீவுகள் அவிந்துபோன எரிமலைகளில் எஞ்சிநிற்கும் பகுதி என்று நாம் வைத்துக்கொண்டாலும், இவ்விரண்டிலும் ஒரு பாலினீசிய இனத்தார் குடியேறி யிருப்பதைக் காண்கிறோம். இவ்விரு பகுதிகளிலும் அரசாளும் குடும்பத்தினர் டிகியைத்தான் தம் முன்னேனகச் சொல்லுகின்றனர்.

ஜுலை மூன்றும் நாள். நாங்கள் பாலினீசியாவிலிருந்து 1,150 மைல் தூரத்தில் இருந்தபோதே, மேலே சென்றுல் நிலப்பரப்பைக் காணலாம் என்பதற்கு இயற்கை சைகை காட்டிற்று. பெருவிலிருந்து சுமார் 1,150 மைல் தூரம்வரை, நாங்கள் ப்ரிகேட் பறவைகளின் சிறு கூட்டங்களைக் கண்டோம். 100° மேற்கு தீர்க்கரேகை அளவில் அவை குறைந்து, பிறகு மறைந்தே போயின. அதற்குப்பின் சிறிய பெட்ரல் பறவைகளை மட்டும் பார்த்தோம். மேற்சொன்ன ஜுலை மூன்றும் நாளன்று ப்ரிகேட் பறவைகள் மீண்டும் தென்பட்டன. 125° மேற்குத் தீர்க்கரேகைக்கு மேற்பட்ட பகுதிகளில் ப்ரிகேட் பறவைக் கூட்டங்கள் அடிக்கடி காணப்பட்டன. இவை அடிக்கடி அலைக்குன்றுகளுக்கு மேல் வேகமாகப் பாயும்; டால்பின்களிடமிருந்து தப்பும்பொருட்டு மேலே பாயும் பறக்கும் மீன்களைக் கொத்திச் செல்லும். இவை தென் அமெரிக்காவிலிருந்து எங்களுடன் வந்தவை அல்ல; இன்னும் மேற்கே இருக்கும் நிலப்பரப்பைச் சேர்ந்தவை.

ஜுலை மாதம் பதினுரும் நாள். இயற்கையின் சைகைகள் முன்னிலும் தெளிவாய்த் தெரிந்தன. அன்று நாங்கள் ஒன்பது அடி நீளமுள்ள ஒரு சுருவைப் பிடித்தோம். அதன்

வயிற்றிலிருந்து, ஜீரணம் செய்யப்படாத [1]நட்சத்திர மீன் ஒன்று வெளிப்பட்டது. ஒரு நிலப் பரப்புக்கு அருகில்தான் இத்தகைய நட்சத்திர மீன்கள் வாழும். ஆகவே நிலப்பரப்பு ஒன்று அருகில் இருக்கிறது என்று தெரிந்து கொண்டோம்.

அடுத்தநாள் இரு பறவைகளைப் பார்த்தோம். அவை நேரே பாலினீசியத் தீவுகளிலிருந்து வந்தவை. பாய்மரத்துக்குமேல் தாழப் பறந்துவந்த இவ்விரு பறவைகளும் கட்டுமரத்தைப் பலமுறை சுற்றி வந்தன. இவை அளவில் பெரியவை; சிறகை முற்றிலும் விரித்திருக்கும்போது 5 அடி நீளம் இருக்கும். எங்களைச்சுற்றி வட்டமிட்டபின் இறக்கைகளை மடக்கிக்கொண்டு, எங்கள் அருகில் கடல் நீரின்மீது அமர்ந்தன. உடனே டால்பின் மீன்கள் பாய்ந்து வந்து, பறவைகளைச் சுற்றிச் சுற்றி நெளிந்தன. ஆயினும், பறவைகளும் மீன்களும் ஒன்றையொன்று தொடவில்லை. பாலினீசியாவிலிருந்து தூதராக வந்து எங்களுக்கு நல்வரவு கூறிய முதல் பிராணிகள் இவை. மாலையில் அவை திரும்பிச் செல்லவில்லை. கடல்மீது தங்கிவிட்டன. நள்ளிரவுக்குப் பின்னரும்கூட கரகரத்த குரல்களில் சத்தமிட்டுக் கொண்டிருந்தன.

கட்டுமரத்தின்மீது பறக்கும் மீன்கள் வந்து விழுந்தன. ஆனால், இவை ஒரு புது வகையைச் சேர்ந்தவை. முன்னர் கூறப்பட்ட இனத்தைச் சேர்ந்தவை அல்ல. சற்றுப் பெரியவை. இவ்வகை மீன்களை நான் முன்னரே பாடுஹிவா தீவின் கடற்கரையில் பார்த்திருக்கிறேன்.

மூன்று நாட்கள் இரவும் பகலுமாக பாடுஹிவா இருந்த திசையில் சென்று கொண்டிருந்தோம். பிறகு ஒரு விசையான காற்று அடித்தது. அது எங்களைத் தெற்கிலிருந்த டுவாமோடு பவளத் தீவுகளை நோக்கித் தள்ளிற்று. தெற்கு பூமத்திய கடல் நீரோட்டத்திலிருந்து விலகிவிட்டபடியால், இப்போது கடல் நீரோட்டங்கள் ஒரே சீராய் இருக்கவில்லை. ஒருநாள் நீரில் இருந்த இழுப்பு மறுநாள் மறைந்துபோகும். கண்ணுக்குப் புலனாகாத ஆறுகளைப்போல் இந் நீரோட்டங்-

---

1. Star-fish

கள் பல கிளைகளாகப் பிரிந்து கடலெங்கும் ஓடின. ஓட்டத்தின்விசை அதிகமாய் இருந்தபோது அலைமூட்டமும் அதிகமாய் இருந்தது; நீரின் வெப்பநிலை $1^\circ$ அளவிற்கும் குறைந்திருந்தது.

பாலினீசியாவின் வாயிற் புறத்தை நெருங்கினோம். காற்று எங்களை வரவேற்று, வேகம் குறைந்த ஒரு கிளை நீரோட்டத்தினிடம் எங்கள் கட்டுமரத்தை ஒப்படைத்தது. அதனால் எங்கள் கவலை மிகுந்தது. ஏனெனில், இந்நீரோட்டம் நேரே எங்களைத் தென் துருவத்துக்கு அழைத்துச் செல்வதாய் இருந்தது. கட்டுமரம் ஒரு கணநேரமும் நகராமல் நின்றதில்லை. காற்றின் வேகம் குறைந்தபோதும், சிறிது சிறிதாக முன்னேறிக் கொண்டுதான் இருந்தது. அதேபோல், ஒருநாளாவது வந்த வழியிலே திரும்பி, அமெரிக்காவை நோக்கிச் சென்றதில்லை. 24 மணி நேரத்தில் நாங்கள் பயணம் செய்த குறைந்த தூரம் $10\frac{1}{2}$ மைல்; சராசரி தூரம் 49 மைல்.

எங்கள் பயணத்தின் கடைசிக் கட்டத்தில் இவ்வாறு எங்களைக் கைவிட்டுவிட வியாபாரக் காற்றுக்கே மனமில்லை போலும்! மறுபடியும் எங்களுக்கு உதவ முன்வந்தது. பழுதாய் இருந்த கட்டுமரத்தைத் தள்ளத் தொடங்கியது. நாளடைவில் எங்களைச் சூழ்ந்து பறந்த பறவைக் கூட்டங்கள் அதிகரித்தன. செல்லும் இடத்தைப் பற்றிய நிச்சயம் அற்று, இவை வட்டம் இட்டன. ஒருநாள் மாலை, சூரியன் மறையு முன்னர், பறவைகள் திடீரென்று புத்துணர்ச்சி பெற்று இயங்குவதைப் பார்த்தோம். எங்களையும் பறக்கும் மீன்களையும் சிறிதும் கவனியாமல் அவை மேற்குத் திசையில் பறந்து சென்றன. பாய்த் தூணிலிருந்து அவற்றின் போக்கைக் கூர்ந்து கவனித்தோம். தாம் செல்லும் வழியிலிருந்து சிறிதும் திரும்பாமல், அவை நேரே பறந்து சென்றன. காரணம் எதுவாயினும், குறிப்பிட்ட ஒரு நோக்கத்தோடு அவை சென்றன என்பது ஐயத்திற்கிடமின்றி எங்களுக்குப் புலனாயிற்று.

துடுப்புப் பலகையைச் சுழற்றி, பறவைகள் சென்ற திசையில் கட்டுமரமும் செல்லுமாறு அமைத்துக்கொண்டோம். இரவு முழுதும் பறவைகளின் கீச்சொலியைக்

கேட்டுக்கொண்டே இருந்தோம். அவ்விரவு மறக்கமுடியாத ஓரிரவாக எங்கள் மனத்தில் நிலை பெற்றுவிட்டது. வானமெங்கும் மீன்கள் பூத்துக் கிடந்தன. முழுமதி பெருமிதத்தோடு வானில் நடைபோட்டுக் கொண்டிருந்தது. கோன்டிகியின் பயணத்தில் முழுமதி மூன்ரும் முறையாகக் காட்சி அளித்தது.

அடுத்த நாள் பறவைகளின் எண்ணிக்கை மேலும் அதிகரித்தது. ஆனால் எங்களுக்கு வழிகாட்ட அவற்றை நாங்கள் நம்பியிருக்கவில்லை. தொடுவானில் இப்போது ஒரு புதுமேகம் அசையாமல் காட்சி அளித்தது. மற்ற மேகங்களெல்லாம் மெல்லிய சிறகுகளைப்போல் மிதந்து வந்து, நீலவிதானத்தில் காட்சி அளித்தபின் வியாபாரக் காற்றுடன் சென்று, மேலைத் தொடுவானில் மறைந்தன. ஆனால், தென் மேற்கிலிருந்த தனி மேகம் அசையவேயில்லை. ஓர் அசையாத புகைத் தூண்போல் அது வானில் எழுந்து நின்றது. இத்தகைய மேகங்களுக்கு 'க்யுமுலோ நிம்பஸ்' என்பது இலத்தீன் மொழியில் அமைந்த பெயர். பாலினீசியருக்கு இப்பெயர் தெரியாது. ஆயினும், இம்மாதிரி மேகங்களுக்கு அடியில் நிலப்பரப்பு மறைந்திருக்கும் என்பது அவர்களுக்கு நன்கு தெரியும். ஏனெனில் வெப்பமான பகுதியில் கடும் வெய்யிலின் விளைவாக, காற்று சூடேறி மேல் எழும்புகிறது. உயரத்திலுள்ள குளிர்ந்த பகுதியை அடைந்ததும் அதிலுள்ள நீராவி மேகமாக மாறுகிறது.

அம்மேகத்தை நோக்கிக் கட்டுமரத்தைச் செலுத்தினோம். சூரியன் மறைந்ததும், இருளில் அம்மேகமும் மறைந்து போயிற்று. காற்று ஒரே சீராக அடித்துக் கொண்டிருந்தது. சுக்கான் பலகை இறுகக் கட்டப்பட்டிருந்ததால், யாதொரு உதவியும் இன்றி எங்கள் கோன்டிகி தானாகவே இயங்கியது. காலநிலை சீராக அமைந்திருந்தபோது, நடுக்கடலில் சென்றது போலவே இப்போதும் சரியான பாதையில் சென்றது. இப்போது சுக்கான் பிடித்தவனின் வேலை மிக எளிதாயிற்று. பாய்த்தூணின் அருகில், தேய்ந்து பளபளப்பாக இருந்த, பலகையின்மீது உட்கார்ந்து கொண்டு, நிலப்பரப்பு நெருங்கியதற்கு அறிகுறிகள் காணப்படுகின்றனவா என்று பார்த்துக்

கொண்டிருப்பதைத் தவிர அவனுக்கு வேலையொன்றும் இல்லை.

அன்றிரவு முழுதும், எங்களுக்குமேல் விண்ணிற் பறந்து சென்ற பறவைகளின் ஒலி காது செவிடுபடக் கேட்டுக் கொண்டிருந்தது. தண்மதியும் ஏறக்குறைய முழுமையை எய்திவிட்டது.

---

# தென்கடற் தீவுகளை அடைதல்

ஜூலை மாதம் 30ஆம் நாளுக்கு முந்திய இரவில் கோன்டிகியின் தோற்றமே புதுமாதிரியாகத் தெரிந்தது. வானத்தில் கடற்பறவைகள் காது செவிடுபடக் கூச்சலிட்டுக் கொண்டு பறந்ததுதான், புதிதாக ஏதோ நடக்கப்போகிறது என்பதற்கு முன்னறிவிப்பாக இருந்திருக்க வேண்டும். கடந்த மூன்று மாதங்களாகக் கடல் ஒலியைத் தவிர உயிரற்ற கயிற்றுப் பிணைப்புக்களின் ஓலத்தையே கேட்டுக் கொண்டிருந்தோம். ஆகவே, பல்வேறு குரல்களில் புள்ளினங்கள் பேரிரைச்சலிட்டுக்கொண்டு பறந்தது, நிலப்பரப்பின் ஒரு தனி இயல்பை ஞாபகமூட்டி ஆறுதல் அளித்தது. கட்டுமரம் முன்பின்னாகவும், பக்கவாட்டிலும் அசைந்த போது, அதன் மீதிருந்த எங்களுக்கு வானம் சுழல்வது போன்று ஒருணர்ச்சி ஏற்பட்டது. நீல வானில் இருந்த சந்திரன் பாய்க்கம்பத்தைச் சுற்றிச் சுற்றி வந்தபோது முன்னைவிடப் பெரியதாகவும், குறையற்ற வட்டமாகவும் தோன்றிற்று. தென்னை வகையைச் சேர்ந்த மரங்களும், எங்களைப் போன்ற எழில் உருவங்களும் எங்களுடைய கற்பனைக் கண்முன் தோன்றின. நடுக்கடலில் சில்லிட்ட மீன்களுடன் நாங்கள் காலங்கழித்தபோது வான்மதி இத்தகைய கற்பனைகளைத் தூண்டவேயில்லை.

பாய்க் கம்பத்தின்மீது ஏறிப் பார்த்துக்கொண்டிருந்த பெங்ட், ஆறு மணிக்குக் கீழிறங்கி வந்து, ஹெர்மனை எழுப்பிவிட்டு, உறங்கப் போனான். கயிறுகள் இழுபடுவதால் கீச்சிட்டு அசைந்தாடிக் கொண்டிருந்தன. பாய்க் கம்பத்தின்மீது ஹெர்மன் ஏறியபோது கீழ்வானம் சிவக்க ஆரம்பித்தது. பத்து நிமிடங்களில் கயிற்றேணியின் வழியாக இறங்கிவந்து, அவன் என் காலைப் பிடித்து அசைத்து எழுப்பினான். "வா, உன்னுடைய தீவு எப்படி இருக்கிறது என்று பார்" என்றான். மகிழ்ச்சியால் அவன்

முகம் ஒளி பெற்றிருந்தது. குதித்து எழுந்து, நான் அவனுடன் வெளியிற் சென்றேன். பெங்ட் இன்னும் உறங்கியிருக்கவில்லை; ஆதலால், அவனும் எங்களுடன் வந்தான். ஒருவர்பின் ஒருவராகப் பரபரப்புடன் பாய்க் கம்பத்தின்மீது ஏறினேம். குறுக்குக் கட்டைகள் பிணைக்கப்பட்டிருந்த இடம்வரை ஏறிச் சுற்றுமுற்றும் பார்த்தோம். பல பறவைகள் எங்களைச் சுற்றிப் பறந்தன. இரவின் கடைசி அடையாளமாக ஒரு மெல்லிய இருள் திரை சுற்றுப்புறமெங்கும் பரவி, கடலிலும் கருமை காட்டியது. ஆயினும் கீழ்த்திசையில் தொடுவானம் முற்றும் பரவிக்கொண்டு, ஒரு செம்மை எழுந்து நின்றது. தொலைவில், தென்கிழக்கே, செக்கரின் பின்னமைப்பில் நிழல் போன்ற ஏதோ ஒன்று — கடல் விளிம்பில் வரையப்பட்ட ஒரு சிறு நீலக்கோடு புலனயிற்று.

நிலப்பரப்பு! தீவு! வைத்த கண் வாங்காமல் அதையே விழுங்கி விடுவதுபோல் சிறிதுநேரம் பார்த்துக் கொண்டிருந்தோம். பிறகு, உறங்கிக்கொண்டிருந்த மற்றவர்களையும் எழுப்பி வந்தோம். தூக்கக் கலக்கத்தில் அவர்கள் வெளியே வந்து, எல்லாத் திசைகளிலும் பார்த்தார்கள். கட்டுமரத்தின் முன்பக்கம் ஏதோ ஒரு கடற்கரையை நெருங்கிவிட்டது என்று எண்ணினர்கள் போலும்! கூச்சலிட்டுக்கொண்டு திரிந்த பறவைகள் எங்களுக்கும் தொலைவில் இருந்த தீவுக்கும் பாலம் இட்டதுபோல் வானிற் பறந்தன. தீவின் பின்னல் பரவியிருந்த செவ்வொளி நன்கு பரவியதும், தீவின் உருவம் விளக்கமாகத் தெரிய ஆரம்பித்தது. சூரியன் இன்னும் மேலெழும்பி வந்ததும், நிழலுருவமாகத் தெரிந்த தீவு தங்கத்தின் சுடர் தாங்கிப் பொலிந்தது. எங்கள் கணக்குப்படி இத்தீவு இருக்கவேண்டிய இடத்தில் அது இல்லை என்று நாங்கள் முதலில் எண்ணினேம். ஆனல், ஒரு தீவின் இருப்பிடம் மாருதல்லவா? ஆகவே, இரவில் வடக்கு நோக்கிச் செல்லும் கடல் நீரோட்டத்தில் சிக்கி, எங்கள் கட்டுமரம்தான் தன் பாதையை விட்டு விலகியிருக்கவேண்டும் என்று தீர்மானித்தோம். கடல் அலைகள் நகர்ந்த திசையை ஒருமுறை பார்த்ததுமே, எங்களுக்குக் கிடைக்கவிருந்த வாய்ப்பை இரவில் இழந்து விட்டோமென்று அறிந்தோம். இனித் தீவை நோக்கிக் கட்டுமரம் செல்வதைக் காற்று அனுமதிக்காது.

டுவாமோடு தீவுக் கூட்டத்தைச் சூழ்ந்திருந்த கடலில் விசைமிக்க பல சிறிய நீரோட்டங்கள் இருந்தன. நிலப்பரப்பில் மோதி இவை எல்லாத் திசைகளிலும் வளைந்து திரும்பின. பாறைகளின்மீது முன்பின்னாக ஓடிய விசை மிகுந்த அலைத்தொகுதிகளுடன் மோதும்போது, சிறிய நீரோட்டங்கள் திசை திரும்பிக்கொண்டு வளைந்து சென்றன. சுக்கான் துடுப்பைத் திருப்பி அமைத்தோம். ஆனால், இது பயனற்ற முயற்சி என்பது எங்களுக்குத் தெரிந்ததே. ஏறத்தாழ 6-30 மணி இருக்கும். சூரியன் கடலை விட்டு மேலே கிளம்பினான். பூமத்தியப் பகுதியில் கடலுள்ளிருந்து சூரியன் எழுந்ததும் அம்புபோல் வானத்தில் நேரே உயரச் செல்வதைப் பார்க்கமுடியும். வெண்ணிறமான ஒரு குறுகிய கடற்கரையின் பின்னே நெருக்கமாக மரங்கள் தெரிந்தன. கடற்கரைக் கடலலைகளின் பின்னே பன்முறை மறைந்து மறைந்து தோற்றமளித்தது. எரிக் போட்ட கணக்குப்படி இதுதான் புகா-புகா; டுவாமோடு தொகுதியின் எல்லை. "பசிபிக் தீவுப் பகுதியில் கப்பல் செலுத்த உதவும் குறிப்புக்கள், 1940" என்ற தலைப்புடன்கூடிய ஒரு புத்தகம் எங்களிடம் இருந்தது. அதையும், எங்களுடைய இரு வரைப்படங்களையும், எரிக்கின் புள்ளி விவரங்களையும் கொண்டு இத் தீவின் இருப்பிடத்தை நாங்கள் கணக்கிட்டுப் பார்த்தோம். நான்கு வெவ்வேறான விடைகள் கிடைத்தன. ஆயினும் இப்பக்கத்தில் வேறொரு தீவும் இல்லாதபடியால், இதுதான் புகா-புகா என்பதில் சிறிதும் ஐயமில்லை.

கட்டுமரத்தில் ஆரவாரம் ஒன்றும் காணப்படவில்லை. பாய்த்துணியைச் சரிசெய்துகொண்டு, துடுப்புக் கட்டையை ஒழுங்காக அமைத்துக் கொண்டோம். பின் நாங்கள் அனைவரும் கும்பலாகப் பாய்மரத்தின் அருகிலும் மேல் தளத்திலுமாக நின்று அத்தீவையே வெறித்து நோக்கினோம். சர்வாதிகாரமாக எங்கும் பரந்து கிடந்த கடலின் இடையே திடீரென்று இந்தத் தீவு முளைத்ததோ என்று நாங்கள் வியப்புற்றோம். கடந்த பல மாதங்களில் இவ்வாறு ஒரே இடத்தில் நில்லாமல் நகர்ந்துகொண்டேயிருப்பது இப்பொழுதுதான் முதல் தடவையாகும். தொடுவான வட்டத்தினுள் வெறும் மேல்கீழ் ஆட்டத்துடன் நாங்கள் கிடந்துவிடவில்லை; நகர்ந்துதான் விட்டோம். எங்களுக்கோ தீவு மெல்ல நகர்ந்து வருவதாகத் தோன்றியது.

எங்களை நிலைத்த மையமாய்க் கொண்ட நீலக் கடல் வட்டத்தின் வெறுமையினுள் திடீரென்று நுழைந்துவிட்ட இத்தீவு, கீழ்த்திசையை நோக்கி முன்னேறி, எங்களுடைய ஆட்சிப் பகுதியினுள் குறுக்காக மிதந்து சென்றது. பாலினீசியாவை அடைந்துவிட்டோம் என்ற திருப்தி எங்கள் உள்ளங்களில் நிரம்பிற்று. எதிரில் கிடந்த அத்தீவைச் சிறிது நேரம் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தோம். பிறகு, வேறு வழியின்றி, மேற்கு நோக்கி அசைந்தாடிக்கொண்டு சென்றோம். ஏமாற்றமும் வருத்தமும் மனத்தில் குடிகொண்டன.

சூரியன் உதித்த சிறிது நேரத்திற்கெல்லாம் அத்தீவின் மையத்திற்கு இடதுபுறமிருந்த மரங்களுக்குமேல் அடர்ந்து கருத்த ஒரு புகைப்படலம் எழுந்து நின்றதைக் கண்டோம். அத்தீவில் வாழும் மக்கள் உறக்கத்தினின்றும் எழுந்துவிட்டார்கள். காலை உணவு தயாரிக்கிறார்கள் என்று நினைத்தோம். அவர்கள் எங்களைப் பார்த்தார்கள். தீவுக்கு வரும்படி எங்களை அழைக்கவே இவ்வாறு சங்கேதமாகப் புகை எழுப்புகிறார்கள் என்பது எங்களுக்கு அப்போது தெரியவில்லை. ஏழு மணி இருக்கும். கட்டை ஒன்று எரியும் மணம் இலேசாகக் காற்றில் மிதந்து வந்தது. உப்புப் படிந்து கிடந்த எங்கள் நாசிகளை இம்மணம் தூண்டிவிட்டது. மனத்தில் ஏதேதோ எண்ணச் சுழல்கள் எழுந்தன. அரைமணி நேரம் கழித்து, காடுகளிலிருந்து புதிதாக வெட்டப்பட்ட மரங்கள் எரியும் மணம் வந்து சூழ்ந்தது. தீவு இதற்குள் குறுகி எங்களுக்குப் பின்னால் மறைந்து விட்டது. அவ்வப்போது அத்தீவிலிருந்து வரும் காற்று எங்களை வந்து தீண்டியது. ஏறத்தாழ கால்மணி நேரம் நானும் ஹெர்மனும் பாய்மரத்தடியில் நின்றுக்கொண்டிருந்தோம். பச்சிலைகளின் மணமும், காய்ந்த மண்ணின் இன்பமான மணமும் ஒன்றுசேர்ந்து காற்றினூடு வரவே நாங்கள் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தோம். பெங்ட் இதற்குள்ளாகவே குறட்டை விட்டுத் தூங்கிக்கொண்டிருந்தான். எரிக், டார்ஸ்டைன் ஆகிய இருவரும் குடிசையில் மல்லாந்து கிடந்தவாறே ஆலோசனையில் ஆழ்ந்திருந்தனர். நுட் இங்குமங்கும் ஓடுவதும், இலைகளின் மணத்தை நுகருவதும், தனது குறிப்பேட்டில் எழுதுவதுமாக இருந்தான்.

8-30 மணிக்கு எங்களுக்குப் பின்னுல் புகா-புகா கடலில் அமிழ்ந்து மறைந்தது. ஆயினும் 11 மணி வரையிலும் கீழ்த்திசையில் தொடுவானத்தின்மீது ஒரு நீலக் கோடு தெரிந்துகொண்டேயிருந்தது. பிறகு, அதுவும் மறைந்தது. கறுத்து, வானளாவிநின்ற ஒரு மழை மேகம் மட்டிலும் புகா-புகா இருந்த இடத்துக்கு அடையாளமாக நின்றது. பறவைகள் காணப்படாது ஒழிந்தன. டால்பின்களும் முன்னைக்கு இப்போது எண்ணிக்கையில் குறைந்துபோயின. கட்டுமரத்தின் அடியில் நீந்திய வழிகாட்டி-மீன்களும் மிகச் சிலவே. அன்றிரவு, ஒரு மேசையும் ஒரு நாற்காலியும் தனக்கு வேண்டுமென்று பெங்ட் கூறினுன். ஏனெனில், புத்தகங்களைப் படிப்பதில் பெரு விருப்பு உடையவன் அவன். மல்லாந்தும், குப்புறத்திரும்பிக்கொண்டும் படிப்பது அவனுக்குக் களைப்பூட்டுவதாய் இருந்தது. அருகில் காணப்பட்ட தீவில் இறங்கும் வாய்ப்பை இழந்ததைப்பற்றி அவன் வருத்தம் அடையவில்லை. காரணம், இன்னும் மூன்று புத்தகங்களை அவன் படிக்க வேண்டியிருந்ததே.

டார்ஸ்டைனுக்குத் திடீரென்று ஆப்பிள் சாப்பிடவேண்டும் என்ற ஆசை எழுந்தது. வாய்க்கு இனிய விருந்தின் நறுமணத்தை முகர்ந்ததாகக் கனவு கண்டு, அன்றிரவு நான் விழித்துக்கொண்டேன். மறுநாட் காலையில் அடிவானத்தருகில் நீராவி இயந்திரத்திலிருந்து மேலெழும் புகை மண்டலத்தைப் போன்ற இரு புதிய மேகங்களைக் கண்டோம். வரைப்படத்தைப் பார்த்து, இவ்விரு மேகங்களும் ஃபங்காஹினு, அங்கடாவ் என்னும் இரு தீவுகளிலிருந்தும் எழுந்தவை என்று தெரிந்துகொண்டோம். அங்கடாவிலிருந்து எழுந்த மேகத்தை நோக்கிச் சென்ருல் காற்றடிக்கும் திசையிலேயே நகருவோம். ஆகவே, அதன் திசைக்குத் தக்கபடி கட்டுமரத்தை அமைத்துக்கொண்டு துடுப்புக் கட்டையை பலமாகக் கட்டிவிட்டு, பசிபிக்கின் தனிமையையும் அமைதியையும் வியந்து நின்ருேம். நேர்த்தியான கால நிலை அமைந்து விட்டால், கோன்டிகியின் மூங்கில் தளத்தில் வாழ்க்கை மிகவும் இன்பமாயிருக்கும். முடிவு எவ்வாருயினும், பயணம் விரைவில் முடிவுறும் என்று நினைக்க நினைக்க எங்கள் மகிழ்ச்சி அதிகரித்தது. வரம்பற்ற கடல் வெளியின் வனப்பை விடாமல் பருகினேம். மூன்று பகல்களும் மூன்று இரவுகளும் அம்மேகத்தை நோக்கிச் சென்று கொண்டே

இருந்தோம். கால நிலை மிகவும் உதவியாய் அமைந்தது. துடுப்புக் கட்டை ஒன்றே எங்களைச் சரியான திசையிற் செலுத்தியது. கடல் நீரோட்டம் எங்களை ஏமாற்றி அலைக் கழிக்க வில்லை.

நான்காம் நாளன்று ஹெர்மனின் வேலை முடிந்ததும் டார்ஸ்டைன் அவனுக்குப் பதில் வேலை செய்யத் தொடங்கினான். நிலவொளியில் ஒரு தாழ்ந்த தீவின் மங்கிய தோற்றம் தனக்குத் தெரிந்ததாக ஹெர்மன் அவனிடம் கூறினான். இதற்குப்பின் சிறிது நேரத்துக்குள் சூரியன் உதித்ததும் டார்ஸ்டைன் குடிசைக்குள் நுழைந்து 'நிலப்பரப்பு' என்று கத்தினான். நாங்கள் அனைவரும் தளத்திற்கு வந்தோம். எதிரில் தெரிந்த தோற்றத்தைக் கண்டதும், எங்களிடமிருந்த தேசீயக் கொடிகளை உயர்த்தினோம். கட்டுமரத்தின் பின்பகுதியில் நார்வீஜியக் கொடியையும், பாய்மரத்தின் மீது பிரெஞ்சுக் கொடியையும் பறக்கவிட்டோம். ஏனெனில், நாங்கள் செல்லும் தீவு பிரெஞ்சு ஆட்சிக்குட்பட்டது. வியாபாரக் காற்று அடிக்கவே, கொடிகள் யாவும் பறந்தாடின. அமெரிக்கா, பிரிட்டன், பெரு, ஸ்வீடன் ஆகியவற்றின் கொடிகளையும் பறக்கவிட்டோம். பல வண்ணங்கள் கொண்ட அழகியதோர் பொருளாகக் கோன்டிகி காட்சியளித்தது.

இப்போது நாங்கள் செல்லும் திசையில், எங்களுக்கு நேரெதிராகவே தீவு அமைந்திருந்தது. நான்கு நாட்களுக்கு முன் புகா புகா தென்பட்டபோது, அதற்கும் எங்களுக்கும் இருந்த தொலைவைவிடச் சற்று அதிகத் தொலைவில் இப்போது அங்கடாவ் தோற்றமளித்தது. எங்களுக்குப் பின்னால் சூரியன் உதித்து நேரே வானில் எழுந்தபோது, இத்தீவின்மீது சூழ நின்ற மூடுபனியில் தெளிவானதொரு பச்சை வண்ணம் தெரிந்தது. வளைவான பாறைகளுக்கு இடையே உள்ள பரந்த பசும் நீர்த்தேக்கங்களின் பிரதிபிம்பமே இது. தாழ்வான நீர்த்தேக்கங்களின பிரதிபிம்பங்கள் வானில் பல்லாயிரம் அடி உயரம் வரை கூடத் தெரிவதுண்டு.

10 மணி சுமாருக்குத் துடுப்புப் பலகையின் பொறுப்பை நாங்கள் எல்லோரும் ஏற்றுக்கொண்டோம். தீவின் எந்தப்

பகுதிக்குக் கட்டுமரத்தைச் செலுத்த வேண்டும் என்பதை நாங்கள் நிச்சயிக்கவேண்டியிருந்தது. இப்போது தனி மரங்களின் உச்சிக் கிளைகளை நாங்கள் கண்டோம். இத் தீவுக்கும் எங்களுக்கும் இடையில் ஓர் அபாயகரமான பாறை நீருக்கடியில் மூழ்கிக் கிடந்தது. பேரலைத் தொகுதிகள் இப்பாறையில் மோதியதும், சிதறிச் சமநிலை அற்றவையாய், வானத்துள் பம்பிப் பின் பேரிரைச்சலுடன் விழுந்து நுரைத்துச் சுழித்துக்கொண்டு, கூரிய பவளப் பாறைகளின்மீது வழிந்தோடின. இப் பாறைக்கருகில் கடல்நீரின் இழுப்பில் சிக்கி மோதுண்டு சுக்கு நூருகிய கப்பல்களின் எண்ணிக்கை எத்தனையோ! கடலிலிருந்து பார்க்கும்போது, மறைந்திருந்த இந்த வஞ்சம் எங்களுக்குப் புலனாகவில்லை. அலைகள் அழைத்துச் சென்ற பாதையிலேயே நாங்களும் சென்றுகொண்டிருந்தோம். அலைகளின் வளைந்த மேற்பகுதிகள் ஒவ்வொன்ருய்ச் சென்று தீவின் அருகில் மறைந்தது தான் எங்கள் கண்ணிற்பட்டது. மறைந்திருந்த பாறையும், அதன் சுற்றுப்புறத்தில் கடல்நீர் நுரைகளைக் கக்கிக் கொண்டு ஆடிய பேயாட்டமும் எங்களுக்கு முன் சென்ற அகன்ற அலைகளின்பின் மறைந்தன. ஆயினும், அத் தீவின் பக்கவாட்டில் இரு ஓரங்களிலும் இருந்த கடற்கரையை நாங்கள் காண முடிந்தது. கடற்கரைக்கு அருகே கடல் பொங்கிக் கொதித்து வெண் நுரையுடன் ஆகாயத்தில் எழும்பி விழுவதைக் கண்டோம். தீவின் தென்புறமாகக் கடலுள் மூழ்கியிருந்த பாறைகளின் பிடியில் அகப்படாமல், சற்றுத் தொலைவிலேயே மிதந்து சென்ருேம்.

இவ்வாறு சிறிது தூரம் சென்றதும், மெல்லத் திரும்பி, காற்றடிக்காத தீவின் பின் பகுதிக்குச் சென்று விடலாம் என்று நம்பினோம். அவ்வாறு செய்ய இயலாது போயினும், பாதுகாப்பான ஓரிடத்தில் சென்று ஒதுங்கிக் கொண்டால், சிறிது நேரம் காத்திருந்து, பிறகு காற்று உதவும்போது தீவின் பின்பகுதிக்குச் செல்லலாம் என்று திட்டமிட்டோம். நடுப்பகலில் தொலை நோக்கியின் மூலம் பார்த்தோம். கரையில் இளந் தெங்கு நெருக்கமாய் வளர்ந்திருந்தது; அதற்கு முன்னால் சிறிய தாவர வகைகளின் அடர்ந்த பசுமை தெரிந்தது; அதற்கும் முன்னால் கடற்கரையின் பளபளத்த மணலில் பல பெரிய பவளப் பாறைகள் சிதறுண்டு கிடந்தன. தென்னைக் கீற்றுக்களின்மேல் சில வெண்ணிறப்

புள்ளினங்கள் பறந்து கொண்டிருந்தன. வேறொரு உயிர்வகையும் காணப்படவில்லை.

சுமார் 2 மணி இருக்கும். தீவை நாங்கள் மிகவும் நெருங்கிவிட்டோம். நீரில் மறைந்து நின்ற பாறைகளின் விளிம்புக்குச் சற்றுத் தொலைவில், தீவின் கரைக்குச் சம தூரத்திலேயே நாங்கள் நகரத் தொடங்கினோம். அருகில் நெருங்க நெருங்க அலைகள் உறுமி எழும் ஒலி நன்றாகக் கேட்டது. அவை பாறைகளில் மோதியபோது சில சமயங்களில் நீர் வீழ்ச்சியைப் போலவும், வேறு சில சமயங்களில் புகைவண்டி கூவுவது போலவும் ஒலித்தன. எங்களில் இருவர் துடுப்புப் பலகையைச் சரியானபடி திருப்புவதற்காகப் பின்னால் நின்றனர். குடிசைக்குப் பின்னால் நின்றதால் கட்டுமரத்தின் பாதையில் உள்ள எதையும் அவர்களால் காணமுடியவில்லை. எரிக் சமையல் பெட்டியின் மீது நின்றுகொண்டு, கனமான துடுப்புக் கட்டையை வலித்துக் கொண்டிருந்த இருவருக்கும் உத்தரவுகள் இட்டுக்கொண்டிருந்தான். அபாயகரமான அப்பாறைக்கு அருகே செல்லவேண்டும்; ஆனால், யாதொரு விபத்தும் நேராதபடிப் பாதுகாப்பாகச் செல்லவேண்டும் என்பதுதான் எங்கள் திட்டம். கட்டுமரத்தை உட்செலுத்திக்கொண்டு செல்வதற்காக, மூழ்கியிருந்த பாறைத்தொடரில் எங்கேனும் ஒரு பிளவு அல்லது இடைவெளி இருக்கிறதா என்று அறிய பாய்மரத்தின் மீதேறிக்கொண்டு நாங்கள் கூர்ந்து கவனித்தோம். இப்போது கடல் நீரோட்டம் எங்களைப் பாறைத் தொடரின் விளிம்போரமாகவே இழுத்துச் சென்றது. வஞ்சச் செயல்கள் ஏதும் புரியவில்லை.

தளர்வாயிருந்த நடுப்பலகைகளின் உதவியால் காற்றின் திசைக்கு 20° சாய்வாகக் கட்டுமரத்தைச் செலுத்த முடிந்தது. காற்று பாறைத்தொடருக்குச் சம தூரத்திலேயே அடித்துக்கொண்டிருந்தது. கட்டுமரத்தைப் பாறைக்கு எவ்வளவு அருகில் செலுத்த முடியுமோ, அவ்வளவு அருகில் செலுத்திக்கொண்டிருந்தான் எரிக். ஹெர்மனும் நானும் கட்டுமரத்தில் கட்டப்பட்டிருந்த ஒரு நீண்ட கயிற்றில் ரப்பர்ப் படகைக் கட்டினோம்; அதில் ஏறிக்கொண்டு கடலில் சென்றோம். கட்டுமரம் ஒரு வளைவின் முடிவில் திரும்பியபொழுது, எங்கள் ரப்பர்ப்படகு பேரிடிபோல் முழக்கமிட்டுக்

கொண்டிருந்த பாறையை மிகவும் அணுகியது. பச்சைக் கண்ணுடியாற் செய்த பெருஞ் சுவர்போல் எழுந்து விழுந்து உருண்டோடிய நீரையும், நீர் வழிந்து சென்றதும் வெளியிற் சற்றுத் தெரிந்த மொட்டையான பாறையின் மேற்பகுதியையும் கண்டோம். இரும்பினுற் செய்யப்பட்ட பேரணையொன்று சரிந்துபோய் துருப்பிடித்திருந்தாற் போலத் தோற்றமளித்தது அப்பாறைத் தொடர். எங்கள் கண்ணுக்கு எட்டியவரை அத்தொடரில் இடைவெளி ஏதும் காணப்படவில்லை.

ஆகவே, எரிக் மறுபடியும் பாய்த்துணியைச் சரிசெய்து கட்டவேண்டியிருந்தது. ஓயாமல் துடுப்பு வலிக்கப்பட்டது. கோன்டிகி தன் முகத்தைத் திருப்பிக்கொண்டு, பாறைப் பகுதியை விட்டு விலகிச்சென்றது. சிறிது தூரம் சென்றதும் வளைந்து வந்து, வேறு எங்காவது இடைவெளி இருக்குமா என்று துருவிப் பார்த்தோம். இவ்வாருக கோன்டிகி பாறைத் தொடரை அணுகுவதும், பின் விலகிச் செல்வதுமாக இருந்தது. ரப்பர்ப் படகில் இருந்த எங்கள் இருவருக்கும் அடிக்கடி பயம் தோன்றியது. அலைகளின் ஊழிக் கூத்தைப் படகு நெருங்கும்போதெல்லாம் எங்கள் நம்பிக்கையில் பேரிடி விழும். அலைகள் மேலும் மேலும் உயரக் கிளம்பின.

இதோ! இம்முறை எரிக் அளவுகடந்து பாறைகளை நெருங்கிவிட்டான். இனிமேல் தப்ப முடியாது. பேய்போற் சிவந்து பரந்த பாறைகளிடம் அலைகள் எங்களை இழுத்துச் சென்றுவிடும் என்று எண்ணினேம். ஆனல், எரிக் மிகவும் சாமர்த்தியமாகக் கட்டுமரத்தைச் செலுத்திக்கொண்டு சென்ருன். கரைக்குச் சமதூரத்திலேயே நாங்கள் நகர்ந்து கொண்டிருந்தமையால், அங்கிருந்த பொருள்கள் யாவும் விளக்கமாகப் புலப்படலாயின. வனப்பில் விண்ணுலகை ஒத்த அத்தீவை நெருங்கவொட்டாமல் பாறைத் தொடர் தடுத்து நின்றது; நுரையை எழுப்பிக்கொண்டு சீறியது. சுமார் 3 மணிக்கு நாங்கள் பார்த்தபோது, கரையில் இருந்த தென்னந்தோப்பில் ஓர் இடைவெளி தெரிந்தது. அவ்விடைவெளியினூடே பார்த்தோம். உள்ளேயிருந்த நீலக்கண்ணுடி போன்ற உப்பங்கழித் தேக்கம் தென்பட்டது.

வேறு வழியில்லாமல் பாறைத்தொடரைத் தாண்டிச் சென்றோம். கரையிலிருந்த தென்னந்தோப்பு மேலும் நெருக்கமாகத் தோன்றியது. பின்புறமிருந்து காற்று உந்தித்தள்ள, மெல்ல தீவின் கரையோடு சென்று-கொண்டேயிருந்தோம். சிறிது தூரம் சென்றதும், தென்னை மரங்களின் நெருக்கம் குறைந்தது; பவளத்தீவின் உட்பகுதி எங்களுக்குத் தெரிய ஆரம்பித்தது. வெகு அழகான வண்ணம் படைத்த ஓர் உப்பங்கழி அங்கிருந்தது. கடலாட வசதியான கரையும், முன்னும் பின்னும் அசைந்தாடிக் கொண்டிருந்த தெங்கின் நெருக்கமும் மனத்தைக் கொள்ளை கொண்டன. பசுமை பரவிய அத்தீவு வளையம்போன்ற உருவங்கொண்டது. உள்ளே வாவென்று அழைக்கும் உப்பங்கழி; அதைச் சுற்றி அகன்ற மிருதுவான மணற்-பரப்பு; அதற்கும் வெளியே, சுவர்க்கத்தின் வாயிலைக் காக்கும் சிவந்த வாளொக்கும் பாறை வளையம்—இத்தனை-யும் அமைந்திருந்தன.

நாள் முழுதும் அங்கடாவின் அருகே செல்வதும் விலகி வருவதுமாக வளைந்து வளைந்து திரும்பினோம். மூங்கிற் குடிசைக்கு வெளியே நின்று மிக அருகில் காட்சியளித்த இத்தீவைக் கண்டபோது, கதிரவனின் ஒளி தென்னை மரங்-களின்மீது விழுந்து சிதறியது. தீவினுள் சுவர்க்கத்தின் இன்பம் தாண்டவமாடியது. எரிக் மூங்கில் தளத்தில் நின்று கொண்டான்; பெருநாட்டுக் குடைத்தொப்பி ஒன்றை தலையில் வைத்துக்கொண்டு சூரிய வெப்பத்தையும் பொருட்-படுத்தாமல் நின்றான்; தன்னுடைய கிதாரை எடுத்து, தென்கடற் தீவுகளின் அழகுக்கேற்ப இசை எழுப்பினான். பெங்ட் கட்டுமரத்தின் விளிம்பில் ஒரு முதல்தரமான சாப்-பாட்டைத் தயாரித்துப் பரிமாறினான். பெருவிலிருந்து கொண்டுவந்திருந்த ஒரு பழந்தேங்காயை உடைத்தோம். தீவிலிருக்கும் மரங்களில் குலைகுலையாய் நின்ற இளந் தேங்-காய்களுக்கு வாழ்த்துப் பாடி அதைக் குடித்தோம். காலூன்றி அசையாது கரும்பசுமை தேக்கிப் பளபளத்த தெங்கின் தொகுப்பில் தங்கிய அமைதி; மரங்களின் உச்சி-யில் மிதந்ததுபோல் மெதுவாகப் பறந்த வெண்ணிறப் பறவைகளின் சாந்தி; கண்ணாடி போன்ற உப்பங்கழியின் மீதும் மிருதுவான மணற்கரையிலும் நிலவிய மோனம்;

கனல்வதுபோல் சிவந்த பவளப் பாறையின் தெளிந்த சீற்றத்தின் சாயை; பீரங்கி வெடியைப்போல் பாறைகளை மோதி அடிக்கும் அலைகள் எழுப்பும் சப்தம்—இவை யாவும் ஒன்று சேர்ந்து எங்கள் உள்ளத்தில் அழியா ஓவியமாகப் பதிந்துவிட்டன.

பயணத்தின் ஒரு முக்கியமான கட்டத்திற்கு வந்துவிட்டோம் என்பதில் இன்னும் ஐயம் இருக்க முடியுமா? தென் கடற் தீவுகளுக்கே உரித்தான எல்லா அழகுகளையும் பெற்றிருந்த இதைப் போன்றதொரு தீவைக் காணுதல் மிகவரிது. கரையில் இறங்கினாலும் சரி, இறங்காவிடினும் சரி, பயணம் முடிந்துவிட்டது என்பதுமட்டும் உறுதி. பாலினீசியாவுக்கு வந்துவிட்டோம். பரந்த கடலைப் பின்னால் விடுத்து முன்னேறியாகிவிட்டது. இன்று பயணம் தொடங்கிய 97-வது நாள். பெருவிற்கு மிக அண்மையிலுள்ள பாலினீசியத் தீவை அடைய, எங்கள் மனம்போல் அதிருஷ்டமும் அமைந்துவிட்டால், 97 நாட்கள் வேண்டியிருக்கும் என்று நியூயார்க்கில் நாங்கள் கணக்கிட்டிருந்தோம்.

5 மணி சுமாருக்குக் கடற்கரையில் இருந்த மரங்களுக்கு இடையில் தென்னங் கீற்றுக் குடிசைகள் இரண்டினைக் கண்டோம். அவற்றினருகில் புகை ஏதும் எழவில்லை. உயிரினங்கள் அவற்றுக்கருகில் இருந்ததாகவும் தெரியவில்லை. 5-30 மணி சுமாருக்கு மீண்டும் கட்டுமரம் பாறைத் தொடரை நெருங்கியது. இப்போது நாங்கள் தீவின் மேல்பகுதிக்கு அருகில் இருந்தோம். வழிமறித்து நின்ற பாறையில் வழி கண்டுபிடிக்கும் முயற்சியில் கடைசி கட்டம் இப்போது தொடங்கிற்று. சூரியன் மிகவும் கீழிறங்கிவிட்டது. மேற்குத் திசையில் எங்கள் பார்வை சென்றபொழுது, சூரியனின் பேரொளியினால் எங்கள் கண்கள் மங்கின. தீவின் மேல்புற விளிம்புக்கு அருகில், பாறைகளின் மேல் அலைகள் மோதி விழுந்த இடத்தில், வானவில் ஒன்று தெரிந்தது. பாறைப்பகுதி எங்களுக்கு எதிரில் நிழற்படம் போல் தோற்றம் அளித்தது. தீவின் கடற்கரையில் கொத்தாக நின்ற சில கரும்புள்ளிகள் தென்பட்டன. திடீரென்று அவற்றில் ஒன்று கடல்நீரை நோக்கி மெல்ல அசைந்து வந்தது. மற்றுஞ் சில வேகமாக வானப்பகுதியின் எல்லைப் புறமாக ஓடின. கூர்ந்து பார்த்தபோது கரும்புள்ளிகளாகத்

தெரிந்தவை மனித உருவங்களே என்று அறிந்தோம். பாறைக்கு எவ்வளவு அருகில் செல்லமுடியுமோ, அவ்வளவு நெருங்கினேம். காற்று அடிப்பது நின்றது.

கரையிலிருந்து ஒரு நீண்ட படகு கடலில் இறக்கப்படுவதைப் பார்த்தோம். இருவர் படகினுள் குதித்து, வெகு வேகமாக எங்களை நோக்கி வந்தார்கள். சிறிது தூரம் வந்ததும், படகை ஒருபுறமாகத் திருப்பிக் கொண்டார்கள். அலைகளின் மீதேறிய படகு, பாறைத் தொடரிலிருந்த ஓர் இடைவெளி வழியே அம்புபோலப் பாய்ந்து எங்களைநோக்கி முன்னேறியது. ஆகவே, பாறைத் தொடரின் அப்பகுதியில் ஓர் இடைவெளி இருக்கிறது என்று அறிந்து மகிழ்ந்தோம். விரைவில் தென்னை மரங்களிடையே அமைந்திருந்த கிராமம் முழுவதையும் கண்டோம். ஆனல், அதற்குள் சூரியன் மறையும் நேரமாய்விட்டது. படகில் இருந்தோர் கைகளை அசைத்தனர். நாங்களும் கைகளை அசைத்துப் பதிலளித்தோம். அவர்களுடைய வேகம் அதிகரித்தது. அவர்களைக் கொண்டு வந்தது ஒரு நீண்ட பாலினீசியப் படகு. கறுத்த இருவர் படகு செல்லும் திசையை நோக்கியவாறு உட்கார்ந்து துடுப்பு வலித்தனர்.

ஒருவர் மொழி ஒருவருக்குத் தெரியாமற் போவதால் ஏற்படும் தொல்லைகள் மீண்டும் எங்களுக்கு நேரப் போகின்றன. ஃபாடுஹிவாவில் இருந்த பழக்கத்தால் எனக்கு மட்டிலும் மார்க்கிஸா மொழியிற் சில சொற்கள் தெரியும். பாலினீசிய மொழி எளிதன்று; பழக்கம் அற்றுப் போனல் விரைவில் மறந்துபோகும். இதைப்பற்றி யெல்லாம் நாங்கள் சிந்தித்துக் கொண்டிருந்தபோதே படகு வேகமாய் வந்து கட்டுமரத்தோடு மோதிற்று. படகில் இருந்த இருவரும் கட்டுமரத்திற்குள் குதித்தார்கள். ஒருவன் பல் இளித்துக் கரிய தன் கையை நீட்டியவண்ணம் ‘குட்-நைட்’ என்று ஆங்கிலத்தில் கூறினன். அது எங்களுக்குத் திருப்தியையும் வியப்பையும் அளித்தது. “குட்-நைட். உனக்கு ஆங்கிலம் தெரியுமா?” என்று நான் அவனைக் கேட்டேன். அம் மனிதன் மீண்டும் பல்லை இளித்துக்கொண்டு தலையை மேலும் கீழும் அசைத்தான். ‘குட்-நைட்’ என்று மீண்டும் மீண்டும் கூறினன். அன்னிய மொழிகளில் அவனுக்குத் தெரிந்திருந்தது அச்சொல் ஒன்றே. ஆனல், அதைக்-

கொண்டே அவன் தன் தோழனைத் தோற்கடித்துவிட்டான் என்பது அவர்களுடைய முகங்களிலிருந்து தெரியவந்தது. அவனுடைய பன்மொழிப் புலமையையும் அனுபவ முதிர்ச்சி-யையும்கண்டு, அவனுடைய தோழன் வியப்பால் வாயடங்-கிப்போய் ஒதுங்கி நின்றான்; அடிக்கடி பல் இளித்தான். தீவைச் சுட்டிக்காட்டி, "ஆங்கடாவா ?" என்று கேட்டேன். "ஆங்கடாவ்" என்று அவன் தலையை அசைத்து ஆமோ-தித்தான். எரிக் பெருமிதத்துடன் தலையைப் பன்முறை ஆட்டினான். காரணம், அவன் கணக்கிட்டுக் கூறியிருந்-தவை யாவும் சரியென நிரூபிக்கப்பட்டு விட்டதேயாம். அவன் எதிர்பார்த்தபடியே நாங்கள் பயணம் செய்து முடித்-திருக்கிறோம் என்பதால் அவனுக்கு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்-பட்டது சரிதானே !

"மை......மை......ஹிஇயூடா" என்று நான் சொன்-னேன். 'கரைக்குப் போகப் பிரியப்படுகிறேன்' என்பது அதன் பொருள். அவர்கள் இருவரும் பாறைத் தொடரில் மறைந்திருந்த ஓர் இடைவெளியைச் சுட்டிக் காட்டினர். துடுப்புப் பலகையைச் சரியாக அமைத்துக்கொண்டு எவ்வாறேனும் உட்புகலாம் என்று முனைந்தோம். அப்போது தீவின் உட்பக்கத்திலிருந்து திடீரென்று காற்று அடிக்க ஆரம்பித்தது. உப்பங்கழியின் மீது ஒரு சிறிய மழைமேகம் கவிந்து கொண்டிருந்தது. காற்று எங்களைப் பின்னுக்குத் தள்ளிவிடப் பார்த்தது. இடைவெளியை அடைவதற்கு உதவியாகச் சரியான கோணத்தில் துடுப்புப் பலகையை அமைத்தும், கோன்டிகி எங்கள் விருப்பத்திற்குக் கட்டுப்-பட்டு நடக்கவில்லை. நங்கூரம் பாய்ச்ச முயன்றோம். நங்கூரக் கயிற்றின் நீளம் போதவில்லை. ஆகவே, துடுப்பு வலிப்-பதைத் தவிர வேறு வழியில்லை. காற்றின் பிடியில் சிக்கிக் கொள்வதற்குமுன் துடுப்புத் தள்ளவேண்டி நேரிட்டது. ஒரு நொடிக்குள் பாய்த்துணியை இறக்கிவிட்டு ஆளுக்-கொரு பெரிய துடுப்பை எடுத்துக்கொண்டோம். தீவி-லிருந்துவந்த இருவருக்கும் கூடத் துடுப்புக் கொடுக்க நான் விரும்பினேன். அவர்களுக்குச் சில புகையிலைச் சுருட்டுக்-களைத் தந்தோம். அவற்றைப் புகைத்து அனுபவித்துக் கொண்டே அவர்கள் நின்றார்கள். நான் துடுப்புத் தள்ளச் சொன்னதும் அவர்கள் வேகமாய்த் தலையை அசைத்து

விட்டுச் செல்லவேண்டிய திசையையே மீண்டும் சுட்டிக் காட்டினார்கள். அவர்கள் முகத்தில் குழப்பத்தின் அறிகுறி-கள் தெரிந்தன. நாமெல்லோரும் துடுப்புத் தள்ளித்தான் ஆகவேண்டும் என்று மறுபடியும் சொன்னேன். பிறகு அவ்விருவரில் முதியவன் கீழே குனிந்து, வலது கையைச் சுழற்றிக் காண்பித்து, 'ப்ர்ர்ர்ர்...' என்று கூவினான். அதன் பொருள், "இயந்திரச் சக்கரத்தைச் சுழலச் செய்ய வேண்டும்," என்பதேயாகும். ஏராளமான சாமான்களை நிரப்பிக் கொண்டு உருமாறியிருந்த கோன்டிகியை ஓர் இயந்திரப் படகு என்று அவர்கள் எண்ணினார்கள். கட்டு-மரத்தின் பின்புறத்திற்கு அவர்களை அழைத்துச் சென்-றோம். உலோகத்துடுப்பு, சுழலும் சக்கரங்கள் ஆகியவை இல்லை என்பதை அவர்கள் உணரும் வகையில், பின் கட்டைகளுக்கு அடியில் தடவிப் பார்க்கச் சொன்னோம். அவர்கள் வியப்பால் பேச்சற்று நின்றனர்.

பிறகு சுருட்டுக்களை எறிந்துவிட்டு, தீவினர் கட்டுமரத்-தில் பக்கத்திற்கு ஒருவராக அமர்ந்தனர். இருவோரங்-களிலும் விளிம்புக்கு நால்வராக அமர்ந்துகொண்டு முழுப் பலத்துடன் துடுப்புத்தள்ள ஆரம்பித்தோம். அதே சமயத்-தில் சூரியன் கடலில் ஆழ்ந்தது. தீவுக்கு உட்புறமிருந்து வீசிய காற்றுகள் இதற்குள் பலமடைந்துவிட்டன. எங்க-ளுடைய முயற்சிகள் வெற்றி பெறுமென்று தோன்றவில்லை. ஓரங்குலம்கூட எங்களால் முன்னேற முடியவில்லை. தீவி-லிருந்து வந்த இருவரும் திகில் அடைந்தார்கள். சட்டென்று தங்கள் படகில் குதித்து, வேகமாகத் துடுப்புத் தள்ளிக் கொண்டு, தொலைவில் போய் மறைந்தனர். இருள் கவிந்-தது. மறுபடியும் நாங்கள் தனியே விடப்பட்டோம். காற்று எங்களைக் கடலுக்குள் அடித்துச் செல்லாமல் தடுக்கப் பெரிதும் போராடினோம்.

இருள் அதிகரித்தபின், நான்கு படகுகள் பாறை இடை வெளியின் மூலம் எங்களை நோக்கி வந்தன. வெகு விரைவில் பாலினீசியரின் கூட்டமொன்று கட்டுமரத் தளத்தின்மீது ஏறியது. அவர்கள் எங்களுடன் கை குலுக்-கவும், சுருட்டுப் புகைக்கவும் விரும்பினர். இவர்களுக்குத் தீவின் அமைப்பைப்பற்றி நன்கு தெரியுமாதலால் எங்க-ளுடைய பயம் ஒழிந்தது. எங்களைக் கடலுக்குள் செல்-

லும்படி இவர்கள் விடமாட்டார்கள்; அன்று மாலையே கரைக்குப் போய்விடலாம் என்று நம்பிக்கை கொண்டோம். நான்கு படகுகளின் பின்புறங்களும் கோன்டிகியின் முன்பாகத்துடன் கயிறுகளால் பிணைக்கப்பட்டன. பின், அவை விசிறி அமைப்பில் தங்களை அமைத்துக்கொண்டு, கட்டு மரத்தைத் தீவை நோக்கி இழுத்துச் செல்ல முயன்றன. நுட் ரப்பர்ப் படகில் இறங்கி, அதை இழுக்கும் படகுகளுடன் சேர்த்துக் கொண்டான். நாங்கள் கோன்டிகியின் இரு ஓரங்களிலும் அமர்ந்து துடுப்புத் தள்ளத் தொடங்கினோம். இவ்வாறு கிழக்கிலிருந்து முதன் முறையாக வந்த காற்றுடன் பலத்த போராட்டம் ஆரம்பிக்கப்பட்டது. இதுவரை எங்களுக்கு உதவியாகப் பின்னிருந்துத் தள்ளிக் கொண்டுவந்த காற்றை இப்போது எதிர்க்கும் முயற்சியில் ஈடுபட்டோம். இதற்குள் காரிருள் மூடிக்கொண்டது.

வானில் மதி எழுவதற்குச் சிறிது நேரம் பிடித்தது. காற்றின் விசை அதிகரித்தது. பாறைத் தொடரில் இருந்த இடைவெளியை நாங்கள் காணும் பொருட்டுக் கரையில் இருந்தோர் சுள்ளிகளைப் பொறுக்கி ஒரு பெருந் தீ மூட்டினார்கள். பவளப் பாறைகளின்மேல் அலைமோதும் முழக்கம் இருளில் ஒரு பெரும் நீர்வீழ்ச்சியின் பேரிரைச்சலைப்போல் இடைவிடாமல் ஒலித்துக் கொண்டிருந்தது. சிறிது நேரத்துக்கு அவ்விரைச்சல் மெல்ல மெல்ல அதிகரித்தது. எங்களுக்கு முன்னால் படகுகளில் அமர்ந்து எங்கள் கோன்டிகியை இழுத்துச் சென்ற பாலினீசியர்களை எங்களால் பார்க்க முடியவில்லை. ஆயினும், உற்சாகமூட்டும் போர்ப் பாடல்களை அவர்கள் தொண்டை கிழியப் பாடினார்கள். நுட்டின் குரலும் அதில் கலந்திருந்தது. பாலினீசியச் சங்கீதம் சற்று நின்றபோதெல்லாம், நுட்டின் குரல் நார்வீஜிய நாட்டுப் பாடல்களை எழுப்பிப் பின்னர் பாலினீசியரின் இசையிற் கலந்து ஒன்றிப்போவதை நாங்கள் கவனித்தோம். அவ்வப்போது நாங்களும் தாமஸ் ப்ரௌன் என்பார் இயற்றிய பாடல்களைப் பாடியது, இந்த அமளிக்குச் சிகரம் வைத்தாற்போல் இருந்தது. வெள்ளை மனிதர்களும் கறுப்பர்களும் ஒன்றுகூடிச் சிரிப்பும் பாட்டுமாகத் துடுப்புத் தள்ளினோம். நாங்கள் அடைந்த இன்பத்திற்கு அளவேயில்லை.'' தொண்ணூற்றேழு நாட்கள் பயணம் செய்து

முடிவில் ஒருவாறுகப் பாலினீசியாவை அடைந்துவிட்டோம். "கிராமத்தில் விருந்து நடக்கும். சாதாரணமாக வருடத்-துக்கு ஒரு முறைதான் அங்கடாவிற்கு வெளிநாட்டினர் வருவது வழக்கம். அதாவது டா-ஹிடியிலிருந்து தேங்காய்-களை ஏற்றிச்செல்லும் கப்பல் ஒன்று வரும். அதைத்தவிர வேறு சமயங்களில் வெளிநாட்டினர் இங்கு வருவதில்லை. ஆகவே, எங்களுக்கு மிகுந்த வரவேற்பு கிடைக்கும். பெருந்-தீ எழுப்பி, அதைச் சுற்றி அனைவரும் அமர்ந்து விருந்து உண்ணலாம்," என்றெல்லாம் எண்ணியெண்ணி மகிழ்ந்-தோம்.

ஆயினும், காற்று தவருமல் அடித்துக்கொண்டே-யிருந்தது. கைகால் சோர்வடையும்வரை நாங்களும் துடுப்புத் தள்ளிக் கொண்டிருந்தோம்; பின்னேறவில்லை. ஆனல், தீவின் கரையில் தெரிந்துகொண்டிருந்த தீயை நாங்கள் நெருங்கியதாகத் தோன்றவில்லை. பாறைகளி-லிருந்து வந்த இடிமுழக்கமும் முன்போலவே ஒலித்துக் கொண்டிருந்தது. மெல்ல மெல்லப் பாடுவதும் ஓய்ந்தது. அமைதி நிலவியது. நாங்கள் அலைகளின்மீது ஏறி இறங்கிய பொழுது, தீவின் கரையில் தீ நடனமிடுவது போலத்-தெரிந்தது. மூன்று மணிநேரம் கழிந்துவிட்டது. இப்போது மணி ஒன்பது. நாங்கள் மிக்க களைப்புற்றோம். எங்களுக்கு இன்னும் அதிகமான உதவி தேவை என்பதை எங்களுடன் இருந்த பாலினீசியர்களுக்குப் புரியவைத்தோம். "கரை-யில் எத்தனை மனிதர்கள் வேண்டுமானலும் இருக்கிறார்கள். ஆனல், கடலில் செல்லக் கூடிய படகுகள் நான்கே," என்று அவர்கள் தெரிவித்தார்கள்.

அப்போது நுட் இருளிலிருந்து ரப்பர்ப் படகைத்தள்ளிக் கொண்டு வந்தான். தான் ரப்பர்ப் படகில் சென்று கரை-யிலிருந்து ஆட்களைக் கொண்டு வரலாம் என்று ஒரு யோசனை அவனுக்குத் தோன்றிற்று. நெருக்கடியான இம்-மாதிரி சமயங்களில் ஐந்தாறு பேர்கூட ரப்பர்ப்படகில் ஒண்டிக்கொண்டு வரலாம் என்று அவன் கூறினன். நுட்-டுக்கு அத்தீவைப்பற்றி ஒன்றும் தெரியாததால், அவனு-டைய யோசனை சிறிது அபாயகரமானதாகத் தோன்றிற்று. செறிந்த இருட்டில் பவளப்பாறையில் இருந்த இடைவெளி-யைக் கண்டுகொண்டு முன்னேற அவனல் முடியாது.

எங்களுடன் இருந்த பாலினீசியர் தலைவனைத் தன்னுடன் உதவியாக அழைத்துச் செல்வதாக நுட் கூறிய யோசனை-யும் எங்களுக்கு உடன்பாடாயில்லை. காரணம், குறுகலான அபாயம் நிறைந்த இடைவெளியில் சரியான அமைப்பற்ற ரப்பர்ப் படகைத் தள்ளிக்கொண்டு போவதில் பாலினீசிய-ருக்கு அனுபவம் இல்லை. ஆயினும், இருட்டில் எனக்கு முன்னால் படகில் அமர்ந்து துடுப்பு வலித்துக்கொண்டிருந்த பாலினீசியத் தலைவனை அழைத்து வருமாறு நுட்டிடம் கூறி-னேன். நுட் அவனைத் தேடிச் சென்றான். சிறிதுநேரம் கழிந்தது. நுட் திரும்பவில்லை. ஆகவே, நாங்கள் உரக்கக் கூவி அழைத்தோம். அதற்குப் பதிலாகப் பாலினீஸியரின் குழப்பமான கூச்சலைத் தவிர வேறொன்றும் கிடைக்கவில்லை. நுட் இருளில் மறைந்துவிட்டான் என்பதுமட்டும் எங்களுக்-குத் தெரியும்.

கட்டுமரத்தில் எழுந்த உரத்த சத்தத்தினால் நாங்கள் கூறியதை நுட் தவறாகப் புரிந்துகொண்டு, பாலினீசியத் தலைவனுடன் நேரே தீவின் கரைக்குப் புறப்பட்டுவிட்டான். இனி என்ன கூவியும் பயனில்லை. பவளப் பாறைகளி-லிருந்து எழுந்த சத்தத்தின் இடையில் எங்களுடைய குரல் அவன் காதில் விழாது, சட்டென்று ஒரு மார்ஸ் விளக்கைத் தயாரித்தோம். எங்களில் ஒருவன் பாய்மரத்தின்மீதேறி நின்று, 'திரும்பி வா, திரும்பி வா,' என்று ஒளிச் சமிக்ஞை-கள் செய்தான். ஒருவரும் திரும்பி வரவில்லை. இருவர் எங்களை விட்டுப் போய்விட்டதாலும், ஒருவன் எப்போதும் சமிக்ஞைகள் செய்துகொண்டிருந்ததாலும், நாங்கள் பின்-னிடும் வேகம் அதிகரித்துவிட்டது. நாங்கள் மிகுந்த களைப்பு அடைந்துவிட்டோம். சிறிய குச்சிகளைக் கடலில் எறிந்து பார்த்தோம். நாங்கள் விரைவில் பின்னிடுவது புலனாயிற்று. மேலும், கரையில் தெரிந்த தீ முன்னைவிட அளவிற் சிறிய-தாயிற்று; அலைகள் மோதும் சத்தம் குறைய ஆரம்பித்தது. தென்னைமரக் கூட்டத்தின் மறைவிலிருந்து விலக விலக இடையறாத கிழக்குக் காற்று எங்களை மேலும் பலமாகப் பிடித்துக்கொண்டது.

நடுக்கடலில் இருந்ததுபோன்ற ஒரு நெருக்கடியான நிலைமை மறுபடியும் ஏற்பட்டது. இனி வழியில்லை என்று உணர்ந்தோம். 'கடலுக்குள் மேன்மேலும் தள்ளப்படு-

கிறோம். ஆனாலும், துடுப்பு வலிப்பதை நிறுத்தக்கூடாது. நுட் எங்களுடன் வந்து சேரும்வரை எவ்வாறாயினும் போராடிப் பின்னிடுவதை நிறுத்தத்தான் வேண்டும்,' என்று நிச்சயித்தோம். ஐந்து நிமிடங்கள் — பத்து நிமிடங்கள் — முப்பது நிமிடங்கள் கழிந்தன. கரையில் இருந்த தீ பின்னும் சிறியதாகியது. இரண்டு அலைகளுக்கு இடையில் இருந்த பள்ளத்தில் கட்டுமரம் இறங்கியபோது சில சமயங்களில் தீ முற்றிலும் மறைந்தே போயிற்று. பாறைகளில் அலைகள் மோதும் ஒலியும் தொலைவிலிருந்து வரும் ஒரு முணுமுணுப்பாகத் தோன்றியது. இப்போதுதான் சந்திரன் வானில் உதித்தது. தென்னை மரங்களின் உச்சிக்குப் பின்னால் சிறிதளவு வான்மதியின் விளிம்பு தெரிந்தது. வானம் முழுதும் மூடுபனி சூழ்ந்ததுபோல் மங்கலாய் இருந்தது. மேகங்களும் நிறைந்திருந்தன. படகுகளில் இருந்த பாலினீசியர் ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளவும் முணுமுணுக்கவும் ஆரம்பித்தனர். திடீரென்று ஒரு படகு, கட்டுமரத்துடன் தன்னைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்துக்கொண்டு தொலைவிற் சென்றுவிட்டது.

மற்றப் படகுகளில் இருந்தோரும் களைப்பும் பயமும் அடைந்தனர்; முழு மூச்சுடன் துடுப்புத்தள்ள முயற்சிக்கவில்லை. கோன்டிகி பின்னோக்கி மிதந்துகொண்டே வெகு தூரம் கடலுக்குள் சென்றுவிட்டது. சிறிது நேரத்தில் மற்ற மூன்று படகுகள் கோன்டிகியின் அருகில் வந்தன. ஒரு பாலினீசியன் கட்டுமரத்தின் மீதேறி வந்து, தலையை ஒருதரம் அசைத்து 'இயூடா' (கரைக்குப் போகிறேன்) என்றான். கவலை குடிகொண்ட தன் கண்களால் கரையில் தெரிந்த தீயைப் பார்த்தான். அத்தீ ஒருதரம் தோன்றி மறைந்தது; பின் வெகு நேரம் தெரியவில்லை; மீண்டும் பொறிபோல் ஒருகணம் ஒளிர்ந்தது; மறுபடி வெகுநேரம் மறைந்துவிட்டது. நாங்கள் வெகு வேகமாய்ச் சென்று கொண்டிருந்தோம். பாறைப் பகுதியில் அலைமோதும் ஒலி இப்போது கேட்கவேயில்லை. எப்போதும்போல் கடலொலியை மட்டுமே கேட்டோம். கோன்டிகியின் கயிறுகள் பழையபடியே ஓலமிட்டு முனகிக் கொண்டிருந்தன. பாலினீசியருக்கு புகைச் சுருட்டுக்களை வாரி வழங்கினோம். விரைவாக நான் ஒரு குறிப்பு எழுதி, நுட்டைச் சந்தித்ததும்

அவனிடம் தருமாறு, அவர்களிடம் அதைக் கொடுத்தேன். "ஒரு படகில் இரண்டு பாலினீசியரை அழைத்துக்கொண்டு ரப்பர்ப் படகைக் கட்டி இழுத்துக் கொண்டுவா. நீ மட்டும் தனியே ரப்பர்ப் படகில் வரவேண்டாம்," என்று அக்குறிப்பில் எழுதியிருந்தேன்.

பாலினீசியர்கள் உதவி புரியும் மனப்பான்மை மிகுந்தவர்கள். இப்போதிருக்கும் நிலைமையில் கடலில் படகு செலுத்த முடியும் என்று அவர்கள் நினைத்தால், தங்களுடன் நுட்டையும் அழைத்துக்கொண்டு வந்து விடுவார்கள் என்று நம்பினோம். படகு செலுத்த முடியாது என்று அவர்கள் நினைத்தால், நுட் தனிமையில் ரப்பர்ப் படகில் ஏறிக்கொண்டு, ஒரே ஓட்டத்தில் போய்க் கொண்டிருக்கும் கட்டுமரத்தைத் துரத்திப்பிடிக்க முயல்வது பேதைமை அல்லவா? பாலினீசியர்கள் நான் தந்த குறிப்பை எடுத்துக்கொண்டு படகுகளில் இறங்கி இருளில் மறைந்து விட்டனர். 'குட்-நைட்' என்று அவர்களுள் ஒருவன் கத்தியதுதான் நாங்கள் கடைசியாகக் கேட்டது.

நிலப்பரப்புக்கு 2,000 மைல் தொலைவில் நடுக்கடலில் நாங்கள் எம்மாதிரி இருந்தோமோ, அவ்வாறே இப்போதும் இருந்தோம். காற்று முழு விசையுடன் அடிக்கும்போது துடுப்புத் தள்ளுவதாற் பயனில்லை என்று நிறுத்தினோம்; ஆனால், பாய்மரத்தின் மீதிருந்து ஒளி சமிக்ஞைகள் அனுப்புவதை நாங்கள் நிறுத்தவில்லை. 'திரும்பி வா' என்று சமிக்ஞை அனுப்ப எங்களுக்கு இப்போது துணிவில்லை. ஆகவே, குறிப்பொன்றும் தோன்றாமல் விளக்கை மட்டும் அடிக்கடிக் காண்பித்துக் கொண்டிருந்தோம். இப்போது இருள் சூழ்ந்து கொண்டது. கவிந்து கொண்டிருந்த மேகங்களிடையே எப்போதாவது சந்திரன் புலப்பட்டது. அங்கடாவின் மழை மேகந்தான் இவ்வாறு திரையிட்டுக் கொண்டிருந்ததென்று நினைக்கிறேன். இரவு மணி பத்தாகிவிட்டது. நுட்டை மறுபடி காண்போம் என்ற நம்பிக்கையை முற்றிலும் இழந்துவிட்டோம். கட்டுமரத்தின் விளிம்பில் உட்கார்ந்துகொண்டு பிஸ்கட் துண்டுகளைக் கடித்துக் கொண்டிருந்தோம். ஒருவர் மாறி ஒருவர் பாய்மரத்தின் மீதேறி விளக்கை மினுக்கினோம். ஒருவரும்

பேசவில்லை. பாய்த்துணி கட்டப்படாத பாய்மரம் ஏதோ ஒரு மொட்டைமரம் இருளில் நிற்பதுபோலத் தோன்றியது.

நுட் எங்கிருந்தான் என்பது எங்களுக்குப் புரியவில்லை. பாறைத் தொடரில் அவன் அகப்பட்டுக் கொண்டான் என்பதை நாங்கள் நம்ப மறுத்தோம். கடல் அலையோ, பாறைகளோ ஒருபோதும் நுட்டை உருட்டித்தள்ள முடியாது; சட்டென்று கால்களைக் கீழே ஊன்றிக் கொள்வான். ஆகவே, அவன் உயிரோடு இருந்தான் என்பதில் நாங்கள் சிறிதும் ஐயங் கொள்ளவில்லை. எங்கோ பசிபிக்கின் நடுவில் ஒரு தீவினுள் பாலினீசியரிடையே காலங் தள்ளும்படி அவனுக்கு நேரிட்டு விட்டதே என்று நினைத்துத்தான் நாங்கள் மனம் வெதும்பினேம். இவ்வளவு தூரம் கடற் பயணம் செய்த பிறகு எங்கோ ஒரு தென்கடற் தீவை அணுகுவதுபோல் அணுகி, அங்கே எங்களில் ஒருவனைத் தனியே விடுத்து, பின் கடலுக்குள் ஓடிவிடத்தான் எங்களால் முடியுமா? வேறொன்றும் எங்களால் செய்ய முடியாதா? கடலும் கல்லும் பாழாய்ப் போக!

முதன் முதலில் கோன்டிகியின் தளத்தில் புன்சிரிப்புடன் ஏறிவந்த பாலினீசியர்களே சிறிது நேரத்துக்குள் கோன்டிகி கட்டுக்கடங்காது மேற்கு நோக்கிப் பாய்வதைக் கண்டு அஞ்சித் தலைதெறிக்க ஓடிவிட நேரிட்டது. நிலைமை மிகவும் மோசமாய்த்தான் இருந்தது. அன்றிரவு கயிறுகளும் மிகப் பயங்கரமாய்க் கீச்சிட்டன. நாங்கள் யாரும் தூங்கவில்லை. மணி 10-30 ஆயிற்று. பெங்ட் அப்போது தான் பாய்மரத்திலிருந்து கீழே இறங்கிக் கொண்டிருந்தான். நாங்கள் அனைவரும் ஒரே சமயத்தில் திடுக்கிட்டு விட்டோம். இருளில் கடலிலிருந்து மனிதக் குரல்கள் எழுவதைக் கேட்டோம். அதோ, மீண்டும் பாலினீசியர்கள்தான் பேசுகிறார்கள்! தொண்டை கிழிய உரக்கக் கத்தினேம். அவர்களும் பதிலுக்குக் கத்தினார்கள். அதில் நுட்டின் குரலும் கலந்திருந்தது. எங்களுக்குப் பரபரப்பில் பித்துப் பிடித்தது போலாயிற்று. களைப்பு பறந்தோடிற்று. கவிந்திருந்த மேகம் அகன்றதுபோல், அங்கடாவிலிருந்து நாங்கள் தொலைவில் நகர்ந்து விட்டால் என்ன! கடலில் வேறு தீவுகள் இல்லையா! நாங்கள் அறுவரும் மறுபடி ஒன்று சேர்ந்தாற்போதும். பால்ஸா கட்டைகளுக்கோ

கடற்பயணம் என்றால் மிகப் பிரியம். ஆகவே, எங்கு வேண்டுமானாலும் நாங்கள் செல்லலாம்.

இருளிலிருந்து மூன்று நீண்ட படகுகள் வெளிப்பட்டு, அலைகளின்மீது மிதந்து வந்தன. கோன்டிகியின் மீது பாய்ந்து ஏறியவர்களுள் முதல்வன் நுட். அவனைத் தொடர்ந்து ஆறு கருப்பு மனிதர்கள் ஏறி வந்தனர். கேள்வி பதில்களுக்கெல்லாம் அப்போது அவகாசம் இல்லை. பாலி-னீஸியர் தங்களுக்குரிய பரிசுகளைப் பெற்றுக்கொண்டு மீண்டும் தம் தீவைச் சென்றடைய வேண்டும். கண்ணுக்-கெட்டியவரை வெளிச்சமோ, நிலப்பரப்போ காணப்பட-வில்லை. விண்மீன்களின் துணையும் இன்றி அவர்கள் காற்றையும் கடலையும் எதிர்த்துப் போராடிச் செல்ல வேண்டியிருந்தது. நிரம்ப உணவுப் பொருள்களும், புகைச் சுருட்டுக்களும், மற்றப் பரிசுகளும் அவர்களுக்கு வழங்கப்-பட்டன. அவர்கள் அவற்றைப் பெற்றுக்கொண்டு எங்க-ளுடன் கை குலுக்கிவிட்டு விடைபெற்றுச் சென்றனர்.

அவர்கள் எங்களுடைய நிலைமையில் கவலை காட்டி-னார்கள். மேற்குத் திசையைச் சுட்டிக் காட்டி, அபாய-கரமான பாறைகளை நோக்கி நாங்கள் சென்று கொண்-டிருப்பதாக அவர்கள் தெரிவித்தார்கள். அவர்களுடைய தலைவன் கண்களில் நீர் பெருக என்னைத் தழுவிக் கொண்டான். பிறகு அவர்கள் நீண்ட படகுகளில ஏறிச் சென்றனர். நாங்கள் அறுவருமே கட்டுமரத்தில் எஞ்சி-யிருந்தோம்.

கட்டுமரத்தைத் தன் போக்கில் செல்லுமாறு விட்டு, நாங்கள் நுட் கூறிய கதையைக் கேட்டிருந்தோம். நுட் பாலினீஸியத் தலைவனுடன் கரையைச் சென்றடைந்தான். பாலினீஸியரின் துடுப்புக்களுடன் பாறை இடைவெளியை நோக்கி ரப்பர்ப் படகைச் செலுத்திக் கொண்டிருந்தான். அப்போது, திரும்பி வரும்படி கோன்டிகியிலிருந்து அனுப்-பப்பட்ட ஒளி சமிக்ஞைகள் தெரிந்தன. நுட் அவற்-றைக்கண்டு வியப்படைந்தான். படகைத் திருப்பும்படி அவன் சொல்லியும் பாலினீஸியன் கேட்கவில்லை. நுட் தானே துடுப்பு வலிக்க முயன்றான். ஆனால், உடனிருந்த பாலினீஸியன் அவனை அகற்றிவிட்டுப் படகை மேலும்

தீவை நோக்கிச் செலுத்தினன். ஆபத்தான அந்நிலையில் அவனுடன் சண்டையிடுவது சரியல்ல என்று நுட் கருதி வாளாவிருந்தான். பாறை இடைவெளி வழியே ரப்பர்ப் படகு உள்ளே சென்றது; மேலே தூக்கப்பட்டது; தீவின்மீது இருந்த ஒரு பவளப் பாறையின்மேல் தள்ளப்பட்டது. உடனே ஒரு பாலினீஸியக் கூட்டம் படகை இழுத்துச் சென்று கரையில் சேர்த்தது.

நுட் தென்னை மரங்களின் அடியில் நின்ருன். அவனைச் சுற்றிப் பாலினீஸியர் சூழ்ந்து நின்ருர்கள். அவர்கள் அவனுக்குப் புரியாத மொழி பேசினர்; பெரும்பாலும் கறுத்த நிறம் உடையவர்; காலணிகள் ஏதும் அணியாதவர். நுட் அணிந்திருந்த ஆடைகளை அவர்கள் தொட்டுத் தொட்டுப் பார்த்தனர். அவர்கள் அணிந்திருந்த உடை ஐரோப்பிய பாணியில் இருந்தது; ஆனல், மிகவும் கந்தலாய் இருந்தது. தீவு முழுவதுக்கும் நுட் ஒருவனே வெள்ளையன்.

சற்றுச் சுறுசுறுப்பான சில பாலினீஸியரை நுட் தன் பக்கம் அழைத்துத் தன்னுடன் ரப்பர்ப் படகில் வரும்படிக் கூறினன். பிறகு ஒரு பருத்த கொழுத்த மனிதன் ஆடி அசைந்துகொண்டு நுட்டை நோக்கி வந்தான். அவனுடைய உடை, குரல் ஆகியவற்றிலிருந்து அவன் அப் பாலினீஸியக் கூட்டத்துக்குத் தலைவன் என்பது தெரிந்தது. எல்லோரும் ஒதுங்கி அவனுக்கு வழி விட்டனர். தன் கட்டுமரம் கடலிழுப்பினல் தொலைவில் நகர்ந்துபோய்விடும் என்றும், அதற்கு முன்னல் தான் அங்குப் போய்ச் சேர வேண்டும் என்றும், தனக்குத் துணையாகச் சிலர் தேவை என்றும் நுட் ஆங்கிலத்திலும் நார்வீஜிய மொழியிலும் விளக்கிக் கூறினன். ஆனல், பாலினீஸியத் தலைவன் ஒன்றையும் புரிந்துகொள்ளவில்லை. கூட்டத்தினர் உரக்கக் கூவிக்கொண்டு நுட்டைப் பிடித்து அருகிலிருந்த கிராமத்திற்குத் தள்ளிச் சென்றனர். அவனுடைய எதிர்ப்புகளை அவர்கள் சிறிதும் பொருட்படுத்தவில்லை. கிராமத்தில் அவர்கள் நுழைந்ததும் புதிய பழங்களை ஏந்திவந்த தென் கடற் தீவைச் சேர்ந்த மங்கையரும், நாய்களும், பன்றிகளும் அவனை வரவேற்றன. அவன் தங்கியிருக்க வேண்டிய வசதிகளையெல்லாம் தீவினர் செய்து தரத் தயாராய் இருந்-

தனர். ஆயினும், நுட்டின் மனம் அவற்றில் செல்லவில்லை. மேற்கு நோக்கிச் சென்றுகொண்டிருந்த தன் கட்டுமரத்தைப் பற்றியே அவன் நினைத்துக்கொண்டிருந்தான். நுட்டை அங்குப் பிடித்து வைத்துக்கொண்டால் அவனைத் தேடிக்கொண்டு நாங்கள் அனைவரும் அவ்விடம் செல்வோம். எங்களுடைய கட்டுமரமும் அங்கு வந்து சேரும். ஆகவே, எங்களுடைய பழக்க வழக்கங்களும், கட்டுமரத்திலுள்ள இனிய பல பொருள்களும் தங்களுக்குக் கிடைக்கும் என்பதே அவர்களுடைய எண்ணம்.

மேலும், பல ஆச்சரியமான அனுபவங்களுக்குப் பின் நுட் அவர்களிடமிருந்து தப்பித்துக்கொண்டு, ரப்பர்ப் படகை அடைந்தான். அவனோடு பல ஆண்களும், பெண்களும் விரைந்து ஓடினர். அவனுடைய பேச்சும் சைகைகளும் ஒருவாறு அவர்களுக்கு விளங்கின. இனி எவ்வாறேனும் அவன் கட்டுமரத்துக்குச் சென்று விடுவான் என்பது அவர்களுக்குத் தெளிவாயிற்று. பின்னர் தீவினர் ஒரு தந்திரம் செய்தனர். அத்தீவின் மற்றொரு பக்கத்தில் அவனுடைய நண்பர்கள் வந்துகொண்டிருப்பதாகத் தெரிவித்தனர். நுட்டுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஆனால், சிறிது நேரத்தில் கடற்கரையில் உரத்த குரலில் சிலர் பேசும் சத்தம் கேட்டது. மூன்று பாலினீஸியப் படகுகளும் திரும்பிவிட்டன. நுட்டுக்கு நான் அனுப்பியிருந்த குறிப்பு அவனிடம் தரப்பட்டது. அவன் அதைப் படித்துப் பார்த்தான். அவனுடைய நிலைமை மிகவும் இக்கட்டாய் இருந்தது. தனியே கடலில் செல்லக்கூடாது என்று நான் குறிப்பிட்டிருந்தேன். ஆனால், அவனுடன் படகில் செல்லத் தீவினர் யாரும் உடன்படவில்லை.

தீவினரிடையே பலத்த வாக்குவாதங்கள் நடைபெற்றன. கடலில் சென்று கட்டுமரத்தைப் பார்த்தவர்களுக்கு, நுட்டை நிறுத்திவைப்பதால் பயனில்லை என்பது விளங்கிற்று. முடிவில் நுட்டின் பயமுறுத்தல், வாக்குறுதிகள் ஆகியவற்றின் பயனாகச் சிலர் அவனுடன் கோன்டிகியை நோக்கிச் செல்ல ஒப்புக்கொண்டனர். இரவில் அவர்கள் கடற் பயணத்தைத் தொடங்கினர். ரப்பர்ப் படகை ஒரு நீண்ட படகுடன் இணைத்துவிட்டனர். நான்கு படகுகளுமாக முன்னேறிச் சென்றன. தீவினர் அசைவின்றி நின்று-

கொண்டு நுட் செல்வதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தனர்.

நுட்டும் அவனுடன் சென்றவர்களும் கோன்டிகியிலிருந்து கிடைத்த ஒளிச் சமிக்ஞைகளைப் பார்த்துக்கொண்டே கடலில் முன்னேறினர். பாலினீஸியப் படகுகள் கடல் நீரைக் கிழித்துக்கொண்டு வேகமாய்ச் சென்றபோதிலும் நுட்டுக்கு ஒவ்வொரு கணமும் ஒரு யுகமாகத் தோன்றியது. கடைசியில் ஒருவாறுகக் கோன்டிகிக்கு வந்து சேர்ந்தான். இவ்வாறு தன் கதையை நுட் கூறி முடித்ததும் டார்ஸ்டைன் அவனை நோக்கி, "நல்ல வனப்பான தீவுதானு அது?" என்று கேட்டான். "ஓஹோ, அந்த பாலினீஸியப் பெண்களை நீ பார்த்தால் தெரியும்," என்ருன் நுட். பாய்த்துணியை இறக்கி, பின் துடுப்பை உள்ளே இழுத்துவிட்டு நாங்கள் அறுவரும் மூங்கிற் குடிசைக்குள் சென்று நன்ருகத் தூங்கினேம்.

மூன்று நாட்கள் கட்டுமரம் மிதந்து சென்றது. நிலப்பரப்பு ஏதும் எங்களுக்குத் தென்படவில்லை. பேராபத்து விளைவிக்கக்கூடிய டாகுமே, ராரோயியா பாறைத் தொடரை நோக்கி நாங்கள் அப்போது சென்றுகொண்டிருந்தோம். அத் தொடர் 40-50 மைல்களுக்கு நீண்டிருந்தது. இத்தொடருக்கு வடபுறமாகச் சென்றுவிட நாங்கள் இயன்றவரை முயற்சித்தோம். முதலில் எல்லாம் உதவியாகவே இருந்தது. பின் ஓரிரவு காற்று திடீரென்று திசைமாறிவிட்டது. நாங்கள் டாகுமே பாறையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தோம். மழை பெய்யத் தொடங்கிற்று. ஒன்றுமே கண்ணுக்குப் புலனுகவில்லை. பாறை தொலைவில் இருந்திருக்க முடியாது.

நள்ளிரவில் நாங்கள் கூடி ஆலோசித்தோம். எப்படியாவது உயிர் தப்பவேண்டும் என்பதிலேயே நாங்கள் கண்ணுங் கருத்துமாய் இருந்தோம். வடபுறமாகச் செல்வது முடியாத காரியம் ஆய்விட்டபடியால், தென்புறமாகத் திரும்பிச் செல்லவேண்டியதாயிற்று. பாய்த்துணியைக் கட்டி, துடுப்பைச் சரிசெய்துகொண்டு, கட்டுமரத்தைச் செலுத்தத் தொடங்கினேம். அபாயகரமான வடகாற்று எங்களைப் பிடித்துத் தள்ளிற்று. பாறைத் தொடரைக்

கடக்குமுன் கிழக்குக்காற்று மீண்டும் வீச ஆரம்பித்தால் நாங்கள் கடலலைகளின் இழுப்பில் சிக்கிப் பாறைகளின்மீது மோத நேரிடும். கோன்டிகி ஒருவேளை சிதறுண்டால் என்ன செய்வது என்பதைப்பற்றி யோசித்துவைத்தோம். எப்படியும் கோன்டிகியை விட்டு வெளியேறுவதில்லை என்றும், பாய்மரத்தின்மீது ஏறுவதில்லை என்றும், பாய்மரப் பிணைப்புக் கயிறுகளை இறுகப் பிடித்துக்கொள்வதென்றும் தீர்மானித்தோம். ரப்பர்ப் படகைக் கட்டுமரத் தளத்தின்மீது வைத்தோம். அதனுடன் நீர் உட்புகாத ஒரு சிறு வயர்லெஸ் கருவியைச் சேர்த்துக் கட்டினோம். மற்றும் சிறிது உணவுப் பொருள்களும், நீர்க்குப்பிகளும், மருந்து வகைகளும் வைத்துக் கட்டப்பட்டன. ஒருகால் நாங்கள் உயிர்த் தப்பி வெறுங் கையுடன் பாறைத் தொடரைச் சேர்ந்தாலும் இந்த ரப்பர்ப் படகு எங்கள் உதவியின்றியே கரைசேரும். கோன்டிகியின் பின்புறத்தில் ஒரு மிதப்புக் கட்டையைக் கட்டினோம். ஆகவே, இக் கட்டையும் கரையில் தள்ளப்படும். பின்னர் அதன் உதவியால் கட்டுமரம் முழுவதையும் பிடித்து இழுத்துக்கொள்ளலாம் என்பது எங்கள் திட்டம். இவ்வளவு ஏற்பாடுகளையும் செய்துவிட்டு, பின் படுத்து உறங்கினோம்.

வடகாற்று அடித்துக்கொண்டிருந்தபோது நாங்கள் மெதுவாக மிதந்து, தொடுவானத்தின்கீழ் மறைந்திருந்த பவளத்திட்டை ஒட்டியே சென்றுகொண்டிருந்தோம். ஒரு நாள் பிற்பகல் திடீரென்று வடகாற்று ஓய்ந்து, கிழக்குக் காற்று வீச ஆரம்பித்தது. நாங்கள் வெகுதூரம் தெற்கு நோக்கிச் சென்றிருந்தோம். ஆகவே, ராரோயியா பாறைத் தொடரின் தென்முனையைச் சுற்றிக்கொண்டு, பாதுகாப்பான ஓரிடத்துக்குச் சென்று விடமுடியும் என்று எரிக்கின் கணக்கிலிருந்து தெரியவந்தது.

அன்றிரவுடன் நாங்கள் கடற்பயணம் தொடங்கி நூறு நாட்கள் ஆயிருந்தன. நள்ளிரவில் நான் விழித்துக்கொண்டேன். கடல் அலைகளின் போக்கில் ஒரு மாறுதலையும், கோன்டிகி செல்லும் வகையில் ஒரு வேறுபாட்டையும் உணர்ந்தேன். 'அருகில் உள்ள ஒரு கடற்கரையின் காரணமாக நீரில் வேகம் ஏற்பட்டிருக்கிறதோ?' என்று எண்ணினேன். தளத்திலிருந்தும் பாய்மரத்தின் மீதேறியும்

பன்முறை கவனித்துப் பார்த்தேன். கடலைத் தவிர வேறொன்றையும் காணமுடியவில்லை. ஆயினும், எனக்கு நிம்மதியான தூக்கம் இல்லை. நேரம் ஒருவாறு கழிந்தது.

விடியற்காலை மணி 6-க்கு முன்னரே டார்ஸ்டைன் பாய்மரத்திலிருந்து இறங்கி விரைந்து வந்தான். தொலைவில் தென்னை மரங்கள் நிறைந்த சிறிய தீவுகளின் வரிசை ஒன்றை அவன் கண்டான். தென்திசையிற் கட்டுமரம் செல்லுமாறு இயன்றஅளவு துடுப்பைத் திருப்பிவைத்-தோம். ராரோயியா பாறைத்தொடரின் பின்புறம் முத்துக்-கோவைப்போலக்கிடந்த சிறு பவளத் திட்டுக்களைத்தான் டார்ஸ்டைன் பார்த்திருக்கவேண்டும். வடக்கு நோக்கிய ஒரு நீரோட்டத்தில் நாங்கள் அகப்பட்டிருக்கவேண்டும்.

7-30 மணி சுமாருக்கு அச்சிறு தீவுகள் எல்லோருக்கும் தெளிவாய்த் தெரிய ஆரம்பித்தன. அவற்றுள் மிக அரு-காமையில் இருந்ததற்கும் எங்களுக்கும் இடையே 4-5 கடல்-மைல் தூரமிருக்கும்; பாறைத் தொடரை நோக்கி வடமேற்-குத் திசையில் நாங்கள் நகர்ந்துகொண்டிருந்தோம். நடுப்-பலகைகள் சரியாகப் பொருத்தப்பட்டிருந்தால், இப்போதும் தப்பித்துக்கொள்ள வழி இருந்தது. ஆனால், சுருமீன்கள் சூழ்ந்து கொண்டிருந்தபடியால் கட்டுமரத்தின்கீழ் மூழ்கிச் சென்று நடுப்பலகைகளைக் கட்டிச் சரிசெய்ய முடியவில்லை. பாறைத்தொடர் நெருங்கிவிட்டபடியால் அலைகள் சீறி எழுகின்றன. இன்னும் சில மணி நேரங்களில் கோன்டிகி முறிவது நிச்சயம். அவ்வாறு ஏற்பட்டால் ஒவ்வொருவ-ருக்கும் பொறுப்பு என்ன என்பதைப் பற்றியே நாங்கள் அனைவரும் எண்ணிக்கொண்டிருந்தோம்.

இப்போதுகூட பாய்த்துணியை நாங்கள் இறக்கவில்லை. ஆபத்திலிருந்து தப்பலாம் என்ற நம்பிக்கை இன்னும் சிறிது இருந்தது. பாய்மரத்தில் ஏறிப் பார்த்தபோது தென்னை மரங்கள் செறிந்த தீவுகளும் பவளப்பாறைகளும் தெரிந்-தன. ஆனால், அவற்றை ஒன்று சேர்க்கும் நிலப்பரப்பு பாதி வெளியிற் தெரிந்தும் பாதி நீரில் மூழ்கித் தெரியாம-லும் இருந்தது. ராரோயியா தீவு வளையம் சுமார் 25 மைல் அகன்றிருந்தது. நாங்கள் அதன் நீண்ட கிழக்குப் புறத்தை அணுகிக் கொண்டிருந்தோம். பசிபிக் பொங்கி எழுந்த-

போது எங்களுக்கு என்ன நேரிட இருக்கிறது என்பது தெளிவாயிற்று. தென்திசையில் புதிது புதிதாகப் பல பாறைத் தொடர்கள் தோன்றின. ஆகவே, நாங்கள் பவளத்தொடரின் நடுப்பகுதியின் அருகில் இருந்தோம் என்பது நிச்சயம் ஆயிற்று.

பயணத்தின் முடிவுக்கான எல்லா ஏற்பாடுகளையும் நாங்கள் செய்யத் தொடங்கினோம். விலைமதிப்புள்ள பொருள்கள் யாவற்றையும் மூங்கிற் குடிசைக்குள் வைத்துப் பலமாகக் கட்டினோம். முக்கியமான குறிப்புக்கள், புகைப்படங்கள் போன்றவற்றை நீர் உட்புகாத பைகளுக்குள் அடைத்து வைத்தோம். மூங்கிற் குடிசையின் மீது ஒரு கெட்டித் துணியைப் போர்த்தினோம். நடுப் பலகைகளை மேலே உயர்த்திவிட்டால் நாங்கள் அதிக அபாயமில்லாமல் பாறைத் தொடரின்மீது கொண்டுபோய்த் தள்ளப்படுவோம் என்று எண்ணி அதற்கான வேலையில் ஈடுபட்டோம். ஆனால், அப் பலகைகளின் மீது ‘கடல் சீவிகள்’ ஏராளமாக ஒட்டிக்கொண்டிருந்தபடியால் எங்கள் வேலை கடினமாயிற்று. நடுப் பலகைகள் உயர்த்தப்பட்டு, பாய்த்துணி இறக்கப்பட்டதும் கட்டுமரம் பக்கவாட்டில் திரும்பிக் கொண்டது. கடலும் காற்றும் தம்மிச்சைப்படி அதை அலைக்கழிக்க ஆரம்பித்தன.

அப்போது கிடைத்த பளுவான பொருள்களைக் கொண்டு நாங்கள் ஒரு நங்கூரத்தைத் தயாரித்து, அதை ஒரு நீண்ட கயிற்றினால் பாய்மரத்துடன் கட்டினோம். இதனால் நங்கூரத்தைக் கடலில் பாய்ச்சும்போது கோன்டிகி பின்புறம் முன்னாக நகரும் என்பது எங்கள் கருத்து. “கட்டுமரத்தை இறுகப் பற்றிக்கொள்ளுங்கள். எக்காரணத்தைக்கொண்டும் பிடியைத் தளர்த்திவிடாதீர்கள்,” என்பதொன்றே எங்களுக்கு இடப்பட்ட உத்திரவு. ஏனென்றால், நாங்கள் நீரில் இறங்கினால் இழுப்பில் சிக்கி அழிவது நிச்சயம். ரப்பர்ப் படகில் ஏறினாலும் மோதும் அலைகளில் சிக்கி அது கவிழ்ந்துவிடும், அல்லது பாறையில் மோதித் துண்டு துண்டாய்விடும். ஆனால், பால்ஸாகட்டைகள் எப்படியும் கரைக்குப் போய்ச் சேரும். ஆகவே, அவற்றைப் பிடித்துக் கொண்டால் நாங்களும் கரையேறிவிடலாம்.

காலணிகள் போட்டுக்கொள்ளலாம்; உயிர்க்கச்சை-களைத் தயாராக வைத்துக்கொள்ளலாம்; பயண அனுமதிச் சீட்டுகளையும் சில நாணயங்களையும் எடுத்துக்கொள்ள-லாம் என்றெல்லாம் எங்களுக்குச் சொல்லப்பட்டது. ஆனால், அந்நிலைமையில் அவை எங்களுக்கு ஆறுதல் அளிக்க-வில்லை. கட்டுமரம் சிறிது சிறிதாகப் பக்கவாட்டில் நகர்ந்து சென்றது. எங்கள் மனத்தில் கவலை குடிகொண்டிருந்தது. நாங்கள் அதிகம் பேசவில்லை. அவரவர் பொறுப்பைக் கவனித்துக்கொண்டிருந்தோம். ஆயினும், ஆபத்து ஒன்று-மில்லாமல் தப்பலாம் என்ற அசையாத நம்பிக்கை எங்க-ளுக்கு இருந்தது. எவ்வளவோ ஆபத்துகளுக்கிடையிலும் எங்களை இத்தனை நாட்களாகக் காத்து, சுமந்துவந்த கட்டு-மரம் எங்களைக் கரையில் கொண்டுபோய்ச் சேர்க்கும் என்று உறுதியாக எண்ணினோம்.

மூங்கிற் குடிசைக்குள் சாமான்களெல்லாம் ஒழுங்கின்-றிக் குவியலாகக் கிடந்தன. வயர்லெஸ் கருவியிருந்த மூலையில் டார்ஸ்டைன் உட்காரவும் இடமில்லை. கலாவோ துறைமுகத்திலிருந்து நாங்கள் 4,000 கடல் மைல் தொலை-வில் இருந்தோம். கலாவோவிலிருந்த கடற்படைப் பயிற்சிப் பள்ளியோடு நாங்கள் வயர்லெஸ் மூலம் தொடர்புகொண்-டிருந்தோம். அதுதவிர, அமெரிக்க ஐக்கிய நாட்டிலிருந்த ரேடியோ அன்பர்கள் பலருடனும் எங்களுக்குத் தொடர்பு இருந்தது. அதற்கு முந்திய நாள் குக்தீவில் இருந்த ராரோ-டோங்கா என்ற இடத்தைச் சேர்ந்த ஓர் அன்பரும் எங்க-ளுக்கு அறிமுகம் ஆகியிருந்தார். விடியற்காலையில் அவ-ருடன் வயர்லெஸ் மூலம் பேச எங்களுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது. நாங்கள் பாறைத்தொடரை மெல்ல மெல்ல அணுகிக்கொண்டிருந்தபோது, டார்ஸ்டைன் தனது வயர்-லெஸ் கருவி மூலம் ராரோடோங்கா அன்பருடன் பேசிக்-கொண்டிருந்தான்.

கோன்டிகி பயணத்தின்போது முக்கியமான சம்பவங்-களைக் குறித்து வைத்துக்கொள்ளும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டிருந்தேன் அல்லவா? குறிப்பேட்டில் அன்றைய நிகழ்ச்சிகளைப் பற்றிப் பின் வருமாறு எழுதியுள்-ளேன் :—

8-15—மெதுவாக நிலப்பரப்பை அணுகினோம். வலப்புறத்தில் நிலப்பரப்பில் தென்னை மரங்களைத் தனித் தனியாகக் காணமுடிகிறது.

8-45—காற்று மேலும் எங்களுக்குப் பாதகமாக மாறிவிட்டது. இனித் தப்புவதற் கிடமில்லை. ஆனால், பயமில்லாமல் தளத்தில் வேகமாக வேலை செய்து கொண்டிருக்கிறோம். பாறைத் தொடரில் எங்களுக்கெதிரே, உடைந்த பாய்மரக் கப்பலின் பகுதிகள் போல் ஏதேதோ தெரிகின்றன. ஆனால், உண்மையில் அவை மிதந்து கரையில் ஒதுங்கிய வெறுங் கட்டைகளாக இருப்பினும் இருக்கலாம்.

9-45—கடைசித் தீவுக்கு முந்திய தீவை நோக்கி எங்களைக் காற்று உந்துகிறது. பவளத்திட்டு முழுவதும் இப்போது எங்களுக்குத் தெளிவாகத் தெரிகிறது. தீவுகளுக்கு முன்னால் திட்டு நிற்பது, வெள்ளைச் சிவப்பு புள்ளிகளுடன் கூடிய ஒரு பெருஞ்சுவர் கடலிலிருந்து எழுந்து நிற்பது போலத் தோன்றுகிறது. பாறைகளை ஒட்டி வெண்மை நுரைத்துக்கொண்டு நீர் வீசி எரியப்படுகிறது. பெங்ட் சுடச்சுட எங்களுக்கு உணவு பரிமாறுகிறான். இது தான் கோன்டிகியின் தளத்தில் எங்களுக்குக் கிடைத்த கடைசி உணவு. பாறைத் திட்டில் தெரிவது உடைந்த கப்பலின் பகுதிகளே. திட்டுக்கு மிக அருகில் இருப்பதால் அதற்குப்பின் உள்ள தீவுகளை நன்றாகக் காணமுடிகிறது.

9-50—மிக நெருங்கிவிட்டோம். பாறையை ஒட்டியே செல்கிறோம். இன்னும் நூறு கெஜங்கள்தான் இருக்கும். டார்ஸ்டைன் ராரோடோங்கா அன்பருடன் பேசிக் கொண்டிருக்கிறான். குறிப்பேட்டை மூடவேண்டியதுதான். நிலைமை மோசமாய் இருக்கிறது. ஆனால், எங்கள் மனத்தில் தைரியம் இருக்கிறது. வெற்றி காணுவோம்.

சில நிமிடங்களுக்குப்பின் நங்கூரத்தை எறிந்தோம். கோன்டிகி திரும்பிக்கொண்டு பின்புறம் முன்னாகச் செல்ல ஆரம்பித்தது. டார்ஸ்டைன் வெறி கொண்டவன்போல் மார்ஸ் நாதியைத் தட்டிக் கொண்டிருந்தான். ராரோடோங்காவுடன் இப்போது தொடர்பு கிடைத்துவிட்டது. கடல்

குமுறியது. தளத்தில் எல்லோரும் சுறுசுறுப்பாக வேலை செய்தார்கள். ஒருவாறுக டார்ஸ்டைன் தன் செய்தியை அனுப்பி முடித்தான். நாங்கள் ராரோயியா திட்டை நோக்கிச் சென்று கொண்டிருப்பதாயும், மணிக்கொருதரம் எங்கள் செய்தியை எதிர் பார்க்கும்படியும், தொடர்ந்தாற்போல் 36 மணி நேரத்திற்கு எங்களிடமிருந்து செய்தி கிடைக்கவில்லையானுல் வாஷிங்டனில் உள்ள நார்வீஜிய தூதராலயத்துக்குத் தெரிவிக்கும்படியும் டார்ஸ்டைன் தெரிவித்தான். " சரி, 50 கெஜ தூரம் மீதியிருக்கிறது. நாங்கள் போய் வருகிறோம். வந்தனம்," என்பனவே அவன் பேசிய கடைசி வார்த்தைகள். அதற்குப் பிறகு அவன் வயர்லெஸ் கருவியை மூடிவைத்தான். நுட் குறிப்புக்களையெல்லாம் கட்டி வைத்தான். இருவரும் தளத்திற்கு விரைந்து வந்து எங்களுடன் சேர்ந்து கொண்டனர். நங்கூரத்தினுல் பயனில்லை என்பது இப்போது தெளிவாயிற்று. அலைமூட்டம் அதிகரித்தது. ஆழ்ந்த அலைப் பள்ளங்கள் ஏற்படலாயின. கட்டுமரம் ஓயாமல் மேலும் கீழும் அசைந்து தள்ளாடியது. " கட்டுமரத்தை இறுகப் பற்றிக்கொள்ளுங்கள் ; சாமான்களைப் பற்றிக் கவலை வேண்டாம்," என்று உத்தரவு பிறந்தது.

அவரவர்களுக்குப் பாதுகாப்பானது என்று தோன்றிய கயிற்றைப் பற்றிக் கொண்டு நாங்கள் தயாராக நின்றோம். எரிக் மட்டும் தனது காலணிகளைத் தேடிக்கொண்டு குடிசைக்குள் நுழைந்தான். ஒருவரும் கட்டுமரத்தின் பின்புறம் நிற்கவில்லை. பாய்மரத்தைக் கட்டுமரத்தின் பின்புறத்தோடு பிணைத்திருந்த கயிறுகளையும் நாங்கள் பிடித்துக் கொள்ளவில்லை. குடிசைக்குமுன் வைத்துக் கட்டப்பட்டிருந்த பெட்டிகளின்மேல் ஹெர்மன், பெங்க்ட், டார்ஸ்டைன் ஆகிய மூவரும் ஏறினுர்கள். அங்கிருந்து குடிசையின் கூரை விளிம்பில் கட்டப்பட்டிருந்த கயிற்றை ஹெர்மன் இறுகப்பற்றிக் கொண்டான். மற்ற இருவரும், பாய்த்துணியை மரத்தில் ஏற்ற உபயோகிக்கும் கயிறுகளைப் பிடித்துக்கொண்டனர். கட்டுமரத்தின் முன்புறத்தையும் பாய்மரத்தின் உச்சியையும் பிணைத்த கயிற்றை நானும் நுட்டும் பற்றிக்கொண்டோம். எந்த நெருக்கடியிலும் இந்தக் கயிறு கட்டுமரத்தை விட்டு விலகாது என்று நம்பினேம்.

கடலின் பிடியில் முழுதும் சிக்கிவிட்டோம் என்று நாங்கள் உணர்ந்ததும், நங்கூரத்தைப் பிணைத்திருந்த கயிற்றை அறுத்துவிட்டோம். கீழிருந்து ஒரு பேரலை எங்களை மேலே தூக்கியது. கோன்டிகி வானத்தில் எழுந்தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. பயணத்தின் முக்கியமான கட்டத்தை அடைந்தோம். அலைகளின்மீது வெகு விரைவாக முன்னேறினோம். கட்டுமரம் அசைந்து முனகியது. எங்களுக்கு மயிர்கூச்சு ஏற்பட்டது. நான் கையை அசைத்து 'ஹ-ர்ரா' என்று தொண்டை கிழியக் கூவினேன். எனக்குப் பித்துப் பிடித்து விட்டதென்றே மற்றவர்கள் நினைத்தார்கள். ஆயினும், என் கூக்குரல் அவர்களுக்கு ஓரளவு உற்சாகமளித்தது. இந்த நெருக்கடி சமாளிக்கப்பட்டால் வெற்றி நிச்சயம்.

எங்களுடைய மகிழ்ச்சி சீக்கிரமே மறைந்தது. பளபளத்த பச்சைக் கண்ணாடிச் சுவர் போன்ற ஒரு பேரலை எங்கள்மீது வந்து மோதிற்று. அதன் தாக்குதலால் நான் தவித்துக் கொண்டிருக்கும்போதே ஒரு நீர்மூட்டம் வந்து என்னை மூழ்கடித்தது. இழுப்பின் விசையை என் உடலின் ஒவ்வொரு நரம்பும் உணர்ந்தது. ஆயினும், 'முழுமூச்சுடன் இறுகப் பற்றிக்கொள்ளுங்கள்,' என்ற உத்தரவு மட்டும் மனத்தில் நின்றது. பிறகு அவ்வலை நகர்ந்து சென்றது. என்மீது அதற்கிருந்த பிடி தளர்ந்தது. அப்போது என் அருகில் சுருண்டுபோய்க் கயிற்றில் நுட் தொங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். அவ்வலை குடிசையின் கூரையின்மீது ஓடிச் சென்றது. அப்போது மற்ற மூவரும் விடாப் பிடியாகத் தங்கள் கயிறுகளைப் பிடித்துக்கொண்டு சமாளித்ததைப் பார்த்தேன்.

நுட் கீழே குதித்து, ஒரே பாய்ச்சலில் மற்ற மூவரும் இருந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்தான். நம்பிக்கை ஊட்டும் அவர்களுடைய கூச்சலை நான் கேட்டேன். ஆனால், மறுகணமே ஒரு பேரலை எழுந்து வந்து மோதியது. அதன் எதிர்ப்பைச் சமாளிக்கு முன்னரே வேறொன்றும் வந்தது. கயிற்றேணியைப் பிடித்துக் கொண்டிருந்த நுட் வெற்றிக் குரலில் கூவினான். "கட்டுமரத்தைப் பாருங்கள். இன்னும் சமாளிக்கிறதே," என்றான். மூன்று அலைகளின் தாக்குதலுக்குப் பின்னரும் பாய்த்தூணும் குடிசையும் சிறிது

சாய்ந்து போயின என்பதைத் தவிர வேறு சேதம் ஏற்பட-வில்லை.

அதற்குப்பின் வந்த அலை சுமார் 25 அடி உயரம் எழுந்-தது. நான் அந்த அலையில் சிக்கி மேலும் கீழுமாகத் தள்ளாட வேண்டியிருந்தது. ஒரு கணநேரம் என்னைப் பார்க்க முடியாமல் மற்றவர்கள் கவலை கொண்டார்கள். பிறகு, அவ்வலை அவர்களையும் அணுகிற்று. ஆனால், நாங்-கள் அனைவரும் விடாமல் பிடித்துக்கொள்ள வேண்டும் என்ற ஒரே எண்ணத்தில் இருந்தோம். அப்போது கோன்டிகி பாறையில் மோதியிருக்கவேண்டும். நான் பிடித்திருந்த கயிறு சிறிதளவு தளர்ந்துவிட்டதாக உணர்ந்-தேன். ஆனால், தாக்குதல் எப்பக்கத்திலிருந்து வந்தது என்று ஊகிக்க முடியவில்லை. நீரில் மூழ்கியிருந்தது சில விநாடிகளுக்கே எனினும், அதைச் சமாளிக்க எங்கள் ஆற்றல் முழுதும்கூடப் போதவில்லை. கர்ஜித்து மேலெழுந்த அலைக்கு இடையில், முற்றும் உருமாறிப்போன கோன்டிகி-யின் தோற்றம் பயமூட்டுவதாக இருந்தது. பல மாதங்க-ளாக நாங்கள் வசித்து வந்த கட்டுமரம் சில விநாடிகளுள் சிதைந்து போயிற்று.

ஹெர்மன் குடிசைக் கூரையின் விளிம்பில் குப்புறத் தள்ளப்பட்டிருந்தான். குடிசையே பின்புறமாக விழுந்து நொறுங்கியிருந்தது. ஹெர்மனைத் தவிர வேறு ஒருவரும் என் கண்ணுக்குப் படவில்லை. உறுதியான மரத்தால் செய்யப்பட்ட பாய்மரம், தீக்குச்சி ஒடிவதுபோல் ஒடிந்து போயிற்று. அதன் மேற்பகுதி கூரையின் மேல் கிடந்தது. பின்புறம் இருந்த துடுப்புக் கட்டை நீளவாட்டில் திரும்பிப் போயிருந்தது. குறுக்குக் கட்டை உடைந்து போயிற்று. துடுப்புப் பலகை சுக்கு சுக்காகி இருந்தது. தளம் முழுதும் பிய்ந்துபோய், அங்கிருந்த பெட்டிகளும், டப்பிகளும், துணி-களும் சிதறிக் கிடந்தன. மூங்கிற் குச்சிகளும் அறுந்த கயிற்று நுனிகளும் ஆங்காங்கே காணப்பட்டன. எங்கும் ஒரே குழப்பமாய் இருந்தது.

ஹெர்மனைத் தவிர மற்றவர்களைக் காணேமே என்று நான் வருந்தினேன். அப்போது குனிந்து கொண்டிருந்த டார்ஸ்டைனின் உருவம் கட்டுமரத்துக்கு வெளியே தெரிந்-

தது. கையால் பற்றிக்கொண்டிருந்த கயிற்றின் உதவி-யால் அவன் உள்ளே வந்துவிட்டான். ஹெர்மனும் திரும்பிப்-பார்த்துப் பல் இளித்தான். ஆனால், அவன் சிறிதும் அசையவில்லை. விரைவில் பெங்க்டின் குரலும் கேட்டது. எல்லோரும் பத்திரமாய் இருக்கிறார்களென்று தெரிந்து கொண்டேன். அவர்கள் சாமான் குவியலுக்குப் பின்னால் கயிறுகளைப் பிடித்தவாறு கிடந்தார்கள். சில விநாடிகளுள் இவ்வளவும் நிகழ்ந்து விட்டது. முன்சென்ற அலை பின்-னிடுமுன் வேறொரு அலை வந்து தாக்கிற்று. அலைகளின் பேரிரைச்சலிடையே 'பிடித்துக் கொள்ளுங்கள்' என்று நான் உரக்கக் கூவினேன். நான் செய்ததும் அதுவே. இரண்டு மூன்று விநாடிகளுக்குள் பெரும் நீர்த்தொகுதி என்னை மூழ்கடித்துச் சென்றது. கட்டைகள் சென்று பாறைத் திட்டில் அடிக்கடி மோதின. ஆனால், கட்டுமரம் திட்டின்மீது ஏற முடியவில்லை. இதற்குள் அது பின்னால் இழுக்கப்பட்டது. நண்பர்களைப் பார்த்தேன். ஒருவருக்கும் இப்போது சிரிக்கத் தோன்றவில்லை. மூங்கிற் குடிசையின் பின்னிருந்து ஓர் அமைதியான குரல் 'நிலைமை மோசமாய்த் தான் இருக்கிறது,' என்றது.

அப்போது நானே தைரியம் குறைந்த நிலையில்தான் இருந்தேன். பாய்மரப் பகுதி வலதுபுறமாக மேன்மேலும் சாய்ந்தது. கட்டுமரத்துக்கு வெளிப்புறத்தில் தொங்கிக்-கொண்டிருந்த ஒரு கயிற்றை அப்போது நான் பிடித்துக்-கொண்டிருந்தேன். அடுத்த அலையும் வந்தது, மோதியது, சென்றது. அதன்பின் என் உடல் சக்தி முழுதையும் இழந்து மிகக் களைப்புற்றிருந்தது. அலை பின்வாங்கியதும், அதனடியில் கரடுமுரடாயிருந்த சிவப்புத் தரை முதன் முறையாக எனக்குப் புலனாயிற்று. டார்ஸ்டைன் பாய்-மரத்திலிருந்து தொங்கிய கயிற்றின் நுனியைப் பற்றிக்-கொண்டு பவளப் பாறைத் தரையில் குனிந்து நின்று கொண்டிருந்தான். பின்புறம் நின்று கொண்டிருந்த நுட் கட்டுமரத்திலிருந்து தாவ விழைந்தான். நாம் பால்ஸா கட்டைகளை விட்டு அகன்றுவிடக் கூடாது என்று நான் உரத்த குரலில் கத்தினேன். நீரின் வேகத்தினால் கரையில் சிறிது உயரத்தில் தள்ளப்பட்டிருந்த டார்ஸ்டைனும் கட்டு-மரத்தின்மீது தாவிக் கொண்டான். மேலும் இரண்டு மூன்று அலைகள் ஒன்றுக்கொன்று குறைந்த வேகத்துடன் வந்து

மோதின. அப்பொழுது என்ன நடந்தது என்பது எனக்கு ஞாபகமில்லே. நீர் நுரைத்தெழுந்து கட்டுமரத்தின் உள்ளும் புறமும் பொங்கி வழிந்ததென்றுதான் புலனுயிற்று.

இதற்குள் சிறிது சிறிதாக அலேகள் கட்டுமரத்தைப் பாறையின் மீது ஏற்றிக்கொண்டேயிருந்தன. தரை மெல்ல மெல்ல உயர்ந்து கொண்டே வந்தது. சிறிது நேரத்தில் அலே நுரைப்புப் பெரிதும் குறைந்தது. மெல்ல கட்டுமரத்தின்மீது ஏறிக்கொண்டேன். நாங்கள் அனேவரும் கட்டு மரத்தின் பின்பகுதியை அடைவதில் முனேந்தோம். அதே சமயத்தில் நுட் ஒரு தரம் குனிந்து, கட்டுமரத்தின் பின்புறத்திலிருந்து பாறைகளின்மீது பாய்ந்தான். அலே பின்னிட்டபோது அவன் மேலும் நகர்ந்து கொண்டே சென்று சுமார் 30 கெஜ தொலேவில் கரையின் மேல் ஆபத்தில்லாமல் நின்ருன். வேகமான அலேகள் அவனிருந்த இடம்வரை எட்டவில்லே. அதன் பிறகு சிதைந்து விட்ட மூங்கிற் குடிசைக்குள்ளிருந்து எரிக் ஊர்ந்துகொண்டே வெளி வந்தான். அவன் செய்ததுபோல் நாங்கள் எல்லோருமே செய்திருந்தால் அவ்வளவு தொல்லே இருந்திராது. மூங்கிற் குடிசை முழுவதும் பிய்ந்து விடவில்லே. மூடியிருந்த முரட்டுத் துணிக்குள்ளேயே குடிசை தட்டையாக அழுத்தப்பட்டுக்கிடந்தது. எரிக் அமைதியாக அதற்குள்ளிருந்த சாமான்களுக்கு இடையே படுத்துக்கொண்டிருந்தான்.

இடி முழக்கத்துடன் அலேகள் மோத மோத, குடிசையின் மூங்கிற் சுவர்கள் சிறிது சிறிதாகக் கீழ்ப்புறம் சரிந்தன. பாய்மரம் சாய்ந்து விழுந்தபோது பெங்க்டுக்குச் சிறிதளவு அதிர்ச்சி ஏற்பட்டது. ஆனல், அவன் எரிக்கைப் போலவே மெதுவாகச் சரிந்துவிட்ட குடிசைக்கு அடியில் புகுந்து கொண்டான். நீர் எவ்வளவு வேகமாய் அடித்த போதிலும், மூங்கிற் சுவர்களேக் கட்டியிருந்த கணக்கற்ற கயிற்று முடிச்சுகள் அவிழ்ந்து விடாமல் கடைசிவரை பற்றிக் கொண்டிருந்தன. இதை நாங்கள் உணர்ந்திருந்தால் நாங்கள் அனேவருமே மூங்கிற் குடிசைக்கு அடியில் பதுங்கிக் கொண்டிருப்போம். இப்போது, பின்புறமிருந்த கட்டைகளின்மீது எரிக் தயாராக நின்றுகொண்டான். முன் நோக்கி வந்த அலே பின்னிட்டதும் அவன் கரைமீது குதித்து விட்டான். அடுத்தபடி ஹெர்மனின் முறை வந்தது. பிறகு

பெங்க்டும் கரை சேர்ந்தான். ஒவ்வோர் அலை வந்தபோதும் கட்டுமரம் கரையின்மீது மேலும் சிறிதளவு ஏறியது. அதன் பிறகு டார்ஸ்டைனின் முறை வந்தது. கடைசியாக நான் கரையில் குதித்தேன். இதற்குள் கட்டுமரம் கரையின்மீது வெகுதூரம் முன்னேறிச் சென்று விட்டபடியால், இனி அது எப்படியாவது போகட்டும் என்று விட்டுவிடக் காரணமில்லை. ஆகவே, அதன் மீதிருந்த பொருள்களை முடிந்தவரை கரைக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும் முயற்சியில் யாவரும் ஈடுபட்டோம்.

பவளப் பாறையில் கடலலைகள் வந்துமோதும். செங்குத்தான பகுதிக்குச் சுமார் 20 கெஜ தூரத்தில் இப்போது நாங்கள் இருந்தோம். பாறை மிக உயரமாக இருந்தபடியால், மிகப் பெரிய அலைகள் மட்டுமே உடைந்து நாங்கள் நின்ற இடம் வரை நீரை வாரி இறைத்தன. அலைகள் ஒன்றன் பின் ஒன்றாக ஓயாமல் வந்துகொண்டிருந்தன. அலை உடைந்து இறைக்கப்பட்ட நீர் சில சமயங்களில் எங்களைத் தாண்டிச் சென்று, தீவு வளையத்தின் நடுவில் இருந்த அமைதியான நீர்த்தேக்கத்துடன் கலந்தது. இந்நீர்த் தேக்கத்தில் கணக்கற்ற மீன்களைக் கண்டோம். மேலும், இது பவளப் பூச்சியின் தனி உலகம். கற்பனைக்கும் எட்டாத பல்வேறு அழகான உருவங்களிலும் வண்ணங்களிலும் பவளம் மண்டிக் கிடந்தது.

பாறையின்மீது நெடுந்தூரத்தில் ரப்பர்ப் படகு அசைந்து கொண்டு நீர் நிரம்பிக் கிடந்தது. அதைக் காலி செய்து இழுத்துக் கொண்டு வந்தோம். ரேடியோ கருவி, உணவுப் பொருள்கள், குடிநீர்க் குப்பிகள் முதலிய முக்கியமான பொருள்களைக் கட்டுமரத்திலிருந்து எடுத்து, படகில் நிரப்பிக் கொண்டோம். பிறகு படகை இழுத்துச் சென்று, பொருள்களை யெல்லாம் எடுத்து, தீவின் நடுவில் அமைந்திருந்த ஒரு பெரிய கல்லின்மேல் குவியலாக வைத்தோம். ஏனெனில், மறுபடியும் நீரோட்டங்கள் சுழித்து விளையாடத்தொடங்கினால் கடல் என்ன செய்யும் என்று ஒருவருக்கும் தெரியாதல்லவா ?

பவளப் பாறையின் உட்பகுதியில் ஆழம் இல்லாத இடத்தில் பகலொளியில் பளபளப்பான ஏதோ ஒன்று

தென்பட்டது. அருகில் மெல்லச் சென்று பார்த்தபோது ஆச்சரியம் அடைந்தோம். இரண்டு காலியான தகர டப்பி-கள் மிதந்தன. இதை நாங்கள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. டப்பிகள் புத்தம் புதியவையாய் இருந்தன. அவற்றின்மீது ‘பைன்-ஆப்பிள்’ என்று பொறிக்கப்பட்டிருந்த மாதிரியை-யும், அந்த டப்பியின் அளவையும் பார்த்தபோது அது எங்களுடையது என்று தெரிய வந்தது. நாங்கள் கட்டு-மரத்தில் பெற்ற கடைசிச் சாப்பாட்டின்பின் தூக்கிக் கடலில் எறியப்பட்டவையே அவை. நாங்களும் அவற்-றைத் தொடர்ந்து வந்து இப்போது நெருங்கியிருக்கிறோம்.

கூரிய வலிய பவளப்பாறைகளின்மீது நின்ற நாங்கள் மெல்ல மெல்ல நகர்ந்தபோது, சில சமயங்களில் கணுக்-கால் ஆழத்திலும், வேறு சமயங்களில் மார்பளவு ஆழத்தி-லும் நகர வேண்டியதாயிற்று. பவளத் தரை மேடும் பள்ளமு-மாக இருந்தது. கடல் சீவிகளின் செறிவினால், பவளப்-பாறை கற்களினால் ஆகிய ஒரு தோட்டத்தை ஒத்திருந்-தது; சிவப்பு, பச்சை, மஞ்சள், வெள்ளை என்னும் பல நிறங்களில் பலவிதத் தாவர இனங்களின் சூழ்வைப் போன்று தோற்றம் அளித்தது. சிறிது ஆழமாக இருந்த இடங்களில், தெளிந்த நீரில், சுமார் நான்கடி நீளமுள்ள சிறிய சுரு மீன்கள் எங்களை நோக்கி நீந்தி வந்தன. ஆனால், நீரைச் சற்று கலக்கியதும் அவை ஓடி மறைந்துபோயின.

நாங்கள் இறங்கிய இடத்தில் சிறிய நீர்க் குட்டைகளும், பவளப் பாறைப் பகுதிகளும் தெரிந்தன. சிறிது தூரத்தில் அமைதியான நீல நிற நீர்த்தேக்கம் காணப்பட்டது. கடல் நீர் பின்னடைந்து கொண்டிருந்தது. புதுப் புதுப் பாறைப் பகுதிகள் தெரிய ஆரம்பித்தன. மேலும், தாமதித்தால் நீரின் போக்கு எவ்வாறு திரும்பும் என்று ஊகிக்க முடியவில்லை. ஆகவே, நாங்கள் அவ்விடம் விட்டுப் புறப்பட வேண்டிய-தாயிற்று. வடக்குத் தெற்காகப் பாதிநீரில் மூழ்கிய கோட்டை மதிற்சுவரைப் போன்று தோற்றமளித்தது பாறைத்-திட்டு. தென்கோடியில் தென்னை மரங்கள் நிறைந்த ஒரு நீண்ட தீவும், எங்களுக்கு வடபுறமாகச் சுமார் 600 அல்லது 700 கெஜ தூரத்தில் அதே போன்ற, ஆனால் உருவில் சிறிய, தீவு ஒன்றும் காணப்பட்டன. அதன் தென்னைமர உச்சிகள் மிக உயரக் கிளம்பி இருந்தன. வெள்ளை மணல் பரவிய,

கடற்கரையுடன் கூடிய அத்தீவு, மலர்கள் அடைக்கப்பட்ட ஒரு பெரிய கூடை போன்று தோன்றியது. பொதுவாக, சுவர்க்கமே கீழிறங்கி வந்ததோ என்று கண்டோரை வியப்பில் ஆழ்த்தியது.

இத் தீவை அடைய நாங்கள் தீர்மானித்தோம். ஹெர்மன் என்னருகில் நின்று ஒன்றும் பேசாமல் கைகளை நீட்டிக்கொண்டு சிரித்தான். அவன் முகத்தில் புத்தொளியைக் கண்டேன். கடல் அலைகளின் தூவானம் தெறிக்கக் கோன்டிகி தொலைவில் கிடந்தது. உடைந்து போயிருந்தாலும், அதன் கம்பீரம் சிறிதும் குறையவில்லை. தளத்தில் இருந்த பொருள்கள் யாவும் நொறுங்கிப் போயிருந்தன. ஆனல் பால்ஸா கட்டைகள் மட்டும் நல்ல நிலையில் இருந்தன. அவை தாம் எங்களுக்கு உயிர்ப்பிச்சை அளித்தவை. நாங்கள் கடலில் இழந்த பொருள்கள் மிகச் சிலவே. அதிலும், குடிசைக்குள் வைக்கப்பட்டிருந்த பொருள் எதையும் கடல் கொள்ளவில்லை. அவை இப்போது திட்டுக்கு உள்ளே இருந்த பெரிய கல்லின்மீது வைக்கப்பட்டிருந்தன.

கட்டுமரத்தை விட்டு இறங்கிய கணத்திலிருந்து வழிகாட்டி மீன்களைப் பார்க்கும் வாய்ப்பை நான் இழந்து விட்டேன். வழி காட்டி மீன்களோ, டால்பின்களோ இப்போது காணப்படவில்லை. இனம் தெரியாத புதுவகை மீன்கள் கட்டைகளின் இடுக்குகளின் வழியே வெளியேறுவதும் உட்புகுவதுமாய் இருந்தன. கட்டுமரம் உட்பட நாங்கள் புது உலகத்திற்கு வந்து சேர்ந்தோம். கட்டுமரத்தினுள் கடைசி முறையாகப் பார்த்தேன். ஓர் அமுூந்திப்போன கூடையில் ஒரு தென்னம்பிள்ளை முளைத்திருந்தது. அதை எடுத்துக் கொண்டு நான் தீவை நோக்கிச் சென்றேன். எனக்கு முன்பாக நுட் சென்று கொண்டிருந்தான். அவன் கையில் கோன்டிகியின் மாதிரி யுருவம் ஒன்று இருந்தது. இன்னும் சிறிது நேரத்தில் பெங்க்டைப் பார்த்தேன். அவன் முகத்திலிருந்து கடல்நீர் வழிந்து கொண்டிருந்தது. குனிந்த வண்ணம் ஒரு பெட்டியை அவன் தள்ளிச் சென்ருன். எங்களைக் கண்டதும் பெருமிதத்துடன் அதைத் திறந்து காண்பித்தான். அப்பெட்டிக்குள் ப்ரைமஸ் அடுப்பும், சமையற் பாத்திரங்களும் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன.

அழகான அத்தீவை நோக்கி நாங்கள் சென்றதை ஒருக்காலும் மறக்க முடியாது. கடற்கரையை அடைந்ததும் காலணிகளை நீக்கி விட்டு, சூடான மணலில் கால் விரல்களை அழுத்தி நடந்தேன். ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும்போதும், ஒரு புத்துணர்ச்சியும் இன்பமும் கண்டேன். தென்னந்தோப்பில் நுழைந்து தீவின் நடுப்பகுதியை நோக்கிச் சென்றேன். பசுமையான தேங்காய்களும், புதர்ச் செறிவுகளும், வெள்ளைப் பூக்களுமாக அத்தீவு என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. எங்களுக்குமேல் வானத்தில் இரண்டு வெண்ணிறப்பறவைகள் பறந்து சென்றன. சிறிய பல்லிகளையும், சிவந்த நண்டு வகைகளையும், நத்தைகளையும் ஆங்காங்கு கண்டேன்.

நான் முழந்தாள் ஊன்றி, மணலில் என் கைகளைச் செருகிக் கொண்டு அமர்ந்தேன். பயணம் முடிந்தது. நாங்கள் எல்லோரும் உயிருடன் இருக்கிறோம். மக்கள் குடியேறாத ஒரு சிறு தென்கடற் தீவில் வந்து சேர்ந்திருக்கிறோம். டார்ஸ்டைன் மணலில் மல்லாந்து படுத்துக்கொண்டு தென்னை மரங்களையும் பறவைகளையும் பார்த்துக் கொண்டிருக்கிறான். விரைவில் நாங்களும் அவ்வாறே செய்யத் தொடங்குகிறோம். ஹெர்மன் எப்போதுமே சுறுசுறுப்பானவன்; ஒரு மரத்தில் ஏறி ஒரு தேங்காய்க் குலையை வெட்டிப் போடுகிறான். தேங்காய்களை மேற்புறம் சீவி, உள்ளிருந்த குளிர்ந்த இனிய நீரை மனமாரப் பருகுகிறோம். உலகத்திலேயே இதற்கு ஈடான பானம் இல்லை என்று தோன்றுகிறது. கடலலைகளில் சிக்கிப் பாறைத் திட்டில் வந்து மோதியபோது சொல்லொணாத் துயரத்தில் ஆழ்ந்த எங்களுக்கு இப்போது விண்ணுலகில் புகுந்து விட்டது போன்றதோர் இன்பவுணர்ச்சி மேலிடுகிறது. இயற்கையின் எழிலையும் வெற்றியின் விளைவையும் துய்த்துத் துய்த்து இன்பங் காண்கிறோம்.





தென் அமெரிக்காவில் உள்ள பெரு என்ற நாட்டைச் சேர்ந்தவர் இங்கா என்னும் சாதியார். இவர்கள் 1500 ஆண்டுகட்கு முன்னர் அங்கிருந்த அமெரிக்க இந்தியரை விரட்டிவிட்டு, அந்நாட்டை ஆக்கிரமித்தனர். துரத்தப்பட்ட இந்தியர்கள் தம் தலைவனுடன் கட்டுமரங்களில் ஏறிக்கொண்டு பசிபிக் கடலுக்குள் மறைந்துவிட்டதாகச் செய்தி உண்டு. அவ்வாறு சென்ற அந்தத் தலைவனின் பெயர் கோன்-டிகி. கோன்-டிகி என்றால் சூரிய புத்திரன் எனப் பொருள்படும்.



கோன்-டிகி: இப்புத்தகத்தின் ஆசிரியர் தார் ஹெயர்டால் ஆவர். இவர் நார்வே நாட்டைச் சேர்ந்தவர்; புதுமை காண்பதில் புகழ் பெற்றவர்; இயற்கை சாத்திர வல்லுநர்; மனித நாகரிகங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் வெகுவாக ஈடுபட்டவர்; தென் அமெரிக்காவில் முன்னொரு காலத்தில் வாழ்ந்துவந்த பழங்குடிகளுக்கும், பசிபிக் கடலின் நடுவே இருந்த தென்கடல் தீவுகளில் வசித்த மக்களுக்கும் நாகரிகத்தில் நெருங்கிய தொடர்பு உண்டு என்று முதன் முதல் நிரூபித்துக் காட்டியவர்.

தென்மொழிகள் புத்தக டிரஸ்டு ஆதரவில் பதிப்பிக்கப்பட்டது.